# இஸ்லாம் குறித்த கேள்வி பதில்

பாதின் ஸப்ரி

முதலாம் பதிப்பு
ஹிஜ்ரி :1442- கி பி 2021

# தொகுப்பாளர் உரை/நூலாசிரியர் உரை

இந்த புத்தகம் இஸ்லாம் மார்க்கம் பற்றிய பொதுவான கேள்விகளுக்கு பதிலளிப்பதன் மூலம், இம்மாபெரும் மார்க்கத்தை மக்களுக்கு அறிமுகப்படுத்துவதையும், காலவோட்டத்தில் பல்வேறுபட்ட நாகரிகங்கள் மற்றும் மக்களை உள்வாங்கி, சமகால நிகழ்வுகளுடனும், முன்னேற்றங்களுடன் ஒன்றித்துத் செல்வதில் அதன் தனித்துவம், வேறுபாடு மற்றும் நெகிழ்வுத்தன்மை ஆகிய விடயங்களைக் குறித்துக்காட்டுவதையும், இம்மாபெரும் மார்க்கத்தின் முகவரியை கொச்சைபடுத்தி சிதைக்கும் பல முயற்சிகள் இருக்கும் நிலையில் இம்மார்க்கத்தின் நீடித்து நிலைக்கும் திறனை எடுத்துக் காட்டுவதையும், இம்மார்க்கத்தை பயங்கரவாதம் என வர்ணித்து இதற்கெதிராக மக்களை தூண்டும் பயங்கரமான எதிர்மறை பிரச்சாரத்தை எதிர்கொண்டு வெற்றி வாகை சூடும் திறன் இம்மார்க்கத்திற்கு உண்டு என்பதைத் தெளிவு படுத்துவதையும் இந்நூல் இலக்காகக் கொள்கின்றது.

ஆகவே, இந்நூல் சத்தியத்தை தேடிக்கொண்டிருக்கும் ஆய்வாளர்களுக்கும், தெளிவான புத்திகூர்மையுடையோருக்கும், திறந்த மனம் கொண்டவர்களுக்கும் ஒளி விளக்காக அமைய வேண்டும் எனவும், இஸ்லாம் மார்க்கம் பற்றி அறிந்து கொள்ள ஆவல் கொள்ளும் அனைவருக்குமான சமாதான தூதுச் செய்தியாகவும் அமைய வேண்டும் எனவும் எல்லாம் வல்ல இறைவனை நான் பிரார்த்திக்கிறேன்.

# படைப்பாளனை விசுவாசித்தல்

### *ஒரு மனிதனுக்கு கடவுள் நம்பிக்கை அவசியமா? தேவையா?*

ஒரு மனிதரைப் பொருத்தவரை ஏதோ ஒரு கடவுளை அவன் ஏற்றாக வேண்டும். அது உண்மைக் கடவுளாகவோ அல்லது (பொய்யான) கடவுளாகக்க கூட இருக்கலாம். அதனை கடவுள் என்றோ அல்லது வேறு ஏதாவது பெயர் கொண்டோ அழைக்கலாம், அதாவது அவர்கள் ஏற்றுக்கொண்ட அக்கடவுள் சிலவேளை ஒரு மரமாக, வானத்தில் உள்ள ஒரு நட்சத்திரமாக, ஒரு பெண்ணாக, தனக்கு தொழிலொன்றை அளித்த தலைவராக, அறிவியல் கோட்பாடாக, ஏன் தனது மனோ இச்சையாகக் கூட இருக்கலாம். ஆனால்; மனிதன் என்ற வகையில் ஏதோ ஒன்றை விசுவாசித்து அதனை ஏற்றுப்பின்பற்றி, புனிதப்படுத்தி வாழ்க்கைப் பயணத்தின் எல்லா நிலைகளிலும் அதனிடம் சரணடைந்து அதற்காகவே சில வேளை இன்னுயிரையும் மாய்த்துக் கொள்ளும் ஆழமான நம்பிக்கை நிலை இருக்க வேண்டும். இவ்வாறு ஒன்றை நம்பி தன்னை மாய்த்துக்கொள்ளும் நிலையையே நாம் வணக்கவழிபாடு என்ற பெயரால் அழைக்கிறோம். எனவே உண்மைக்கடவுளை -இறைவனை- வணங்கி வழிபடுதல் ஒரு மனிதன் மற்றவர்களுக்கு அல்லது சமூகத்திற்கு அடிமைப்படுவதிலிருந்து விடுதலையை பெற்றுத் தருகிறது.

### *ஆகவே, உண்மையான கடவுள் யார்?*

உண்மையான கடவுள் படைப்பாளர் ஆவார். ஆக, உண்மையான கடவுள் அல்லாது பிறிதொன்றை வழிபடுவது அவர்களும் கடவுள்கள் என்று வாதிடுவதை பொதிந்திருக்கிறது. மேலும் கடவுள் ஒரு படைப்பாளராக இருக்க வேண்டும். கடவுள் படைப்பாளர் என்பதற்கான சான்று, அவர் பிரபஞ்சத்தில் படைத்திருப்பதை பார்ப்பதன் மூலம்; அல்லது தான் படைப்பாளர்-சிருஷ்டி கர்த்தா என நிரூபணமான கடவுளின் இறைச்செய்தி மூலம் இருக்கும். அவ்வாறு இவர்கள் கூறும் கடவுள் பற்றிய இக்கூற்றுக்கு கற்புலனாகும் இந்த பிரபஞ்சத்தின் உருவாக்கத்தில் இருந்தோ அல்லது படைத்த கடவுளின் வார்த்தைகளில் இருந்தோ ஆதாரம் இல்லை என்றால் வணங்கப்படும் இந்தக் கடவுள்கள்

யாவும் பொய்யானவையே என்பதில் மாற்றுக் கருத்தில்லை. ஒரு மனிதன் தான் எதிர்நோக்கும் கஷ்டம் மற்றும் துன்பத்தின் போது ஒரு யதார்த்தத்தைக் நோக்கி நகர்வதை நாம் அவதானிக்கிறோம். அதுதான், அவன் பல கடவுள்களை ஏற்று வணங்கினும் ஒரு கடவுளை மாத்திரமே நாடிச்சென்று தனது துன்பத்தை முறையிடுவதை எம்மால் அவதானிக்க முடிகிறது. பிரபஞ்சத்தின் வெளிப்பாடுகள் மற்றும் நிகழ்வுகளை, தோற்றப்பாடுகளை அறிந்து அடையாளம் காண்பதன் மூலமும், இவ்வுலகின் விவகாரங்களில் உள்ள ஒத்த தன்மையினூடாகவும் பிரபஞ்சத்தில் காணப்படும் ஒரே மாதிரியான ஒழுங்கையும் சடப்பொருளின் ஒத்ததன்மையையும் அறிவியல் விஞ்ஞானம் நிரூபித்துள்ளது. (ஆகவே இப்பிரபஞ்ஞத்தின் இயக்கம் ஒருவனின் வல்லமையினூடாக இயக்கப்படும் பேருண்மையை இதனூடாக அறிந்து கொள்கிறோம்.)

ஒரு குடும்பத்தை உதாரணத்திற்கு எடுத்துக்கொள்வோம். அதாவது குடும்பம் சம்பந்தமாக ஒரு தீர்க்கமான முடிவை எய்துகொள்வதில் தந்தைக்கும் தாய்க்கும்; (கணவன் மனைவிக்கு மத்தியில்) கருத்து வேறுபாடு, சிக்கல் ஏற்பட்டால், அவர்களின் கருத்து வேறுபாட்டால் குழந்தைகள் பாதிக்கப்பட்டு, அவர்களின் எதிர்காலம் நாசமாகி விடும் என்பதை சற்று சிந்திப்போமேயானால், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கடவுள்கள் இப்பிரபஞ்சத்தை நிர்வகிப்பதினால் ஏற்படும் ^+ர்குழைவு எப்படி இருக்கும்?!

அல்லாஹ் கூறுகிறான் :
“வானங்கள் மற்றும் பூமியில் பல கடவுள்கள் இருந்தால் அவை நாசமாகிவிடும். அர்ஷின் இரட்சகனான அல்லாஹ் அவர்கள் வர்ணிப்பதைவிட்டும் மிகவும் தூய்மையானவன்”. (அல்அன்பியா : 22). ஆகவே இந்த அடிப்படையில்,

படைப்பாளனின் இருப்பானது காலம், இடம், சக்தி ஆகியவற்றின் இருப்புக்கு முன்னரே இருந்திருக்க வேண்டும் என்பது அவசியமாகிறது. இவ்வாதாரத்தின் அடிப்படையில் ஒரு போதும் இப்பிரபஞ்ச உருவாக்கத்தின் காரணகர்த்தாவாக இயற்கை இருக்க முடியாது என்பது புலனாகிறது. காரணம் இயற்கை என்பதே காலம், இடம், சக்தி என்ற அடிப்படை கூறுகளால் ஆன ஒன்றாகும். ஆகையால்; பிரபஞ்ச உருவாக்கத்திற்கு குறிப்பிடப்படும் காரணமானது

இயற்கையின் இருப்புக்கு முன் இருந்திருக்க வேண்டும். (இந்த வகையில் படைப்பாளனின் (சிருஷ்டி கர்த்தாவின்) இலட்சணங்கள் பின்வருமாறு இருக்க வேண்டும்! படைப்பாளன் என்பவன் எல்லாம் வல்லவராக-அனைத்தையும் மிகைத்தவராக இருக்க வேண்டும், அதாவது எல்லாவற்றின் மீதும் அதிகாரம், ஆற்றல் கொண்டவராக இருக்க வேண்டும்.

படைப்பாளன் என்பவன் படைப்பை ஆரம்பிப்பதற்கான கட்டளையை பிரப்பிப்பதற்கான முழுமையான அதிகாரகாத்தைப் பெற்றவராக இருக்க வேண்டும் . அவர் எல்லா விடயங்களை பற்றிய நிறைவான அறிவை பெற்றிருக்க வேண்டும், அதாவது எல்லாவற்றையும் பற்றிய முழுமையான அறிவைக் கொண்டிருக்க வேண்டும்.

அவர் படைத்தல் விவகாரத்தில் அவருடன் இன்னொரு காரணகர்த்தாவின் தேவை இருக்காத அளவிற்கு இவ்விடயத்தில் தனித்து செயற்படும் ஒருவனாகவும், ஏக வல்லமை படைத்தவனாகவும் இருத்தல் வேண்டும். அத்துடன் அவர் தனது படைப்பினங்களின் தோற்றத்தில் பிரதிபலிக்க தேவையற்றவராக இருத்தல் வேண்டும். மேலும் அவருக்கு எந்த நிலையிலும் மனைவி அல்லது குழந்தை ஆகியோரின் தேவை அற்றவராக இருப்பதுடன், பரிபூரணமான பண்புகள் அனைத்தையும் பெற்றவராக இருத்தல் வேண்டும். அவர் எக் காரியத்தைச் செய்தாலும் அதன் நுட்பம் துலங்குமளவுக்கு ஞானம் நிறைந்தவராக இருக்க வேண்டும்.

மேலும் அவர் நீதியாளராக இருக்க வேண்டும், வெகுமதியும் தண்டனை வழங்குவதும், மனிதர்களுடன் தொடர்புடன் இருப்பதும் அவரின் நீதிக்கு அடையாளமாகும். ஏனென்றால் மனிதர்களைப் படைத்துவிட்டு கைவிட்டுவிடும் சிருஷ்டியாளன் ஒரு போதும் கடவுளாக இருப்பதற்கு தகுதியற்றவராவார். இதற்காகவே அவர் தனது கொள்கையை மனிதர்களுக்கு எத்திவைத்து சரியான பாதையை தெளிவுபடுத்துவதற்காக தூதர்களை அனுப்பி வைக்கிறார். யார் நபிமார்கள் காட்டிய வழியில் பயணிக்கிறார்களோ அவர்கள் வெகுமதியை பெற்றுக் கொள்ளத் தகுதியானவர்கள். இப்பாதையை விட்டு விலகிச் சென்றோர் தன்டணைக்கு உரியவர்கள்.

## *படைப்பாளனின் பண்புகள் எவை? ஏன் அவனுக்கு ™அல்லாஹ்› என்ற பெயர் வழங்கப்படுகிறது?*

மத்திய கிழக்கில் வாழும் யூதர்கள் கிறிஸ்தவர்கள் முஸ்லிம்கள் யாவரும் அல்லாஹ் என்ற வார்த்தையை கடவுளுக்குப் பயண்படுத்துகின்றனர். இது 'உண்மையான ஏக இறைவனைக் குறிக்கிறது. அல்லாஹ்வே மூஸா மற்றும் ஈஸாவின் (அவர்கள் இருவருக்கும் சாந்தி உண்டாவதாக) கடவுளாவான். அல்லாஹ் தனது திருமறை அல் குர்ஆனில் 'அல்லாஹ்' என்ற பெயராலும் மற்றும் வேறு (அழகிய) பெயர்கள் பண்புகளாலும் தன்னை அறிமுகப்படுத்தியுள்ளான். பைபிளின் பழைய ஏற்பாட்டில் பழைய பிரதியில் 89 தடவைகள் அல்லாஹ் என்ற சொல் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ள அல்லாஹ்வின் பண்புகளுள் படைப்பாளன் ' அல் காலிக்' என்பதும் ஒன்றாகும். இது குறித்து அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான்.

"அந்த அல்லாஹ்தான் படைப்பவன். (அவனே) படைப்புகளை ஒழுங்கு செய்பவன்; (அவனே) படைப்புகளின் உருவத்தையும் அமைப்பவன். அவனுக்கு அழகான பல திருப்பெயர்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அனைத்தும் அவனையே துதி செய்கின்றன. அவனே (அனைவரையும்) மிகைத்தவன்; மிக ஞானமுடையவன்". (ஹஷ்ர் : 24). (அல் ஹஷ்ர் : 24)

அவனே இப்பிரபஞ்சத்தின் ஆதியும் அந்தமுமாவான். அதாவது அவனுக்கு முன் எதுவும் இருக்கவில்லை, அவனுக்குப் பின் எதுவும் கிடையாது. இது குறித்து அல்லாஹ் தனது வேதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறான். "அவனே முதலாமவனும், இறுதியானவனும், மேலானவனும், அந்தரங்கமானவனுமாவான். அவன் யாவற்றையும் நன்கறிந்தவனுமாவான்." (அல் ஹதீத் : 3).

அவன் திட்டமிட்டு நிர்வகிப்பவனாவான் : "வானத்திலிருந்து பூமிவரை காரியங்களை அவனே நிர்வகிக்கிறான்". (ஸூறதுஸ் ஸஜ்தா : 5). அவன் யாவற்றையும் அறிந்தவனும் பேராற்றலுடையவுமாவான் "அவன் நன்கறிந்தவனும்

பேராற்றலுமுடையவனாக இருக்கிறான்". (பாதிர் : 44).

அவன் தனது எந்த படைப்பின் தோற்றத்திலும் பிரதிபலிக்கமாட்டான் "அவனைப்போல் எதுவும் கிடையாது அவன் யாவற்றையும் செவியேற்பவன் பார்ப்பவன்". (ஷூரா : 11). அவனுக்கு எந்தப்பங்காளனும் கிடையாது. அதே போல் அவனுக்கு எந்தப்பிள்ளையும் கிடையாது "(நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக: அல்லாஹ் ஒருவன்தான். அல்லாஹ் எவ்விதத் தேவையுமற்றவன். அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவருக்கும்) பிறக்கவுமில்லை. அவனுக்கு நிகராக எதுவுமில்லை". (இஃலாஸ் : 1- 4) அவன் ஞானமிக்கவனாவான் "அல்லாஹ் யாவற்றியும் அறிந்தவனாகவும் ஞானமிக்கோனாகவும் இருக்கிறான்". (நிஸா : 111). அவன் நீதியாளனவான் "உமது இரட்சகன் எவருக்கும் அநியாயம் இழைக்கமாட்டான்". (கஹ்ப் : 49).

### *படைப்பாளனைப் படைத்தவன் யார்?*

இக்கேள்வியானது "படைப்பாளன் படைப்பினங்களுக்கு ஒப்பானவன்" என்ற தவறான கருதுகோளின் -யூகத்தின்- விளைவாக எழுந்த கேள்வியாகும். இக்கருதுகோளானது பகுத்தறிவு ரீதியாகவும், தத்துவ ரீதியாகவும் நிராகரிக்கப்பட்டதாகும். அதனை பின்வருமாறு தெளிவுபடுத்திட முடியும். ஒரு மனிதனிடம் சிவப்பு நிறத்தின் மனம் என்ன என ஒரு எளிய வினாவை தொடுத்தால் அவனால் பதிலளிக்க முடியுமா? நிச்சயமாக, இந்த கேள்விக்கு எந்த பதிலும் இல்லை, ஏனென்றால் சிவப்பு நிறமானது நுகரப்படும் வாசனை பொருட்களில் ஒன்றாக வகைப்படுத்தப்படவில்லை. உதாரணத்திற்கு தொலைக்காட்சி அல்லது குளிர்சாதனப் பெட்டி போன்றபொருளைத் தயாரிக்கும் நிறுவனம், குறித்த சாதனத்தைப் பயன்படுத்தும் முறையை விளக்கிட அறிவுறுத்தல்கள், ஒழுங்குகள் வரையரையரைகள் அடங்கிய ஒரு கையேட்டை அத்துடன் இணைக்கிறது. உற்பத்தி செய்யும் குறித்த நிறுவனம் இந்தச் சட்டங்களுக்கு உட்பட்டிருக்காத நிலையில், வேண்டப்பட்ட விதத்தில் சாதனத்தில் இருந்து பயனடைய விரும்பும் நுகர்வோர் இந்த அறிவுருத்தல்களை கட்டாயம் பின்பற்றியாக வேண்டும் இல்லாவிட்டால் குறித்த சாதனத்திலிருந்து பயனை அடையமுடியாது என்பது தெளிவான விடயமாகும். மேற்குறிப்பிட்ட உதாரணங்களிலிருந்து தெரிய

வருவது ஒவ்வொரு காரணத்திற்கும் காரணகர்த்தா உள்ளார் என்பதாகும். ஆனால் கடவுளுக்கு கர்த்தா தேவையில்லை என்பதும் அவர் படைக்கப்படும் ஒரு பொருளுக்குள் உள்ளடக்கபடவும் மாட்டார் என்பதும் யதார்த்தமான விடயம் என்பது சாதாரணமாகவே புரிந்து கொள்ள முடிகிறது அல்லவா! ஆகவே கடவுளென்பவர்தான் எல்லாவற்றிற்கும் முதலாமவராகவும் அவரே அடிப்படை காரணகர்த்தாவாகவும் உள்ளார் என்பதும் புலனாகிறது. காரணக் கோட்பாடானது அல்லாஹ்வின் பிரபஞ்ச விதியாகும். என்றாலும் அல்லாஹ் நாடியதை செய்பவன் அவனுக்கே முழு வல்லமையும் பேராற்றலும் உண்டு.

### *படைப்பாளன் உள்ளான் என்பதற்கான சான்றுகள் எவை?*

படைப்பாளனை நம்புவது என்பது எந்தப் பொருட்களும் எவ்விதக்காரணமுமின்றி தோற்றம் பெற முடியாது (காரணமின்றி காரியமில்லை) என்ற அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளது. உயிரினங்களால் நிரம்பியிருக்கின்ற இம்மாபெரும் பிரபஞ்சமும் அதில் உள்ள உயிரினங்களும் கண்ணுக்குப் புலனாகா (தொட்டுணர முடியா) உணர்வைக் கொண்டுள்ளன என்பதையும் சடப்பொருளல்லாத கணிதவியல் கோட்பாட்டு விதிகளுக்கு உட்படுகின்றன என்பதைக் குறிப்பிட தேவையில்லை. வரையறுக்கப்பட்ட பொருளான பிரபஞ்சத்தின் இருப்பை விளக்குவதற்கு, நமக்கு ஒரு தனியான ஆதாரம் தேவைபடுகிறது. தற்செயல் நிகழ்வே பிரபஞ்சத்தை உருவாக்கியது என்று கூறுவதற்கு எவ்வித சாத்தியமும் கிடையாது. ஏனெனில் தற்செயல் நிகழ்வு என்பது ஒரு முதன்மைக் காரணம் அல்ல, மாறாக ஒரு இரண்டாம் நிலை முடிவாகும். அதாவது ஒரு விடயம் திடீரென நிகழ்வதற்கு அடிப்படைக் கூறுகளான (காலம், இடம், பொருள் மற்றும் ஆற்றல் ஆகியவற்றின் தேவையும்) அதற்குரிய காரணிகளும் இருப்பது அவசியமாகும். 'தற்செயல்' என்ற வார்த்தையை எதையும் விளக்குவதற்கோ பொருள்கோடல் செய்யவோ பயன்படுத்த முடியாது, ஏனெனில் அது அர்த்தமற்ற வார்த்தையாகும். உதாரணத்திற்கு, ஒரு நபர் தனது அறைக்குள் செல்கிறார் அங்கே யன்னல் கண்ணாடி உடைந்திருப்பதைக் கண்கிறார், உடனே அவர் யன்னல் கண்ணாடியை உடைத்தது யார் என்று தனது குடும்பத்தினரைக் கேட்க அதற்கு, அவர்கள் இது தானாக உடைந்து விட்டது என்று பதில் அளித்தால் அந்தப்பதில் தவறானது. ஏனென்றால் யன்னல் எப்படி உடைந்தது என்று அவர்

கேட்கவில்லை, மாறாக யன்னலை உடைத்தது யார் என்றே கேட்டார். தற்செயல் என்பது ஒரு செயலின் பண்பே தவிர அச்செயலைச்செய்தவர் அல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இதற்குரிய சரியான பதில் இவ்வாறு அமைதல் வேண்டும். அதாவது கண்ணாடியை இன்னார் உடைத்தார் என்று கூறிவிட்டு. பின்னர் அதனை உடைத்தவர் தவறி தற்செயலாக உடைத்தார் அல்லது வேண்டுமென்றே உடைத்தார் என்று தெளிவு படுத்த வேண்டும். இந்நிலை இப்பிரபஞ்சம், உயிரினங்கள் அனைதிற்க்கும் பொருந்தும்.

பிரபஞ்சத்தையும் உயிரினங்களையும் உருவாக்கியது யார்? என்று நாம் கேட்டால், அவை தற்செயலாக உருவானது என்று சிலர் பதிலளித்தால், இங்கு அந்தப் பதில் தவறானது. ஏனென்றால் இப்பிரபஞ்சம் எப்படி தோன்றியது என்று நாம் கேட்கவில்லை, மாறாக பிரபஞ்சத்தை உருவாக்கியவர் யார்? என்றே கேட்டோம். அதன்படி, தற்செயல் நிகழ்வு என்பது ஒரு கர்த்தாவையோ அல்லது பிரபஞ்சத்தின் படைப்பாளியையோ குறிக்காது என்பது வெளிப்படையாகும்

மேலும், இப்பிரபஞ்சத்தின் படைப்பாளன் இதனை -இப்பிரபஞ்சத்தை- தற்செயலாகப் படைத்தானா? அல்லது ஒரு இலக்கோடு படைத்தானா? எனும் இன்னொரு கேள்வி இங்கே எழுகிறது. உண்மையில் குறித்த செயலும் அதன் விளைவுகளுமே இதற்கான பதிலை எமக்குத் தர வேண்டும்.

மீண்டும் நாம் யன்னலின் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம், ஒரு நபர் தனது அறைக்குள் செல்கிறார், அங்கே யன்னல் கண்ணாடி உடைக்கப்பட்டிருப்பதை கண்டு தனது குடும்பத்தவர்களிடம் இதனை உடைத்தது யார்? எனக் கேட்டதற்கு அவர்கள் இன்னார் தற்செயலாக உடைத்துவிட்டார் என பதில் கூறுவார்களெனில் அப்பதில் ஏற்றுக்கொள்ளத்தக்கதும் பகுத்தறிவுரீதியானதுமாகும். ஏனெனில் கண்ணாடி உடைவது என்பது தற்செயலாக நிகழ முடியும். என்றாலும் அதே நபர் மறுநாள் அந்த அறையினுல் சென்று பார்த்த போது உடைந்த யன்னல் கண்ணாடி திருத்தப்பட்டு அதே இடத்தில் பொருத்தப்பட்டிருப்பதைக் கண்டு தனது குடும்பத்தாரிடம் இதனை திருத்தியவர் யார் என வினவ, அதற்கு அவர்கள் ஒருவர் தற்செயலாக வந்து அதனைத் திருத்தினார் எனப் பதில் கூறினால் அப்பதில் ஏற்றுக்கொள்ள முடியாததாகும். காரணம் பகுத்தறிவு ரீதியாக சாத்தியமற்ற

விடயமாகும். ஏனெனில், கண்ணாடியை திருத்துதல் ஒரு தற்செயல் நிகழ்வாக இருக்க முடியாது. மாறாக அது ஒரு ஒழுங்குமுறையிலமைந்த செயலாகும். அதற்கென்று சில வரைமுறைகள் காணப்படுகின்றன. அதாவது இத்திருத்தத்தை மேற்கொள்பவர் முதலாவதாக உடைந்து சிதைவுற்ற கண்ணாடியை அகற்றி விட்டு அதன் ஓரப்பகுதியை சுத்தம் செய்து பின் ஓர் விளிம்புகளுக்கு (சட்டத்திற்கு) ஏற்ற துள்ளியமான அளவுகளில் புதிய கண்ணாடியை வெட்டி பின் கண்ணாடியை குறித்த (விளிம்பினுள்) சட்டத்தினுள் இட்டுப் பொருத்த வேண்டும். பின் அதனை உரிய இடத்தில் இணைத்து விடல் வேண்டும்.

இந்த செயல்கள் யாவும் தற்செயலாக இடம்பெற முடியாது. மாறாக ஒரு திட்டத்துடனே நடந்துள்ளது என்பதை புரிந்துகொள்ள முடிகிறது!. பகுத்தறிவு விதி ஒன்று உண்டு. அதாவது ஒரு செயலானது தற்செயலாக இருந்தால் அது எவ்வித சட்ட ஒழுங்கிற்குள்ளும் உட்படமாட்டாது. அது ஒரு தற்செயல் நிகழ்வாகவே கொள்ளப்படும். ஆனால் ஒன்றுக்கொன்று ஒருங்கிணைந்த முறையாக ஒழுங்குபடுத்தப்பட்ட செயல், ஒரு ஒழுங்கமைப்பின் முடிவாக நடந்த செயல் ஒரு போதும் தற்செயல் நிகழ்வாக இருக்க முடியாது. மாறாக அது ஒரு திட்டமிடப்பட்ட இலக்கை மையாமக்கொண்ட ஒரு நிகழ்வாக காணப்படும். இதனடிப்படையில் இப்பிரபஞ்சத்தையும், படைப்புகளையும் சற்று அவதானித்தால் அவை நேர்த்தியான ஒழுங்கில் உருவாக்கப்பட்டுள்ளடதுடன் மிகவும் துல்லியமான விதிகளுக்குட்பட்டு இயங்கிக்கொண்டிருப்பதை எம்மால் கண்டு கொள்ளலாம். இதானல்தான் இந்த பிரபஞ்சமும் அதில் உள்ளவைகளும் தற்செயலாக தோன்றியது என கொள்வது பகுத்தறிவுரீதியாக சாத்தியமற்ற ஒன்றாகும். மாறாக, இவைகள் ஓர் உயர் நோக்கத்தோடும் திட்டத்துடனும் படைக்கப்பட்டுள்ளது என்பதுவே உண்மையாகும். ஆக இந்த வகையில் பிரபஞ்ச உருவாக்கம் பற்றிய விவகாரத்தில் தற்செயல் நிகழ்வு என்பது ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு விடயம் என்பது உறுதிப்படுத்தப்படுகிறது. [மத நம்பிக்கையின்மை (சமயமின்மை) மற்றும் நாத்திக வாதத்திற்கு எதிரான யகீன் செனலின் விமர்சனத்தை பின்வரும் இணைப்பில் பார்க்கவும். https://www.youtube.com/watch?v=HHASgETgqx]

மேலும் படைப்பாளனின் இருப்பை உறுதிப்படுத்தும் சில ஆதாரங்களை சுருக்கமாக உற்று நோக்குவோம் :

1- படைத்தல் மற்றும் உருவாக்குதல் எனும் சான்று.
அதாவது இப்பிரபஞ்சமானது இல்லாமையிலிருந்து தோன்றியது என்பது படைப்பாளனான இறைவன் ஒருவனின் இருப்பை தெளிவாக அறிவித்து நிற்கிறது. "நிச்சயமாக, வானங்கள், பூமி ஆகியவற்றின் படைப்பிலும்; இரவும், பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோருக்கு (சிந்தனையுடையோருக்கு) பல அத்தாட்சிகள் இருக்கின்றன". (ஆல இம்ரான் : 190).

2- இன்றியமையாமை.எனும் ஆதாரம்
எல்லாவற்றிற்கும் ஒரு மூலம் உண்டு என்று நாம் கூறினால், அந்த குறிப்பிட்ட மூல அம்சத்திற்கு இன்னொரு மூல அடிப்படை இருப்பது இன்றியமையாத அவசியமான விடயமாகும். இவ்வாறு ஒவ்வொரு மூல அம்சத்தினதும் சங்கிலித் தொடர் நீண்டு சென்றால், தத்துவரீதியாக ஒன்றின் ஆரம்பத்திற்கு அல்லது ஒன்றின் முடிவுக்கு சென்றடைவோம். இவ்வாறு சென்றடையும் நிலையில் எவ்வித அடிப்படையும் இல்லாத ஒரு மூலத்திற்கு சென்றடைவது அவசியமாகிறது. அதனையே நாம் மூல காரணி – அல்லது அடிப்படைக் காரணி- என்றழைக்கிறோம். இது அடிப்படை நிகழ்வு என்பதிலிருந்து வித்தியாசப்படுகிறது. எடுத்துக்காட்டாக பெருவெடிப்புக் கொள்கையானது இப்பிரபஞ்ச தோற்றத்தின் அடிப்படை நிகழ்வாகும். இந்நிகழ்வுக்கு மூல காரண கர்த்தாவாக படைப்பாளனே இருந்தான்.

3- இப்பிரபஞ்சத்தின் துல்லியமான ஒழுங்கமைப்பும், ^+ரமைப்பும் :
அதாவது இந்த பிரபஞ்சமானது மிகத்துள்ளியமாக நிர்மாணிக்கப்பட்டு ^+ரான விதிகளுக்குட்பட்டு இயங்குவது படைப்பளான் இறைவனின் இருப்புக்கான ஆதாரமாக அமைந்துள்ளது.

"அவனே ஏழு வானங்களையும் தட்டுத் தட்டாகப் படைத்தான். மகா கருணையாளனான அவனின் படைப்பில் நீ எவ்விதக் குறைபாட்டையும் காணமாட்டீர். பார்வையை மீட்டிப்பார், (அதில்) பிளவுகளை நீ காண்கிறாயா?" (அல் முல்க் : 3). "நிச்சயமாக நாம் எல்லாவற்றையும் குறிப்பிட்ட விதிமுறையின்

படியே படைத்துள்ளோம்". (அல் கமர் : 49).

4. அவதானம் எனும் சான்று

இப்பிரபஞ்சமானது மனித உருவாக்கத்திற்கு முற்றிலும் பொருத்தமாக நிர்மாணிக்கப்பட்டமை முக்கிய அம்சமாகும். இந்த ஆதாரமானது படைப்பாளன் பெற்றுள்ள அழகுப் பண்புகளையும் இறை கருணையையும் சுட்டிக்காட்டுகிறது.

"அல்லாஹ்தான் வானங்கள் மற்றும் பூமியைப் படைத்தான். அவனே வானத்திலிருந்து மழையை இறக்கி அதன் மூலம் கனிவகைகளை உங்களுக்கு உணவாக வெளிப்படுத்தினான். அவனது கட்டளைப்பிரகாரம் கடலில் செல்வதற்கு கப்பல்களை அவன் உங்களுக்கு வசப்படுத்தித் தந்தான். மேலும் அவனே உங்களுக்கு ஆறுகளையும் வசப்படுத்தித் தந்தான்". (இப்ராஹீம் :32).

5- வசப்படுத்தல் மற்றும் திட்டமிடல் எனும் சான்று.

இது இறை வல்லமை மற்றும் இறை மகத்துவம் போன்ற பண்புகளுடன் தொடர்பான விடயமாகும்.

"(மனிதர்களே!) கால் நடைகளையும் அவனே உங்களுக்காகப் படைத்தான். அவற்றில் குளிரிலிருந்து பாதுகாப்பும்,மற்றும் பல பயன்களும் இருக்கின்றன. இன்னும் அவற்றிலிருந்து நீங்கள் உண்ணவும் செய்கிறீர்கள்". நீங்கள் அவற்றை (மேய்த்து) மாலையில் ஓட்டி வரும்பொழுதும், (மேய்ச்சலுக்காக) காலையில் ஓட்டிச் செல்லும்பொழுதும் அவற்றில் உங்களுக்கு அழகுமிருக்கிறது. பெரும் கஷ்டத்துடனேயன்றி உங்களால் சென்றடைய முடியாத ஊருக்கு உங்கள் சுமைகளை அவை சுமந்து செல்கின்றன. நிச்சயமாக உங்கள் இரட்சகன் பெரும் கருணையாளன். நிகரற்ற அன்புடையவன். குதிரைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள் ஆகியவற்றை நீங்கள் அவற்றில் சவாரி செய்வதற்காகவும் இன்னும் அலங்காரமாகவும், (அவனே படைத்தான்) மேலும் நீங்கள் அறியாதவற்றையும் அவன் படைப்பான்". (அந்நஹ்ல் :5-6).

6- பிரத்தியேகத் தேர்வு எனும் சான்று.

இப்பிரபஞ்சத்தில் நாம் காணும் பொருட்கள் பல்வேறு வடிவங்களில் அமைப்புகளில் இருந்திருக்க முடியும் என்றாலும் அல்லாஹ் அவற்றில் மிகச்சிறந்த

வடிவை அமைப்பைத் தேர்வுசெய்தான்.

“நீங்கள் குடிக்கின்ற தண்ணீரைக் கவனித்தீர்களா? மேகத்திலிருந்து அதை நீங்கள் பொழிய வைக்கிறீர்களா? அல்லது நாம் பொழிய வைக்கின்றோமா? நாம் நாடியிருந்தால் அதை உவர்ப்பானதாக மாற்றியிருப்போம், எனவே நீங்கள் நன்றி செலுத்தமாட்டீர்களா?”. (அல் வாகிஆ : 68-70). “(நபியே) உமது இரட்சகன் நிழலை எவ்வாறு நீட்டுகிறான் என நீர் பார்க்கவில்லை?அவன் நாடியிருந்தால் அதனை நிலையானதாக ஆக்கியிருப்பான், பின்னர் அதன் மீது சூரியனை ஆதாரமாக நாம் ஆக்கியிருப்போம்”.(அல் புர்கான்: 45).

இப்பிரபஞ்சம் படைக்கப்பட்ட முறையையும் அதன் இருப்பையும் விளக்கும் சில சாத்தியப்பாடுகள் பற்றி அல்குர்ஆன் விவரிக்கிறது : The Divine Reality: God, Islam & The Mirage of Atheism.Hamza Andreas Tzortzi “அவர்கள் எப்பொருளுமின்றி படைக்கப்பட்டனரா? அல்லது அவர்கள் படைக்கூடியவர்களா? அல்லது வானங்களையும் பூமியையும் இவர்கள் படைத்தார்களா? மாறாக, (இவற்றை எல்லாம் படைத்தவன் அல்லாஹ்தான். அவனை) இவர்கள் நம்புவதில்லை. அல்லது உமது இரட்சகனின் பொக்கிஷக் கருவூலங்கள் அவர்களிடம் இருக்கின்றனவா? அல்லது அவற்றின் மீது அவர்களே ஆதிக்கம் செலுத்துபவர்களா?”. (அத்தூர் : 35-37).

அவர்கள் எப்பொருளுமின்றி படைக்கப்பட்டனரா? :

இது எம்மைச்சூழ காணப்படுகின்ற இயற்கை கோட்பாடுகளில் -விதிகளில் -அதிகமானவற்றுடன் முரண்படுவதை காணலாம். ஒரு சாதாரண எடுத்துக்காட்டை –உதாரணத்தை- பார்ப்போம். எகிப்தில் காணப்படும் பிரமாண்டமான பிரமிட்டுகள் குறித்து அவை இயற்கையாக அமைந்தவை என்று நாம் கூறுவோமாக இருந்தால் இப்பிரபஞ்சத்தின் தோற்றம் தற்செயலானது என்ற சாத்தியப்பாட்டை உடைத்தெரிவதற்கு இதுவொன்றே போதுமானதாகும்.

அவரகள் படைக்கின்றவர்களா?: என்ற வசனத்தின் அடியாக சுயமாகப் படைத்துக்கொள்ளல் -என்பதிலிருந்து இப்பிரபஞ்சம் தன்னைத்தானே படைக்க

முடிந்ததா?! 'படைப்பு' என்ற மரபுச் சொல்லானது அப்பொருள் இவ்வண்டத்தில் ஏற்கனவே இல்லாதிருந்து, பிறகு தோன்றியது என்பைதத்தான் சுட்டிக்காட்டுகிறது! சுயமாக படைத்தல் என்பது மெய்யியல் மற்றும் விஞ்ஞான ரீதியாக அசாத்தியமான ஒரு விடயமாகும். சுயமாக படைத்துக் கொள்ளல் என்பது, ஏலவே ஒரு பொருள் இருக்கவும் செய்தது, குறித்த நேரத்தில் அப்பொருள் இருக்கவுமில்லை என்ற முடிவைத் தரும். இது சாத்தியமற்ற விடயமாகும். எனவே, மனிதன் தன்னைப் படைத்துக்கொண்டான் என்ற கூற்றானது அவன் தன்னைப் படைத்துக்கொள்ள முன்பே அவன் இருந்துள்ளான் என்பது அர்த்தமாகி விடுகின்றது.! ஓர் உயிர் கலத்தை மாத்திரம் கொண்ட படைப்பபுகளில் சுய உருவாக்கம் சாத்தியமானது என்பதை சில குழப்பவாதிகள் உறுதிப்படுத்துகிறார்கள். இவ்வாறான ஒரு விடயத்தை விவாதத்திற்கு எடுத்து கொள்வதற்கு, அடிப்படையில் முதலாவது ஓர் உயிர் கலம் காணப்பட்டதா? என்பதை பார்க்க வேண்டும்.

அவ்வாறு இருந்ததாக இக்கூற்றை வைத்துக் கொண்டாலும் இது சுயமான ஒரு படைப்பு அல்ல மாறாக இனப்பெருக்கத்திற்கான ஒரு முறையாகவே கொள்ள வேண்டும். அதாவது உயிர் அனுவிலிருந்து தோன்றி குறிப்பிட்ட பரம்பரை அழகை அந்த உயிர் அணு பெற்றிருக்கிறது என்பதாகும். அதாவது இது (பாலினச் சேர்க்கையற்ற இனப்பெருக்கம்) இனப்பெருக்கத்தின் ஒரு முறையை குறிக்கிறது, இதில் சந்ததிகள் ஒற்றை உயிரினத்திலிருந்து தோற்றம் பெற்று, அந்த பெற்றோரின் மரபணுப் பொருளை மட்டுமே பெறுகின்றன. உன்னை பெற்றெடுத்தது யார்? என்று கேட்கும் போது அதிகமான மக்கள் எனது பெற்றோர் எனச் சாதாரணமாக பதிலளிப்பார்கள். அதாவது இவ்வுலகில் நான் இருப்பதற்கு அவர்களே காரணமாக இருந்தனர் என்பது இதன் கருத்தாகும். மேலே குறிப்பிடப்பட்ட கேள்விக்கான பதில் மிகச்சுருக்கமானதும் இச்சிக்கிலிருந்து வெளியேருவதற்கான வழி என்பதும் மிகத் தெளிவானது. மனிதன் தனது இயல்பில் எப்போதும் ஆழமாக சிந்திப்பதற்கோ கடுமையாக முயற்சிப்பதற்கோ விரும்புவதில்லை. அவனைப் பொருத்தவரை தனது பெற்றோர் இறந்து விடுவர் என்பதையும், இதே பதிலை தனக்கு பின் வரும் சந்ததிகளும் கூறுவர் என்பதையும் அவன் தெரிந்து வைத்துள்ளான். அது மாத்திரமின்றி தனது குழந்தையை படைப்பதற்கான எவ்வித அதிகாரமோ, சக்தியோ தன்னிடம் கிடையாது என்பதையும் அவன் அறிந்துள்ளான். ஆகவே உண்மையான கேள்வி

மனிதப் பரம்பரையை உருவாக்கியவன் -தோற்றுவித்தவன் - யார்? என்று அமைய வேண்டும்.

அவர்கள் வானங்களையும் பூமியையும் படைத்தார்களா? :

அதிகாரமும் படைப்பாற்றலும் உள்ள ஒருவனைத் தவிர வானங்கள் மற்றும் பூமியை படைத்ததாக வாதிடக்கூடிய எவரும் கிடையாது. மனித குலத்திற்கு தனது தூதுவர்களை அனுப்புவதன் மூலம் இப்பேருண்மையை வெளிப்படுத்தியவன் அவனே! அப்பேருண்மை என்ன? மேற்குறிப்பிட்ட அதிகாரம் படைத்தவன்தான் படைப்பாளனும் முன்மாதிரியின்றி ஒன்றை தோற்றுவிப்வனும்; வானங்கள் மற்றும் பூமிக்கிடையே உள்ளவற்றின் சொந்தக்காரனுமாவான். அவனுக்கு நிகரானவர் எவரும் இல்லை. அவனுக்கு எந்த சந்ததியும் இல்லை.

அல்லாஹ் கூறுகிறான் :

"(நபியே!) கூறுவீராக: அல்லாஹ்வையன்றி எவர்களை நீங்கள் (தெய்வங்களென) எண்ணிக் கொண்டீர்களோ அவர்களை நீங்கள் அழைத்துப் பாருங்கள். வானங்களிலோ பூமியிலோ அவர்களுக்கு ஓர் அணுவளவும் உரிமை இல்லை. மேலும், அவ்விரண்டிலும் அவர்களுக்கு எந்தப் பங்கும் இல்லை. (அவற்றை படைப்பதில்) அவை அவனுக்கு உதவி செய்யவுமில்லை". (ஸபஃ : 22).

இங்கு ஒரு உதாரணத்தை பார்ப்போம். பொது இடத்தில் ஒரு பை கண்டெடுக்கப்படுகிறது. அந்தப் பையின் சொந்தக்காரர் என வாதிட ஒரே ஒருவரைத் தவிர யாரும் முன்வரவில்லை. அந்தப்பையின் அடையாளங்களையும், அதனுள் இருக்கும் பொருட்களின விபரங்ளையும் அவர் குறிப்பிட்டால் வேறு ஒரு நபர் அப்பை தனக்குரியது என குறிப்பிடாதவரை அந்தப் பையின் அடையாளங்களையும் விபரங்களையும் கூறிய அந்நபருக்குச் சொந்தமானதாக மாறிவிடுகிறது. இது மனித சட்டங்களின் அடிப்படையில் வழங்கப்பட்ட தீர்ப்பாகும்.

## படைப்பாளனின் இருப்பு

மேற்குறிப்பிட்ட விடயங்கள் யாவும் எந்த வகையிலும் மறுக்க முடியாத ஒரு படைப்பாளனின் இருப்பை நோக்கி எம்மை நகர்த்திச் செல்கிறது. ஆச்சரியமான விடயமென்னவெனில் மனிதன் எப்போதும் இந்த சாத்தியப்பாடுகளை தாண்டி பல கற்பிதங்களை உருவாக்குதற்கு தொடர்ந்தும் முயற்சித்துக்கொண்டிருக்கிறான். அந்தக் கற்பிதங்கள் யாவும் வெறும் கற்பனைகளே அதனை உண்மைப்படுத்தவோ அவன் இருப்பை உறுதிப்படுத்தவோ அதனால் முடிவதில்லை. இந்த விவகாரத்தில், அறிவியல் ரீதியான ஓர் ஆழமான கண்ணோட்டத்தின் ஊடாக உண்மையான நடு நிலையான ஒரு நிலைப்பாட்டை கொண்டால் படைப்பாளனான உண்மை இறைவனை சூழ்ந்து அறிய முடியாது என்ற யதார்த்தத்திற்கே எம்மால் வர முடியும். அவ்வாறான ஒருவனே ஒட்டு மொத்த இப்பிரபஞ்சத்தைப் படைத்தவன். ஆகவே அவனின் மெய்நிலையானது மனித அறிவிற்கும் புரிதலுக்கும் அப்பாற்பட்டதாகும். கண்ணுக்குத் தெரியாத இந்த சக்தியின் இருப்பை உறுதிப்படுத்துவது எளிதானது அல்ல என்று கருதுவது தர்க்கரீதியானதே, இந்த சக்தி மனித அறிவுக்கு ஏற்ற விதத்தில் அதற்குரிய முறையில் தன்னை அறிமுகப்படுத்துவதினூடாக இந்த கண்ணுக்கு தெரியாத சக்தி இருப்பது உண்மை என்று மனிதன் உறுதியாக நம்ப வழிவகுக்க வேண்டும். இறுதியாக இங்கு குறிப்பிட்ட இந்த சாத்தியப்பாட்டை விட்டு ஒரு போதும் விலகிவிட முடியாது. இறுதியாக எஞ்சியிருப்பது இப்பிரபஞ்ச மர்மத்தின் விளக்கமே!

அல்லாஹ் கூறுகிறான் :
"ஆகவே அல்லாஹ்வின் பக்கம் விரைந்து செல்லுங்கள். நிச்சயமாக நான், அவனிடமிருந்து உங்களுக்குக் தெளிவாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவ(னாக இருக்கிறே)ன்".(அத்தாரியாத் : 50).

நாம் நித்தியமான சுகத்தையும் பேற்றையும், நிரந்தர தங்குமிடத்தையும் தேடுவோராக இருந்தால் மேற்குறிப்பிட்ட படைப்பாளனும் முன்மாதிரியின்றி உருவாக்குபவனுமான உண்மை சிருஷ்டிகர்த்தாவின் இருப்பை ஏற்று அடிபணிந்து விசுவாசம் கொள்வது இன்றியமையாத விடயாமாகும்.

## *படைப்பாளனின் இருப்புக்கான உறுதியான ஆதாரம் என்ன?*

நாம் எமது வெற்றுக்கண்களால் வானவில் மற்றும் காணல் நீரைக் காண்கிறோம். ஆனால் அதற்கென்று ஒரு இருப்பு அல்லது யதார்த்தம் கிடையாது! ஆனால் வெறுமனே இயற்கை விஞ்ஞானம் புவியீர்ப்பு விசை இருப்பதை நிரூபித்திருப்பதால் அதனை நாம் காணமலே நம்புகிறோம். இதே போல் கடவுளை (இறைவனை) நம் வெற்றுக் கண்களுக்கு புலப்படவில்லை என்பதால் அவன் இருப்பை மறுக்க முடியாவதல்லவா?

அல்லாஹ் கூறுகிறான் :
"பார்வைகள் அவனை அடைய முடியாது. அவனோ பார்வைகள் அனைத்தையும் அறிந்து கொள்கிறான். அவன் (எவரின் பார்வைக்கும் அகப்படாத) மிக நுட்பமானவன், மிக்க அறிந்தவன்".(அன்ஆம் : 103).

இக்கருத்தை விளக்க பின்வவரும் எடுத்துக்காட்டை குறிப்பிட முடியும். அதாவது 'சிந்தனை' என்ற சடப்பொருளல்லாத ஒன்றை எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதனால் பொருளற்ற இவ்வாறான ஒன்றின் நிறையை கிரேமிலோ அதன் நீளத்தை சென்டிமீட்டரிலோ, அதில் உள்ளடங்கியுள்ள இரசாயன கலவையையோ, நிறத்தையோ, அதன் உள்ளே காணப்படும் அழுத்தத்தையோ, தோற்றத்தையோ வடிவத்தையோ விவரிக்க முடியாது.!

**உய்த்தறிதல் –உள்ளுணர்தல்- நான்கு வகைப்படும் :**

1. புலன் சார்ந்தது : உதாரணத்திற்கு பார்வை புலன்மூலம் ஒன்றை காணுதல்.
2. கற்பனை (சிந்தனை) சார்ந்தது : அதாவது உங்கள் ஞாபகத்தில்- நினைவில்- உள்ள ஒரு வடிவத்தை உங்களின் கடந்த கால அனுபவங்களுடன் ஒப்பிட்டுப்பார்த்து ஒரு விடயத்தை உணர்தல் -புரிந்து கொள்ளுதல்.
3. ஊகம் சார்ந்தது : இது பிறரின் உணர்வுகளை உணர்தலைக் குறிக்கிறது. அதாவது உமது மகன் கவலையாக உள்ளான் என்பதை உணர்வது போல. இந்த மூன்று நிலைகளிலும் மனிதனும் மிருகமும் ஒன்று படுகின்றன.
4. பகுத்தறிவுரீதியாக புரிந்து கொள்ளல் : இதில் மனிதன் மாத்திரம் தனித்தவம் பெற்றவனாக திகழ்கிறான்.

இவ்வகை புரிதலை முற்றாக நீக்கி மனிதனை மிருகத்துடன் சமப்படுத்தவே நாத்திகவாதிகள் விரும்புகின்றனர். பகுத்தறிவுரீதியான புரிதலே ஒன்றை உணர்ந்தறிவதில் மிகவும் பலமிக்க ஒன்றாக கருதப்படுவதுடன் அதுவே புலன்களின் பார்வையையும் சரிசெய்கிறது என்பதே யதார்த்தமுமாகும். முன்கூறிய உதாரணம் போன்று ஒரு மனிதன் வெற்றுக்கண்களால் காணலைப் பார்த்தால் பகுத்தறிவு அது நீர் அல்ல வெறும் காணல் நீர் என்று கூறுகிறது. இது மணலின் மீது படும் ஒளியின் பிரதிபலிப்பால் தோன்றும் ஒரு மாயத்தோற்றம், இதற்கென யதார்த்த நிலை அடிப்படையில் கிடையாது. இங்கே அவர் பார்வை புலனால் ஏமாற்றப்பட்டு பகுத்தறிவால் வழிப்படுத்தப்படுகிறார் என்பதை நாம் காண்கிறோம். நாத்திகர்கள் பகுத்தறிவு ஆதாரங்களை நிராகரித்து, பௌதீக ஆதாரங்களைக் கோருவதுடன் அவர்கள் இந்த வார்த்தையை 'அறிவியல் சான்றுகள்' என்ற பிரயோகத்துடன் சுருக்கிக் கொள்கின்றனர். எனவே பகுத்தறிவு மற்றும் தர்க்கரீதியான சான்றுகள் அறிவியல் பூர்வமானவை இல்லையா? உண்மையில், இது அறிவியல் ஆதாரமாக உள்ளது. ஆனால் பௌதீக ரீதீயான ஆதாரம் கிடையாது. அத்துடன் (500) ஐநூறு ஆண்டுகள் இப்பூமியில் வாழ்ந்த ஒரு நபருக்கு வெற்றுக் கண்ணுக்குத் தெரியாத சிறிய நுண்ணுயிர்கள் இருப்பதைப் பற்றிய கருத்தை நீங்கள் கற்பனை செய்தால் அதன் எதிர்வினை எப்படி இருக்கும்?. (https://www.youtube.com/watch?v=P3lnWgcv18A ஸுலைமான் பாழில்)

பகுத்தறிவைப் பொறுத்த வரை அது படைப்பாளனின் இருப்பையும் அவனின் சில பண்புகளை அறியும் இயலுமை இருப்பினும் அதற்கென்று வரம்புகள் உள்ளன. சில விடயங்களின் நுட்பங்களை அதனால் அறிந்து கொள்ள முடிகிறது, சிலவற்றின் நுட்பங்களை அதனால் அறிய முடியாது உள்ளது. உதாரணத்திற்கு ஐன்ஸ்டைன் போன்ற ஒரு பௌதீக விஞ்ஞானியின் பகுத்தறிவினால் எவரும் படைப்பின் நுட்பங்களை அறிய முடியாது. அல்லாஹ் உயர் முன்மாதிரிக்கு சொந்தக்காரன், ஒருவர் வெறுமனே தன்னால் அல்லாஹ்வை (இறைவனை) முழுமையாகப் புரிந்து கொள்ள முடியும் என்ற இயலுமை இருப்பதாக எண்ணுவது அவனின் முழுமையான அறியாமையின் குறியீடாகும். அதாவது ஒரு வாகனம் உம்மை கடற்கரைக்கு அழைத்துச் செல்லலாம், ஆனால் அதில் மூழ்குவதற்கு உனக்கு அது வழி சமைக்காது. உதாரணத்திற்கு கடல் நீர் எத்தனை லீட்டருக்கு சமம் என்று நான் உம்மிடம் கேட்கும் போது ஏதாவது இலக்கத்தைக் கூறி

பதிலளிப்பீராயின் நீ ஒரு முட்டாளாக கருதப்படுவாய். எனக்குத் தெரியாது என்று பதில் கூறின் நீ ஒரு அறிவாளி எனக் கருதப்படுவாய். எனவே உண்மைக் கடவுளை அறிய ஒரே வழி அவனின் பிரபஞ்ச மற்றும் அல்குர்ஆனின் அத்தாட்சிகள் மட்டுமே என்பதை புரிய வேண்டும்!. அஷ்ஷேய்க் முஹம்மத் ராதிப் அன்னாபுல்ஸியின் கூற்றின் ஒரு பகுதி.

எனவே இஸ்லாத்தின் அறிவுமூலாதாராமாக அல்குர்ஆன், ஸுன்னா எனும் நபி வழிமுறை, மற்றும் ஆதாரத்தின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட அறிஞர்களின் ஏகோபித்த முடிவு ஆகியவை திகழ்கிறன. பகுத்தறிவானது அல்குர்ஆன் மற்றும் நபி வழிமுறையின் கட்டுக்கோப்புக்குள் இயங்கங்கூடியதாக இஸ்லாத்தில் இருப்பதால் அவ்வாறான ^+ரிய பகுத்தறிவு கூறும் விடயங்கள் இறைவெளிப்பாட்டுடன் எப்போதும் முரண்படமாட்டாது. அதே போன்று அல்லாஹ் பிரபஞ்ச அத்தாட்சிகளின் மூலமும், இறைவெளிப்பாட்டிற்கு முரண்படாது அதன் யதார்த்தாங்களுக்கு சான்றுபகரக் கூடிய புலன்சார் விடயங்கள் மூலமும் வழிகாட்டல்களை பெறக்கூடியதாகவே பகுத்தறிவை ஆக்கியுள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :

“அல்லாஹ் எவ்வாறு முதன் முறையாகப் படைத்து, பின்னர் அதனை மீட்டுகிறான் என்பதை அவர்கள் அறியவில்லையா? நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதாகும். நீங்கள் பூமியில் பயணித்து அவன் படைப்பை எப்படி ஆரம்பித்தான்? என்பதைப் பாருங்கள், பின்பு அல்லாஹ்வே மறுதடவையும் உற்பத்தி செய்கிறான். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றின் மீதும் பேராற்றலுடையவன்”. (அன்கபூத் : 19-20). “அப்பால், (அல்லாஹ்) அவருக்கு (வஹீ) அறிவித்ததையெல்லாம் அவர், அவனுடைய அடியாருக்கு (வஹீ) அறிவித்தார்”. (அந்நஜ்ம் :10).

அறிவில் உள்ள அழகே அதற்கு கரைகள் கிடையாது என்பதுதான். நாம் அறிவுத்துறையில் எவ்வளவு ஆழமாகச் செல்கிறோமோ அங்கு வேறு பல அறிவுகளையும் எம்மால் கண்டு கொள்ள முடிகிறது. அதனால் அறிவின் முழுமையை எம்மால் ஒரு போதும் அடைந்து கொள்ள முடியாது. மிகவும் திறமையான விவேகமுள்ள மனிதன் யாரெனில் எல்லாவற்றையும் விளங்கி

அறிந்து கொள்ள வேண்டும் என்றிருப்பவன். மிகவும் மடத்தனம் நிறைந்த மனிதன் யாரெனில் தனக்கு அனைத்தும் விளங்கும் -புரியும்- என்றிருப்பவனாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"(நபியே!) நீர் கூறுவீராக! என் இரட்சகனின் வாக்கியங்களுக்கு (-அதை எழுதுவதற்கு) கடல் (நீர்) யாவும் மையாக இருந்தாலும் என் இரட்சகனின் வாக்கியங்கள் (எழுதி) முடிவதற்கு முன்னதாகவே, கடல் (நீர்) முடிந்து (செலவாகி) விடும்- அதுபோன்றதை (இன்னொரு கடலையும்) நாம் உதவிக்கு கொண்டு வந்தபோதிலும் சரியே.".(அல்கஹ்ப் :109).

### *இறைவன் (படைப்பாளன்) ஏன் அவனின் படைப்பின் உருவத்தில் பிரதிபலிப்பதில்லை? தோன்றுவதில்லை?*

விளக்கத்திற்காக மாத்திரம்- உயர்வான பண்பு அல்லாஹ்விற்கு மாத்திரமே- ஒரு உதாரணத்தை குறிப்பிடுகிறேன். ஒரு மனிதன் இலக்ட்ரோனிக் கருவியொன்றை பயன்படுத்தும் வேளை அவன் அதனை வெளியிலிருந்தே கட்டுப்படுத்துகிறான். இயக்குகிறான். அவன் ஒரு போதும் எந்த நிலையிலும் அதனுள் போவதில்லை என்பதை நாம் அறிவோம்

ஒரு சாதாரன கருவியை இயக்குவதற்கு சாதாரண ஒரு மனிதனின் நிலை இவ்வாறு இருக்கையில் நாம் அல்லாஹ்வுக்கு இதனை விட பண்மடங்காக செய்வதற்கு இயலும் என்று கூறக் காரணம் அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவனாக இருப்பதினாலாகும். ஆகவே நாம் படைப்பாளனான இறைவன் ஒருவன் என்றும் அவன் தனித்துவமானவன் என்றும் முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இவ்வாறான பண்புள்ள ஒருவன் அவனின் கண்ணியத்திற்கு பொருத்தமற்றதை செய்யமாட்டான் என்பதையும் நாம் புரிய வேண்டும். அல்லாஹ்வுக்கு இணைகற்பித்து அவனது மகிமைக்கு பங்கம் விளைவிக்கும் அனைத்தைவிட்டும் அவன் மேலானவனாக உள்ளான்.

இன்னோர் உதாரணத்தை அவதானிப்போம். ஒரு மத போதகர் அல்லது மதரீதியான மரியாதையைப் பெற்ற ஒருவர் ஒரு போதும் பொதுப்பாதையில்

நிர்வாணமாக திரியமாட்டார். அவருக்கு இதனை செய்யவதற்கு இயலுமை இருந்தும் மக்கள் முன் இவ்வாறான தோற்றத்தில் வரமாட்டார். காரணம் அவர் பெற்றிருக்கும் மதரீதியான அந்தஸ்த்து இச்செய்யற்பாட்டிட்ற்கு பொருந்தாது என்பதினாலாகும். ஆகவே மனிதனின் தோற்றத்தில் அல்லது படைப்பின் தோற்றத்தில் படைப்பாளன் -இறைவன்- தோன்ற வேண்டும் என்பது அறிவுபூர்வமற்ற ஒரு கேள்வி என்பதைப் புரிந்திருப்பீர்கள்.

### *படைப்பாளனை (இறைவனை) வணங்குவதில் இடைத்தரகர்களை எடுத்துக்கொள்வது நிரந்தர நரகத்திற்கு செல்ல காரணமாய் அமையும் என கூறப்படுவது ஏன்?*

மனித சட்டத்தில் அரசனின் அல்லது அதிகாரம் படைத்தோரின் உரிமையை மீறுவது ஏனைய குற்றங்களுக்கு சமமானது அல்ல என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்றாகும். இவ்வாறு மனித சட்டமே அதிகாரம் பெற்ற மனிதனின் உரிமையை மீறி நடக்கும் போது அதனை மிகப்பெரும் குற்றமாக கருதும் போது அரசர்களுக்கு எல்லாம் அரசனான அல்லாஹ்வின் உரிமையை மீறுவது எவ்வளவு பெரிய குற்றம் என்பதை சொல்லித்தான் தெரிய வேண்டியதில்லை. ஆகவே நபியவர்கள் குறிப்பிட்டது போன்று அடியார்கள் அல்லாஹ்வுக்கு- இறைவனுக்கு- செலுத்த வேண்டிய கடமை அவனை மாத்திரம் வணங்கி வழிபடுவதாகும் . இது குறித்து அவர்கள் குறிப்பிடுகையில் "அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமை அவனை வணங்கி வழிபடுவதுடன் அவனுக்கு எதனையும் இணைவைக்காது இருப்பதுமாகும். இக்கடமையை அடியார்கள் நிறைவேற்றினால் அல்லாஹ் அடியார்களுக்கு செய்ய வேண்டியது என்ன என்பது பற்றி உனக்குத் தெரியுமா? என கேட்க, அதற்கு நான் இது குறித்து மிகவும் அறிந்தோர் அல்லாஹ்வும் அவனின் தூதருமாவார்கள். என்றேன். அதற்கு நபியவர்கள்: அடியார்களை வேதனை செய்யாது நரகத்திலிருந்து காப்பதுதான் அல்லாஹ் அடியார்களுக்கு செய்ய வேண்டிய கடமை" என்று நபியவர்கள் கூறியதாக முஆத் (ரலி) கூறினார்கள். அத்துடன் இவ்வாறு நாம் சிந்தித்தாலே இக்கேள்விக்கான சரியான பதிலை கண்டு கொள்ள முடியும். அதாவது நாம் ஒருவருக்கு ஒரு அன்பளிப்பை வழங்குகிறோம், அவரோ வேறொவருக்கு நன்றி கூறி அவரைப்பாராட்டுகிறார் என்றால் எம்மால் அதனை ஏற்க முடியுமா

என்று சிந்தித்தால் நாம் இவ்விடயத்தில் தெளிவு பெற போதுமான சான்றாக இது அமைந்துவிடும். உயர் பண்புகள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே, இந்த விடயத்தில் அடியார்களும் தங்களின் படைப்பாளனுடன் இவ்வாறுதான் உள்ளனர். அல்லாஹ் அவர்களுக்கு கணக்கிட முடியாத அருள்களை வழங்கியுள்ளான், அவர்களோ அவனல்லாத மற்றவர்களுக்கு நன்றி செலுத்துகின்றனர். ஆனால் படைப்பாளனான இறைவன் எல்லா நிலைகளிலும் தேவையற்றவன்.

## *படைப்பாளனான இறைவன் ஒருவனாக ஏகனாக இருக்கையில் தன்னை பற்றி குறிப்பிடும் போது பன்மைச் சொல் வடிவில் சுட்டிகாட்டுவது ஏன்?*

அகில உலகங்களின் இரட்சகனான அல்லாஹ் தன்னைப் பற்றி குறிப்பிடுகையில் 'நாங்கள்' என்று அல்குர்ஆன் வசனங்களின் பயன்படுத்துவதானது, அவன் மாத்திரமே மேன்மை மற்றும் அழகு ஆகிய பண்புகளில் முழுவைதையும் ஒன்று சேர பெற்றிருப்பதினாலாகும். அரபு மொழியில் இப்பிரயோகம் பலம் -சக்தி- வல்லமை மேன்மை போன்ற அர்த்தத்தைக் காட்டவல்லது. அதே போல் ஆங்கில மொழியில் நாம் என்பது உடமை, சொந்தம், அதிகாரம் போன்ற கருத்தைக் காட்டும். அதாவது பன்மை பிரதிப் பெயரானது உயர் பதவியில் உள்ள நபரை சுட்டிக்காட்ட பயன் படுத்தப்படுகிறது. (உதாரணத்திற்கு அரசர், இளவரசர் அல்லது அதிகாரம் படைத்தவர்) என்றாலும் அல்குர்ஆன் எப்போதும் வணக்கம் வழிபாடு தொடர்பானவற்றில் அல்லாஹ்வின் ஏகத்துவத்தை கடுமையாக வலியுறுத்துவதைக் காணமுடியும்.

## *படைப்பாளனான அல்லாஹ் மனித இனத்திற்கு இறை விசுவாசம், இறை மறுப்பு விவகாரத்தில் தெரிவுரிமை விருப்பை அளித்தது ஏன்?*

அல்லாஹ் கூறுகிறான் :
"சத்தியம் உங்களின் இரட்சகனிடமிருந்தே வந்துள்ளது. ஆகவே விரும்பியவர் நம்பிக்கை கொள்ளட்டும், விரும்பியவர் நிராகரிக்கட்டும் என்று கூறுவீராக". (அல் கஹ்ப் : 29).

படைப்பாளனான அல்லாஹ்வுக்கு எம்மை அவனுக்கு கட்டுப்பட்டு நடக்கவும், வணங்கிவழிபடவும் நிர்ப்பந்திக்க முடியும். என்றாலும் நிர்ப்பந்தித்தல் மனித படைப்பின் எதிர்பார்க்கப்பட்ட இலக்கை அடைந்துகொள்ள வழிவகுக்காது.
ஆக,தெய்வீக ஞானம், ஆதமை படைத்ததிலும், அறிவால் அவரை தனித்துவப்படுத்துவதிலும் பிரதிபலிக்கிறது.

"இன்னும் அவன் ஆதமுக்கு அனைத்துப்பெயர்களையும் கற்றுக் கொடுத்தான், பின்னர் அவற்றை வானவர்களுக்கு எடுத்துக்காட்டி,' நீங்கள் உண்மையாளரகாக இருப்பின் இவற்றின் பெயர்களை எனக்கறிவியுங்கள் (எனக் கூறினான்)". (அல்பகரா : 31).

அத்துடன் தெரிவு செய்வதற்கான திறனை அவருக்களித்தான்.
"ஆதமே! நீரும் உம் மனைவியும் இச்சுவர்க்கத்தில் குடியிருங்கள். மேலும், நீங்கள் இருவரும் விரும்பியவாறு தாராளமாக அதிலிருந்து புசியுங்கள். ஆனால் நீங்கள் இருவரும் இம்மரத்தை நெருங்க வேண்டாம். அவ்வாறெனில் நீங்கள் இருவரும் அநியாயக்காரர்களில் ஆகிவிடுவீர்கள்' என்றும் நாம் கூறினோம்".(அல்பகரா: 35).

தேர்வில் ஒருவருக்கு தவறு, பிழை, பாவம் ஆகியவை ஏதோ வகையில் ஏற்படும் என்பதினால் அவருக்கு தவ்பா மற்றும் பிரயச்சித்தத்திற்கான வாயில்களை திறந்து கொடுத்தான்.

"பின்னர் ஆதம் தனது இரட்சகனிடமிருந்து சில வார்த்தைகளைப் பெற்று அதன் மூலம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அதனால் அவன் அவரை மன்னித்தான். நிச்சயமாக அவன்தான் மிக்க மன்னிப்பவனாகவும் நிகரற்ற அன்புடையோனுமாவான்". (அல் பகரா : 37).

அல்லாஹ் ஆதமை இந்தப்பூமியின் கலீபாவாக (தலைமுறையாக) இருக்க வேண்டுமென விரும்பினான். "(நபியே) இன்னும் உமது இரட்சகன் வானவர்களிடம் 'நிச்சயமாக பூமியில் நான் ஒரு தலைமுறையை தோற்றுவிக்கப்போகின்றேன்' என்று கூறியபோது: நாம் உம் புகழைத் துதித்துக்கொண்டும், உன்னைத்

தூய்மைப்படுத்திக்கொண்டுமிருக்க, அதில் குழப்பத்தை விளைவித்து இரத்தங்களை சிந்துவோரையா தோற்றுவிக்கப்போகின்றாய் ? என்று அவர்கள் கூறினார்கள். அதற்கவன் நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நான் நன்கறிவேன் எனக் கூறினான். (பகரா : 30).

ஆகவே தெரிவுரிமைக்கான நாட்டம் (விருப்பம்) மற்றும் ஆற்றலானது அதனை சரியான வடிவிலும் முறையிலும் பயன்படுத்தப்பட்டால் உண்மையில் அது ஒரு அருளாக அமைவதுடன் மோசமாகவும் முறைகேடான நோக்கங்கங்களுக்கும் தேவைகளுக்கும் பயன்படுத்தப்பட்டால்; (சாபமாகவும்) மருளாகவும் அமைந்து விடும்.

உண்மையில் மனிதனுக்கு வழங்கப்பட்ட விருப்பும், தெரிவும் அபாயம், சிக்கல், கடும் சவால் மற்றும் உளப்போராட்டம் நிறைந்தவைகளாக உள்ளன. இது போலியான மகிழ்சிக்கு வழிவகுக்கும். அடிமைத்தனத்திலிருந்து காத்து மனிதனுக்கு மிகவும் உயர் அந்தஸ்த்தையும், கண்ணியத்தையும் வழங்கும் என்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை.

அல்லாஹ் கூறுகிறான் :
“நம்பிக்கையாளர்களில் உரிய காரணமின்றி (போரில் கலந்து கொள்ளாது) தங்கியிருப்போர்களும், தமது செல்வங்களாலும், தமது உயிர்களாலும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவோரும் சமமாக மாட்டார்கள். தமது செல்வங்களாலும் தமது உயிர்களாலும் அறப்போர் புரிவோரை (போருக்குச் செல்லாது) தங்கியிருப்போரை விட அல்லாஹ் அந்தஸ்தால் சிறப்பாக்கி வைத்துள்ளான். அனைவருக்கும் அல்லாஹ் நல்லதையே வாக்களித்துள்ளான். இன்னும் (போருக்குச் செல்லாது) தங்கியிருப்போரை விட அறப்போர் புரிவோரை மகத்தான கூலியால் அல்லாஹ் சிறப்பாக்கி வைத்துள்ளான்.(அந்நிஸா : 95).
வெகுமதியை பெறுவதற்கான தெரிவு எமக்கு இல்லையெனில் கூலி மற்றும் தண்டனையின் பயன் என்ன?

மேற்கண்ட அனைத்தும் உண்மையில், இவ்வுலகில் மனிதனுக்கு இறைவனால் வழங்கப்பட்ட தெரிவுரிமையின் பரப்பானது வரையறுக்கப்பட்டதாகும்

என்பதை புரிந்து கொள்ளவதுடனேயே அமைகின்றது. எமக்களித்த தெரிவுச் சுதந்திரத்திற்கு மாத்திரமே அல்லாஹ் எம்மை மறுமையில் விசாரிப்பான். ஆகவே நாம் வளர்ந்த சூழ்நிலைகள் மற்றும் ,சூழல் ஆகியவற்றில் எமக்கான எவ்வித தெரிவும் கிடையாது. இது நாம் எமது பெற்றோரை நாம் எப்படி தெரிவு செய்வில்லையோ, அதே போல் எமது தோற்றங்கள் மற்றும் நிறங்களை தெரிவு செய்வதில்; -வர்ணங்களில்- ஆதிக்கம் செலுத்துவதற்கான எவ்வித அதிகாரத்தையும் நாம் எப்படி பெறவில்லையோ அதனை ஒத்த விடயமாக உள்ளது.

## *அல்லாஹ் மனிதனில் எவ்விதத் தேவையற்றவனாக இருக்கும் நிலையில், மனித குலத்தைப் படைத்தது ஏன்?*

இதனை உதாரணம் ஒன்றின் மூலம் விளக்கலாம். அதாவது ஒரு மனிதன் தன்னை ஒரு பெரிய செல்வந்தனாகவும் தயாள குணமுடையவானாகவும் வல்லாலாக காணும் வேளை அவன் தனது நண்பர்களையும் விருப்புக்குரியவர்களையும் உண்ணவும் பருகவும் அழைப்பான்.

எங்களில் காணப்படும் இந்தப் பண்புகள் அல்லாஹ்வுடன் ஒப்பிடுகையில் அவனில் காணப்படுபவற்றில் மிகவும் சாதாரணமாகும். ஆக அல்லாஹ்வுக்கே கண்ணியம் மற்றும் அழகின் பண்புகள் உரியன. அவன் அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகவும் தாராளமாக வழங்குபவனாகவும் உள்ளான். எம்மை அவனுக்கு வனங்கி வழிபடவே படைத்துள்ளான். நாம் எப்போது அவனுக்கு தூய்மையான முறையில் வணக்கத்தை செலுத்தி அவனின் கட்டளைகளை ஏற்று அடிபணிந்து நடந்தால் அவன் நிச்சயமாக எமக்கு அன்பு காட்டுவான் எம்மை மகிழ்வித்து எமக்கான அனைத்தையும் தருவான். இந்த வகையில் மனிதனின் அழகான பண்புகள் யாவும் அவனின் பண்புகளிலிருந்து பிரிந்து வந்ததாகும்.

அல்லாஹ் எம்மைப் படைத்து, தெரிவுரிமை ஆற்றலை வழங்கினான். இதன் மூலம் அவனுக்கு கட்டுப்படுதல், வணங்குதல் போன்ற பாதையை தெரிவு செய்யலாம், அல்லது அல்லாஹ்வின் இருப்பை மறுத்து அத்துமீறுதல் மற்றும்

அவனைப் புறக்கணித்து மாறுசெய்தல் எனும் பதையை தெரிவு செய்யலாம். இவ்விரு பாதைகளில் ஒன்றை தெரிவு செய்து வாழும் உரிமை எமக்கே உள்ளது.
அல்லாஹ் கூறுகிறான் :

"ஜின்களையும், மனிதர்களையும் அவர்கள் என்னை வணங்குவதற்கே தவிர (வேறெதற்காகவும்) நான் படைக்கவில்லை. அவர்களிடமிருந்து எந்த வாழ்வாதாரத்தையும் விரும்பவில்லை. இன்னும் அவர்கள் எனக்கு உணவளிக்க வேண்டும் எனவும் நான் விரும்பவில்லை. நிச்சயமாக அல்லாஹ்வே உணவளிப்பவனும், பலமிக்கவனும் உறுதியானவனுமாவான்". (ஸாரியாத் : 56-58).

அல்லாஹ் படைப்புகளில் எவ்விதத் தேவையுமற்றவன் என்ற விவகாரமானது மூலாதார அடிப்படையிலும் (அல்குர்ஆன் மற்றும் நபிவழிறையில்) பகுத்தறிவு அடிப்படையிலும்; உறுதிப்படுத்தப்பட்ட விடயமாகும்.
அல்லாஹ் கூறுகிறான் :
"நிச்சயமாக அல்லாஹ் உலகத்தாரை விட்டும் தேவையற்றவன்".(அல் அன்கபூத் : 6).

பகுத்தறிவுரீதியில், இதனை இவ்வாறு குறிப்பிடலாம். எவ்வித குறைகளுமற்ற பூரண படைப்பாளன் என்பவன் முழுமையான எவ்விதக் குறைகளற்ற பரிபூரண பண்புகளைப் பெற்றிருப்பான் என்பதே உண்மையாகும். அந்த வகையில் பரிபூரண பண்புகளைப் பெற்றவனுக்கு ஏனையவற்றின் தேவை ஒரு போதும் இருக்காது என்பதே யதார்த்தமும் ஆகும். அவ்வாறு ஏனையோரின் பால் தேவை இருப்பது பெரும் குறையாகும். இக்குறை பண்பிலிருந்து மிகவும் தூயவனாக அல்லாஹ் இருக்கிறான்.

தெரிவுச்சுதந்திர விவகாரத்தில் ஏனைய உயிரனங்களிலிருந்து ஜின் மற்றும் மனித இனத்தை தனித்துவப்படுத்தியுள்ளான். மனிதனின் தனித்துவமானது, அகிலங்களின் இரட்சகனை நோக்கிச் சென்று சுயவிருப்பத்தின் அடிப்படையில் அவனுக்குத் தூய்மையாக தலைவணங்குவதாகும். இதன் மூலம் உயிரினங்களின் தலையாய –பிரதான –உயிரனமாக மனிதனை அல்லாஹ் வைத்திருப்பதன்

நுணுக்கம் விளங்குகிறது.

அகிலங்களின் இரட்சகனை அறிதல் என்பது அவனின் அழகிய பெயர்கள் மற்றும் உயர் பண்புகள் ஆகியவற்றை அறிவதினூடாக உறுதியாகும். அவைகள் அடிப்படையான இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளன. அவையாவன:

அழகிய பெயர்கள்: இவை கருணை மன்னிப்பு மென்மை தொடர்பான அனைத்துப் பண்புகளையும் குறிக்கும். அவற்றுள் அர்ரஹ்மான் (அருளாளன்), அர்ரஹீம் ( நிகரற்ற அன்புடையோன்), அர்ராஸிக் (வாழ்வாதாரத்தை வழங்குபவன்), அல் வஹ்ஹாப் (மிகப்பெரும் கொடையாளன்), அல் பர்ரு (பேருபகாரி) அர்ரஊப் (இரக்கமுள்ளவன்) போன்ற சிலவாகும்.

கண்ணியப் பெயர்கள் : சக்தி, பலம், மேன்மை, மதிப்பச்சம் போன்ற கருத்துக்களைக் காட்டும் அனைத்து பண்புகளையும் இது குறிக்கிறது. அவற்றுள் அஸீஸ், (யாவற்றையும் மிகைத்தவன்) அல் ஜப்பார் (^+ர் குழைந்ததை சரிசெய்பவன் ) அல் கஹ்ஹார் (யாவற்றையும் தனது கட்டுப்பாட்டில் வைத்திருப்பவன்) அல் காபிழ் (கைவசப்படுத்துபவன்) அல் ஃகாபிழ் (தாழ்த்துபவன்).

நாம் அல்லாஹ்வின் அழகிய பண்புகளை அறிந்து கொள்வதன் மூலம் அவனை (அவனுக்குப்) பொருத்தமான விதத்தில் கண்ணிப்படுத்தி, பெருமைப்படுத்துவதோடு, அவனுக்குப் பொருந்தாத பண்புகளை விட்டும் அவனை தூய்மைப்படுத்தி அவனின் கருணையை ஆசித்தும், அவனின் கோபம் மற்றும் தண்டணையை பயந்தும் அவனை அழகிய முறையில் வணங்கி வழிபட முடியும். அல்லாஹ்வை வணங்கி வழபடுதல், அவனின் கட்டளைகளை ஏற்றுப் பின்பற்றி, தடுத்தவற்றை தவிர்ந்து நடப்பதிலும், ^+ர்திருத்தப்பணி மற்றும் பூமியை வலப்படுத்தும் பணியிலும் தங்கியுள்ளது. இதன் படி உலக வாழ்வென்பது மனிதனுக்கான ஒரு சோதனை மற்றும் பரீட்சை களம் என்பது தெளிவாகிறது. இதன் அடிப்படையிலேயே மனிதர்கள் அல்லாஹ்விடத்தில் வேறுபடுத்தப்படுவர். அதாவது அல்லாஹ் தனக்கு பயந்து கட்டுப்பட்டு வாழ்ந்தோரின் அந்தஸ்தை உயர்த்தி இந்தப் பூமியை ஆழவும் மறுமையில் அநந்தரமாக சொர்கத்தை பெறுவதற்கும் தகுதியுடையோராக மாற்றிவிடுவான். அதே வேளை அவனுக்கு கட்டுப்படாது குழப்பம் விளைவித்து நடப்போருக்கு இவ்வுலகிலகில் இழிவையும்,

மறுமையில் அவர்களுக்கான மீளுமிடத்தை நரகமாகவும் மாற்றிடுவான்.
அல்லாஹ் கூறுகிறான் :
"அவர்களில் அழகிய செயலுடையவர் யார் என அவர்களைச் சோதிப்பதற்காக பூமியின் மீது உள்ளவற்றை அதற்கு அலங்காரமாக நாம் ஆக்கியிருக்கின்றோம்". (அல் கஹ்ப் : 7).

**மனித படைப்பு குறித்த விவகாரத்தில் இரு பகுதிகள் காணப்படுகின்றன:**

முதலாவது : மனிதனுடன் தொடர்பான பகுதி : சுவர்க்கத்தை அடைந்து கொள்ளும் பொருட்டு அல்லாஹ்வுக்கு -கட்டுப்பட்டு- வணக்கத்தை நிறைவேற்றல். இது குறித்து தெளிவாக இறைவசனங்கள் மூலம் அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இரண்டாவது : படைப்பாளனுடன் தொடர்பான பகுதி : இது இறைபடைப்பின் நுட்பத்துடன் தொடர்பானது. அதாவது இறைபடைப்பின் நுட்பம் அவனுக்கே உரிய விவகாரம் என்பதையும், இது படைப்பினங்களுக்குரிய ஒரு விவகாரம் அல்ல என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். எமது அறிவோ வரையறுக்கப்பட்டது, குறைவானது. அதே வேளை அல்லாஹ்வின் அறிவு நிறைவானதும் முழுமையானதுமாகும். ஆகவே, மனிதன், மரணம், மரணத்தின் பின் மீண்டும் உயிர்பிக்கப்படுதல், மறுமை வாழ்வு ஆகியன அவனின் படைப்பில் மிகச்சிறிய ஒரு பகுதியாகும். இதுவும் அவனின் அதிகாரத்திற்கு உட்பட்ட விவகாரமாகும். மாறாக அவனின் படைப்புகளான மலக்குகள் (அமரர்கள்) அல்லது மனிதன் மற்றும் ஏனையோரின் விவகாரமல்ல என்ற யதார்தத்தை புரிந்து கொள்ளல் வேண்டும்.

ஆதமை இறைவன் படைக்கும் போது மலக்குகள் இது குறித்து கேட்க அதற்கான தெளிவானதும் முடிவானதுமான ஒரு பதிலை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியதை நாம் பின்வரும் வசனத்தில் காணுகிறோம்.

"(நபியே) இன்னும் உமது இரட்சகன் வானவர்களிடம் 'நிச்சயமாக பூமியில் நான் ஒரு தலைமுறையை தோற்றுவிக்கப்போகின்றேன்' என்று கூறியபோது: நாம்

உம் புகழைத் துதித்துக்கொண்டும், உன்னைத் தூய்மைப்படுத்திக்கொண்டுமிருக்க, அதில் குழப்பத்தை விளைவித்து இரத்தங்களை சிந்துவோரையா தோற்றுவிக்கப்போகின்றாய் ? என்று அவர்கள் கூறினார்கள். அதற்கவன் நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நான் நன்கறிவேன் எனக் கூறினான்". (பகரா : 30). இவ்வசனத்தில் குறிப்பிடப்பட்ட 'மலக்குகள் அறியாதவற்றை அவன் அறிகிறான்' என்ற மலக்குகளுக்கு அளித்த பதிலில் பல விடயங்கள் தொக்கி நிற்கிறது அவைகள் பின்வருமாறு : மனிதப்படைப்பின் நுட்பம் குறித்த விவகாரம் அல்லாஹ்வுடன் மாத்திரம் தொடர்பானது. இது குறித்த ஒட்டு மொத்த விடயமும் அல்லாஹ்வின் செயலாகும். இதில் படைப்பினங்களுக்கு எவ்விதத் தொடர்பபும் கிடையாது. "அல்லாஹ் நாடியதை செய்யக்கூடியவனாவான்" (அல்புரூஜ் : 16)

எனவே அவன் செய்பவற்றைப் பற்றி எவருமே அவனை விசாரிக்க முடியாது. எனினும், மனிதர்களாகிய அவர்களே (அவரவர்களுடைய செயலைப் பற்றி) விசாரிக்கப்படவிருப்போர் ஆவார். (அல் அன்பியா :23). மனிதப் படைப்பிற்கான காரணம் அல்லாஹ்வின் அறிவோடு மாத்திரம் சம்பந்தப்பட்ட ஒரு விடயமாகும். இதை மலக்குகள் கூட அறிய மாட்டார்கள். இந்த விடயமானது அல்லாஹ்வின் முழுமையான அறிவுடன் தொடர்பானதாக இருப்பதால் அதன் நுட்பம் மற்றும் காரணம் குறித்து அவனே மிகவும் அறிந்தவன். அவனின் (படைப்பில் அவனது அனுமதியின்றி எவரும் இதன் உண்மை நிலையை அறிய மாட்டார்கள்.

### *மனிதர்கள் இவ்வுலக வாழ்வின் இருப்பை அவர்கள் இல்லாத நிலையில் (இங்கு வர முன்னரே) தேர்ந்தெடுக்கும் வாய்ப்பை படைப்பாளன் ஏன் கொடுக்கவில்லை?*

மனிதர்கள் இவ்வுலக வாழ்வின் இருப்பை அவர்கள் இல்லாத நிலையில் (இங்கு வர முன்னரே) தேர்ந்தெடுக்கும் வாய்ப்பை படைப்பாளன் கொடுக்க விரும்பியிருந்தால் அவர்களின் இருப்புக்கான ஆரம்பம் ஒன்று இருந்திருக்க வேண்டும். மனிதன் இல்லாமையில் இருக்கும் நிலையில் அவனுக்கென்று எப்படி சுய அபிப்பிரயாம் ஒன்று இருந்திருக்க முடியும்;? இங்குள்ள பிரச்சினை இருப்புக்கும் இல்லாமைக்கும் இடையிலான பிரச்சினையாகும். ஒருவருக்கு வாழ்க்கையின்

மீதுள்ள பற்றுதலும், அதன் மீதான பயமும் இந்த அருளை அவர் திருப்தியோடு ஏற்றிருப்பதற்கான மிகப்பெரிய சான்றாகும். நிச்சயமாக வாழ்வெனும் அருளானது அல்லாஹ்வை வெறுத்து புறக்கணித்து வாழும் மோசமான மனிதனிலிருந்து அல்லாஹ்வை நேசித்து வாழும் சிறந்த மனிதனை வேறுபடுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு பரீட்சையாகும். ஆகவே, இறைபடைப்பின் நோக்கம் யாதெனில் அவனை ஏற்றுக் கொண்டோருக்கு மறுமையில் சுவர்க்கத்தை வழங்குவதே என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

மேலே குறிப்பிடப்பட்ட இந்த கேள்வியானது, சந்தேகம் மனதில் ஆழமாக பதிந்து விட்டால் தர்க்கரீதியாக சிந்திப்பதை தடுத்து விடும் என்பதை அறிவிக்கிறது. இது அல்குர்ஆனின் அற்புத சான்றுகளில் ஒன்றுமாகும்.

இது குறித்து அல்லாஹ் பின்வருமாறு கூறுகிறான் :
“நியாயமின்றிப் பூமியில் பெருமையடிப்போரை எனது அத்தாட்சிகளை விட்டும் நான் திருப்பி விடுவேன். அவர்கள் அத்தாட்சிகள் அனைத்தையும் பார்த்தாலும் அவற்றை நம்பிக்கை கொள்ளமாட்டார்கள். அவர்கள் நேர்வழியைக் கண்டாலும்- அறிந்தாலும்- அதை (தமது) வழியாக எடுத்துக் கொள்ளமாட்டார்கள். ஆனால் வழிகேட்டின் பாதையைக் கண்டால் அதனைத் தம் வழியாக எடுத்துக் கொள்வார்கள். அவர்கள் எமது அத்தாட்டசியை பொய்பித்ததும், அவற்றை அவர்கள் அலட்சியம் செய்பவர்களாக இருந்ததுமே இதற்குக் காரணமாகும்”. (அல் அஃராப் :146).

படைப்பின் இறை நுட்பத்தை அறிவது நாம் கோரும் உரிமைகளில் ஒன்றாக கருதுவதோ, அதை நாம் அறியாத விதத்தில் மறைத்து வைத்திருப்பது எமக்கு செய்யும் அநீதி எனக் கருதுவதோ சரியான நிலைப்பாடு அல்ல என்பதையும் விளங்கவேண்டும்.

எந்தக் காதும் கேட்காத, எந்தக் கண்ணும் பார்க்காத, மனித இதயத்தில் தோன்றாத- உதிக்காத- எல்லையற்ற பேரின்பம் நிறைந்த சொர்க்கத்தில இருப்பதற்கு, நித்திய வாழ்வின் வாய்ப்பை அல்லாஹ் நமக்கு அருளாக தந்திருக்கும் போது, இதில் என்ன அநியாயம் இருக்கிறது?

பேரின்பம் நிறைந்த சுவர்க்கத்தை தேர்ந்தெடுப்பதற்கும் அல்லது நரக வேதனையை தேர்ந்தெடுப்பதற்குமான, தீர்மானிக்கும் சுதந்திரத்தை அவன் எமக்களித்துள்ளான்!

இந்த பேரின்பத்தை அடைவதற்கும், வேதனையிலிருந்து தப்பிப்பதற்குமான வழிகளை, மிகத் தெளிவாக விளக்கும் பாதை வரைபடம் ஒன்றை எமக்களித்துள்ளதுடன் எம்மிடமிருந்து அவன் எதை எதிர்பார்க்கிறான் என்பதையும் எமக்கறிவித்துள்ளான்.

அல்லாஹ் சொர்கத்திற்கான பாதையில் செல்ல பல்வேறு வழிமுறைகளினூடாக ஊக்குவித்து, நரகத்தின் பாதையில் செல்வதை விட்டும் எம்மை மீண்டும் மீண்டும் எச்சரிக்கிறான்.

நாம் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக சொர்க்கவாசிகளின் சம்பவங்களையும், அவர்கள் எப்படி வெற்றிபெற்றார்கள் என்பதையும், நரகவாசிகளின் சம்பவங்களையும், அந்த வேதனைக்கு எவ்வாறு உட்பட்டடார்கள் என்பதையும் எமக்கு அல்லாஹ் கூறுகிறான்.

நாம் நன்கு விளங்கி படிப்பினை பெறவேண்டும் என்பதற்காக சுவனவாசிகள் மற்றும் நரகவாசிகளுக்கிடையில் நடக்கும் உரையாடல்கள் பற்றியும் எமக்கு அறியத்தருகிறான்.

ஒரு நன்மையான காரியத்திற்கு பத்து நன்மைகளையும், ஒரு தீய செயலுக்கு ஒரு தீமையையும் அளிப்பதன் மூலம் நாம் நன்மையான காரியங்களில் விரைந்து செயற்பட வேண்டும் என்பதை அறிவித்துத் தருகிறான்.

மேலும் அல்லாஹ் நாம் ஒரு தீமையான காரியத்தை தொடர்ந்து நன்மையான ஒரு காரியத்தை செய்தால் அந்த நன்மையான காரியம் அத்தீமையை அழித்துவிடுகிறது எனவும் எமக்கு அறியத்தந்துள்ளான். ஆகவே நாம் ஒரு நன்மைக்கு பத்து நன்மைகளைப் பெற்றுக்கொள்வதோடு எமது தீமையும் அழிந்து விடுகிறது.

தவ்பா (பாவமீட்சியானது) அதற்கு முன் செய்த தவறுகளை அழித்து விடுகிறது எனவும், பாவத்திலிருந்து பாவமீட்சி கோரியவன் எவ்விதப்பாவமும் அற்றவன் போலாவான் எனவும் எமக்கு அறியத்தந்துள்ளான்.

அது மாத்திரமின்றி நன்மையான காரியத்திற்கு வழிகாட்டுபவன் அக்காரியத்தை செய்பவனைப் போலாவான் என்ற நிலைக்கு அல்லாஹ் ஆக்கிவிடுகிறான்.

அல்லாஹ், நன்மைகளை பெற்றுக்கொள்வதை மிக இலகுவானதாக ஆக்கிவைத்துள்ளான். எனவே பாவமன்னிப்பு, தஸ்பீஹ், அஸ்கார்- இறை சிந்தனை- போன்றவையின் மூலம் மிகப்பெரும் நன்மைகளை அடைந்து கொள்ளவும் எவ்வித சிரமுமின்றி எமது பாவங்களிலிருந்து விடுதலை பெறவும் முடிகிறது.

அல்குர்ஆனின் ஒவ்வொரு எழுத்திற்கும் பத்து நன்மைகள் என எங்களுக்கு ஏற்படுத்திவைத்துள்ளான் நல்லகாரியத்தை செய்வதற்கு நினைப்பதற்கும் அதனை எம்மால் செய்ய முடியவில்லையாயினும் அதற்கும் எங்களுக்கு கூலி வழங்குகிறான். ஒரு தீமையை செய்ய நினைத்து அதனை செய்ய வில்லையென்றால் அத்தீமையை நினைத்ததற்காக எம்மை விசாரிக்க மாட்டான். நல்ல காரியத்தை செய்வதற்கு நாம் விரைந்து சென்றால் அவன் அதற்காக எமது நேர்வழியை அதிகரிக்கச் செய்வான், எமக்கு நல் வாய்ப்பைத் தருவான். (வெற்றியைத் தருவான்) நன்மையான வழிகளை இலகு படுத்தித் தருவதாகவும் எமக்கு அவன் வாக்களிக்கிறான்.

இத்துனை நன்மைகளையும் எமக்காக ஏற்படுத்தித் தந்திருக்கும் அல்லாஹ்வின் விடயத்தில் எதை அநீதி என கூறுவது?
உண்மையில் அல்லாஹ் எம்முடன் அவனின் நீதியினால் மாத்திரம் உறவாடவில்லை, மாறாக அவனின் கருணையினாலும் அவனின் தாராளத் தன்மையினாலும் அவனின் பேருபகாரத்தினாலும் எம்முடன் உறவாடுகிறான்.

# தனது அடியார்களுக்காக படைப்பாளன் திருப்தியுடன் ஏற்றுக்கொண்ட மார்க்கம் :

### *மார்க்கம் என்பது என்ன?*

மார்க்கம் என்பது ஒரு வாழ்க்கை முறையாகும். அது மனிதனை தனது படைப்பாளன் மற்றும் அவனை சூழவுள்ளவர்களுடனான தொடர்பை ஒழுங்குபடுத்துகிறது. அதுவே மறுமைக்கான ஒரே வழியாகவும் உள்ளது.

### *மார்க்கத்தின் அவசியம்-தேவை- என்ன?*

உணவு மற்றும் குடிபானத்திற்கான தேவையை விட மார்க்கத்தின் தேவை மிகவும் அவசியமாகும். அந்த வகையில் மனிதன் இயல்பிலேயே ஒரு மத(மார்க்க) வாதியாவன். எனவே அவன் சத்திய மார்க்கத்தை ஏற்றுப் பின்பற்றவில்லையெனில் மனிதர்கள் கண்டுபிடித்த சிலைவணக்கம் சார்ந்த மதங்களில் நடந்தது போல,அவனும் புதிதாக ஒரு மார்க்கத்தை உருவாக்கிடுவான். அத்துடன் மனிதனைப் பொருத்தவரை அவனின் மரணத்திற்கு பின்னுள்ள வாழ்வில் எப்படி பாதுகாப்பு தேவையோ அதே போல இந்த உலகத்திலும் அவனுக்கு பாதுகாப்புத் தேவையாகும்.

சத்தியமார்க்கமே அதனை ஏற்றுக்கொண்டோருக்கு ஈருலகிலும் பூரண பாதுகாப்பை வழங்குகிறது. இதனை பின்வரும் உதாரணங்களின் மூலம் விளக்க முடியும் :

1- நாம் ஒரு பாதையில் பயணிக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம். ஆனால் அப்பாதை எங்கு சென்று முடிவடைகிறது என்பதை நாம் அறியாதிருந்தால் எமக்கு முன் இரு தெரிவுகள் இருக்கும். ஒன்று பாதையில் போடப்பட்டிருக்கின்ற பதாகைகளின் அறிவுறுத்தல் பிரகாரம் செல்வது, அல்லது யூகித்து செல்ல முயற்சிப்பது. அவ்வாறு யூகித்து செல்வது சில போது இழப்பிற்கும் உயிராபத்திற்கும் வழிவகுத்துவிடலாம் என்பதே உண்மை.

2- நவீன தொலைக்காட்சிக் கருவியொன்றை வாங்கி அதன் அறிவுறுத்தல்களை சரியான முறையில் வாசிக்காது இயக்கினால் அதனை பழுதாக்கி விடுகிறோம். அந்த தொலைக்காட்சி கருவியை உற்பத்தி செய்த அதே நிறுவனம்தான் சரியாக இயக்க வேண்டும் என்பதற்கான அறிவுறுத்தல் புத்தகத்தையும் வெளியிடுகின்றது என்றால் நாம் அந்த புத்தகத்தின் அறிவுருத்தலின் பிரகாரமே பயன்படுத்துவது- இயக்குவது- அவசியமாகும்.

3- ஒரு நபர் மற்றொரு நபருடன் தொடர்பு கொள்ள விரும்புகிறார் என வைத்துக்கொள்வோம். தொடர்பு கொள்ளப்படவிருக்கும் நபர் மின்னஞ்சல் மூலம் அல்லாது தொலைபேசியில் பேசுமாறு வேண்டிக் கொள்கிறார் என்றால், அவருக்குரிய தனிப்பட்ட தொலைபேசி எண்ணைப் பயன்படுத்த வேண்டுமே தவிர அவரால் வேறு எந்த தொலைபேசி எண்ணையும் பயன்படுத்த முடியாது.
மேலே குறிப்பிடப்பட்ட உதாரணங்கள் யாவும் மனிதர்கள் தங்களது விருப்பத்திற்கு ஏற்ப மனோ இச்சைப்படி அல்லாஹ்வை வணங்க முடியாது என்பதை எடுத்துக்காட்டுகிறது. அவ்வாறு நடந்து கொள்வதினால் அவர்கள் மற்றவர்களுக்கு தீங்கிழைக்க முன்னரே தமக்கே தீங்கிழைத்துக்கொள்கிறார்கள். மக்களில் சிலர் அகிலங்களின் இரட்சகனோடு தொடர்பு கொள்ள மதத்தளங்களில் பாட்டு மற்றும் நடனம் ஆகியவற்றில் ஈடுபடுவதை நாம் காண்கிறோம். இன்னும் சிலர் தங்களது மத நம்பிக்கையின் படி கடவுளை விழிக்கச்செய்வதற்கு கைகளை தட்டுகிறார்கள். மேலும் சிலர் அல்லாஹ்வை வணங்க இடைத்தரகர்களை எடுத்துக் கொள்கிறார்கள். அவர்களின் நிலைப்பாட்டில் அல்லாஹ் மனித உருவத்தில் அல்லது செதுக்கப்பட்ட சிலை வடிவில் பிரதிபலிக்கிறான் என நம்புகிறார்கள். எவ்வித நலனையோ தீங்கையோ எமக்கு விளைவிக்க முடியாத இதுபோன்றவற்றை வணங்கி வழிபட்டு, மறுமையில் எமது அழிவிற்கும் நாசத்திற்கும் காரணமாக இருப்பவற்றிலிருந்து அல்லாஹ் எம்மை பாதுகாக்க விரும்புகிறான். ஆகவே அல்லாஹ்வுடன் அல்லாஹ் அல்லாதவற்றை சேர்த்து வணங்குவது மிகப்பெரும் பாவமாக கருதப்படுவதுடன் இதற்கான தண்டனை நிரந்தர நரகமாகும். நாம் அனைவரும் செல்லக்கூடிய ஒரு கொள்கையை – ஒழுங்கை –எமக்களித்து அதன் மூலம் அவனுடனான எமது தொடர்புகளையும் எம்மை சூழ உள்ளோருடனான தெடர்புகளையும் ஒழுங்குபடுத்திக் கொள்வதற்காக

தந்திருப்பது அல்லாஹ்வின் மகத்துவத்தை பறைசாட்டும் விடயமாகும். இதையே நாம் மார்க்கம் என்ற பெயரால் அழைக்கிறோம்.

### *சத்தியமார்க்கத்தின் இலட்சனங்கள் -பண்புகள்- யாவை?*

சத்தியமார்க்கமானது இடைத்தரகர்களின் எந்த ஒரு தலையீடுமின்றி படைப்பாளனுடன் மாத்திரம் நேரடியாக தொடர்பு கொள்ளக் கூடிய மனிதனின் முதல்-ஆரம்ப- உள்ளுணர்வுடன் இணங்கிச் செல்வதாக இருப்பதுடன் மனிதனில் நற்பண்புகளையும் சிறந்த குண இயல்புகளையும் பிரதிபலிக்க வேண்டும். அது எல்லா இடத்திற்கும் காலத்திற்கும் பொருத்தமாக இருப்பதோடு இலகுவானதாகவும் எளிமையானதாகவும், புரிந்து கொள்ளக் கூடியதாகவும், சிக்கலற்றதாகவும் இருக்க வேண்டும்.

ஒவ்வொரு காலத்திலும் மனித தேவைகேற்ப சட்டங்களின் பன்முகத்தன்மையை அங்கீகரித்து, எல்லா வகையான மனிதர்களுக்கும் தேசத்திற்கும், பரம்பரையினருக்குமான உறுதியான மார்க்கமாக இருக்க வேண்டும். பழக்கவழக்கங்கள் மற்றும் மரபுகளில் உள்ளதைப் போல, மனித விருப்பத்திற்கு ஏற்ப மார்க்கத்தில் ஒரு விடயத்தை அதிகரிப்பதையோ குறைப்பதையோ ஏற்றுக்கொள்ளாத ஒன்றாகவும் இருக்க வேண்டும். மார்க்காமனது தெளிவான கோட்பாடுகளை- நம்பிக்கைகளைக் கொண்டதாக இருக்க வேண்டும். இடைத்தரகர்களின் தேவை இருக்கக் கூடாது. அத்துடன் மார்க்கம் மன உணர்வுகளின் அடிப்படையில் அமையாது சரியான நிரூபிக்கப்பட்ட சான்றுகளின் அடிப்படையில் அமைந்திருந்தல் வேண்டும்.

மார்க்கமானது வாழ்வின் எல்லா விவகாரங்களையும், இடம் மற்றும் காலம் அனைத்தையும் உள்ளடக்கியதாகவும் இருத்தல் வேண்டும். ஈருலகற்கும் பொருத்தமானதாக இருப்பதுடன் ஆன்மாவில் மட்டும் கவனம் செலுத்தி உடலை மறந்திடாமல் இருக்க வேண்டும். மார்க்கமானது, மனிதர்களின் உயிர்களையும், அவர்களின் மானங்கள் மற்றும் உடமைகளையும் பாதுகாப்பதுடன் அவர்களின் உரிமைகள் மற்றும் அறிவாற்றலையும் மதித்து நடக்க வேண்டும். இயற்கை உள்ளுணர்வுடன் ஒன்றித்து செல்லும் இவ்வழிமுறையை யார் பின்பற்றி

ஒழுகவில்லையோ அவன் ஒருவகை குழப்பத்திலும், தடுமாற்றத்திலும் வாழ்வான். ஒரு வகை மனஅழுத்தத்தையும் உணர்வான். இம்மை வாழ்க்கையில் இப்பெடியன்றால் மறுமை வாழ்க்கையில் எவ்வாறிருக்கும்!

மாரக்கத்தின் நிழலில் பண்பாடுகளை பின்பற்றி ஒழுகுவதன் முக்கியத்துவம் என்ன?

மனித இனம் அழிந்ததும் நித்திய ஜீவனான அல்லாஹ்வைத் தவிர வேறு எதுவும் இப்பிரபஞ்ஞுத்தில் எஞ்சியிருக்காது. மார்க்கத்தின் நிழலின் கீழ் பண்பாடுகளை கடைப்பிடித்து ஒழுகுவது முக்கியமல்ல என்று கூறுபவர் 12 வருடமாக வகுப்பறையில் படித்துவிட்டு இறுதியில் கல்விச் சான்றிதழ் தேவையில்லை என்று கூறுபவருக்கு ஒப்பான ஒருவராகவே கருதப்படுவார்.

அல்லாஹ் கூறுகிறான் :

"(இன்னும்; நாம் அவர்கள் (இம்மையில்) செய்த செயல்களின் பக்கம் முன்னோக்கி அவற்றை (நன்மை எதுவும் இல்லாது) பரத்தப் பட்ட புழுதியாக ஆக்கிவிடுவோம் (பயனற்றதாக ஆக்கி விடுவோம்)" (ஃபுர்கான் : 23). பூமியை வளப்படுத்தலும், நற்பண்பும் இம்மார்க்கத்தின் பிரதான இலக்கு அல்ல. யதார்த்தத்தில் அவை இரண்டும் சாதனமே! ஆகவே மனிதன் தனது இரட்சகனைப் பற்றியும் பின் அவனின் இருப்பு மற்றும் அவன் செல்லும் பாதை அவன் இறுதியில் சென்றடையவிருக்கும் இடம் பற்றி அறிமுகப்படுத்துவதே இம்மார்ககத்தின் நோக்கமாகும். அகிலங்களின் இரட்சகனை வணங்கி அவனின் திருப்தியை பெறுவதினூடாக மாத்திரமே நல்ல முடிவும் சிறந்த பேறும் கிடைக்கிறது. ஆகவே பூமியை வளப்படுத்துவதும் நன்னடத்தையும் இதற்கான சிறந்த வழிகளாகும். அத்துடன், இதனுடன் இணைந்ததாக அடியார்களின் செயற்பாடுகள் யாவும் அல்லாஹ்வின் திருப்தியை மைய்யபடுத்தியதாகவே இருப்பது அவசியமாகும். இதற்கு பின்வரும் உதாரணத்தை குறிப்பிடலாம்.

ஒரு நபர் சமூக காப்பீட்டு நிறுவனத்தில் ஓய்வூதியம் பெறுவதற்காக இணைநதிருக்கிறார். (பதிவு செய்யப்பட்டுளார்) என்று வைத்துக்கொள்வோம். அந்த நிறுவனம் ஓய்வூதியத்தை செலுத்த முடியாது என்றும் விரைவில் மூடப்படும் என்று ஓய்வூதியத்தை பெருனர்களுக்கு ஓர் அறிவித்தலை வெளியிடுகிறது.

இதனை பயணாளி அறிந்தால் அந்த நிறுவனத்துடன் தொடர்ந்தும் தொடர்புகளை வைத்துக் கொள்வாரா?

மனித குலத்தின் அழிவு தவிர்க்க முடியாதது என்பதை ஒருவன் எப்போது அறிந்து கொண்டானோ, இறுதியில் அவன் புரிந்த மனித நேய செயற்பாடுகளுக்கான வெகுமதியை பெற்றுக் கொள்வது இயலாத காரியம் என்பதையும், தான் மனித சமூகத்திற்கு ஆற்றிய பணிகள் யாவும் பயனற்றதாக மாறிவிடுவதை கண்டு கொள்வான். இதனால் அவன் பெரும் தோல்வியை, ஏமாற்றத்தை உணர்வான். ஓர் இறைவிசுவாசியைப் பொருத்தவரை அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை எதிர்பார்த்து மக்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்பவர், மனித இனத்திற்கு உதவி செய்து அதற்காக பாடுபடுபவர். இதன்விளைவாக அவர் இம்மை மறுமையின் பேற்றை அடைந்து கொள்வார். ஓர் ஊழியன் தொழில் தருனருடனான உறவை அலட்சியம் செய்து –சிறந்த முறையில் நடந்து கொள்ளாது- தனது சக தொழில் நண்பர்களுடன் உறவைப் பேணுவதில் எவ்விதப் பயனும் கிடையாது. இந்த அடிப்படையில் எமது வாழ்வில் நற்பேற்றை பெற்றுக் கொள்ளவும், பிறரால் நாம் மதிக்கப்படுவதற்கும் எம்மைப் படைத்த இரட்சகனுடான எமது தொடர்பு மிகவும் சிறப்பானதாகவும், பலமானதாகவும் இருப்பது அவசியமாகும். மேலும் ஒரு மனிதன் பண்பாடுகளை கடைப்பிடித்து ஒழுகவும் சமூக பெருமானங்களை எடுத்து நடக்கவும், சட்டங்களையும், பிற மனிதர்களையும மதித்து நடக்கவும் தூண்டும் உந்து சக்தி என்ன? அல்லது மனிதனை வரையறைக்குள் நின்று தீமையல்லாத நல்ல காரியத்தை மாத்திரம் செய்ய நிர்ப்பந்திருக்கும் தூண்டற் காரணி என்ன?என்பதை ஒரு கனம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இதற்கான பதில், சட்டத்தின் அதிகாரத்தினால் இவை நிகழ்கிறது என அவர்கள் கூறினால், சட்டம் எல்லா நேரங்களிலும் இடங்களிலும் ஆதிக்கம் செலுத்துவதில்லை என்று பதில் கூறுகிறோம், அத்துடன் தேசிய மற்றும் சர்வதேச மட்டங்களில் உள்ள அனைத்து சர்ச்சைகளையும் தீர்க்க சட்டம் மட்டும் போதாது. பெரும்பாலான மனித நடவடிக்கைகள் மற்றும் செயற்பாடுகள் யாவும் சட்டம் மற்றும் மக்களின் பார்வைக்கு அப்பால் நடை பெறுகிறது!. மார்க்கம் மனிதனின் -மதம்- முக்கியத் தேவை என்பதற்கு, பெருந்தொகையான மதங்கள் இருப்பது என்ற ஒரு சான்றே போதுமானது. அதாவது இந்தப் புவிப்பந்தில் வாழும் பெரும்பாலான சமூகங்கள் தனது வாழ்வை ஒழுங்குபடுத்திக்கொள்ளவும் குறிப்பிட்ட மத ஒழுங்கின்

அடிப்படையில் தனது குடிமக்களின் நடவடிக்கைகளை ^+ரமைத்துக் கொள்ளவும் ஒரு குறிப்பிட்ட மதத்தை தேர்வுசெய்து அதனுள் அடங்கியிருப்பதையும் காணுகிறோம். அதே போன்று சட்டம் மறைந்து இருக்கும் வேளையில் மத நம்பிக்கை ஒன்றே மனிதனை கட்டுப்படுத்தும் ஒரே அளவுகோளாக -தடுப்பானாக- இருப்பதை நாம் அறிகிறோம். சட்டத்தைப் பொருத்தவரை அது எந்த இடத்திலும் எந்நேரமும் மனிதனுடன் இருக்காது என்பதே யதார்த்தமாகும். மனிதனைக் கட்டுப்படும் ஒரே தடுப்பானாகவும் கட்டுப்படுத்தும் கருவியாகவும் இருப்பது அவனை அவதானித்து அது குறித்து விசாரிக்கும் ஒருவன் உள்ளான் என்ற உள்ளார்ந்த விசுவாசமாகும். இந்த நம்பிக்கையானது அடிப்படையில் ஒரு மனிதனின் உள்ளத்தில் புதைந்தும், ஆழப்பதிந்தும் காணப்படும். இந்நம்பிக்கை ஒரு நபர் ஒரு தவறை செய்ய முனையும் போது அவனிடத்தில் வெளிப்படும். அப்போது அவனிடத்தில் காணப்படும் நன்மை மற்றும் தீமையின் மனப்பாங்குகள் முரண்பட்டுக் கொள்ளும். இதனால் மக்களின் கண்களை விட்டும் அவமானமிக்க செயலை மறைப்பதற்கும், ^+ரிய இயல்பூக்கம் மறுக்கும்- அசிங்கமானதாகக் கருதும்- எந்தச் செயலையும் மறைப்பதற்கு முயலும். மேற்குறிப்பிடப்பட்ட விடயங்கள் யாவும் மார்க்கத்தின் புரிதல், மற்றும் நம்பிக்கை ஆகியவை மனித உள்ளத்தில் ஆழமாக உள்ளது என்பதற்கான உண்மை சான்றாக அமைந்துள்ளது.

ஆகவே மனிதனால் இயற்றப்பட்ட சட்டங்களினால் நிரப்ப முடியாத இடைவெளியை நிரப்பவும், கால இட வேறுபாடுகளுக்கு ஏற்ப மனித உள்ளங்களையும் மனித மனத்தையும் வழுப்படுத்தவுமே மார்க்கம் வந்துள்ளது.

மனிதனில் காணப்படும் இயக்க சக்தி அல்லது உந்து சக்தி ஒரு நல்ல காரியத்தை புரிவதில் மனிதனுக்கு மனிதன் வேறுபட்டிருப்பதை காண முடிகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு செயலை செய்யவும், குறிப்பிட்ட பண்பாடுகளை, பெருமானங்களை கடைப்பிடித்து ஒழுகவும், அவனுக்கேயுரிய உந்துசக்தியும், தனியான நலன்களும் பின்னனியாக அமைகிறது. உதாரணத்திற்கு :

தண்டனை என்பது பிற மனிதர்களுக்கு தீங்கிழைப்பதை தடுத்துக் கொள்ளும் ஒரு அரணாக காணப்படுகிறது.

வெகுமதி என்பது: ஒரு மனிதன் நல்ல காரியத்தைப் புரிவதற்கு ஆர்வத்துடன் முன் செல்ல உந்துசக்தியாக காணப்படுகிறது.

சுய–ஆன்ம திருப்தி: என்பது உணர்ச்சிகள் மற்றும் ஆசைகளில் இருந்து தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்கான அளவுகோளாகும். மனிதனைப் பொருத்தவரை அவனுக்கு மனநிலை மற்றும் உணர்ச்சிகள் உள்ளன, இன்று அவன் விரும்புவதை நாளை விரும்பாமல் இருக்கலாம்.

சன்மார்க்க கட்டுப்பாடு: அல்லாஹ்வைப் பற்றிய அறிவு, அவனைப் பற்றிய பயம் மற்றும் மனிதன் எங்கு சென்றாலும் அல்லாஹ் தன்னுடன் இருக்கிறான் என்ற உணர்வையும் இது குறிக்கிறது. இது பலமான உந்துசக்தியாகவும் ஆக்கபூர்வமான விடயமாகவும் உள்ளது (Atheism a giant leap of faith Dr. Raida Jarrar.)

மனித உணர்வுகளை, சிந்தனைகளை சாதகமாகவோ பாதகமாகவோ இயக்குவதில் மதத்திற்கு பெரும் ஒரு தாக்கம் உண்டு. இது, மனித இயல்பின் அடிப்படை அல்லாஹ்வை அறிந்து கொள்வதில் அமையப்பெற்றுள்ளது என்பதை சுட்டிக்காட்டுகிறது. அதிகமான தருணங்களில் விரும்பியோ விரும்பாமலோ மனிதனை இயக்குவதற்கு ஒரு தூண்டற்காரணியாக மதமானது பயண்படுத்தப்படுகிறது. இந்நிலையானது ஒரு பேருண்மையை படம் பிடித்துக் காட்டுகிறது. மனிதன் தனது படைப்பாளனுடன் இயல்பில் தொடர்புள்ளவனாக இருப்பதால் அவனது உணர்வில் மதத்தின் முக்கியத்துவம் இன்றியமையாத ஒன்று என்பதை எமக்குக் எடுத்துக் காட்டுகிறது.

### *மதத்தை ஏற்பது பகுத்தறிவு மற்றும் மெய்யியல் ஆகியவற்றை செயலிழக்கச் செய்துவிடுமா?*

உண்மையில் பகுத்தறிவின் பங்களிப்பு என்பது நடக்கும் விவகாரகங்களில் தீர்ப்புக்கூறி அதனை உண்மைப் படுத்துவதாகும். உதாரணத்திற்கு பகுத்தறிவு மனித இருப்பின் இலக்கை அடைந்து கொள்ள இயலாமல் இருப்பது அதன் பங்களிப்பை ஒரு பொழுதும் இரத்து செய்துவிடாது.

மாறாக தனக்கு புரிந்து கொள்ள இயலாதவற்றை புரிந்து கொள்ள மார்க்கத்திற்கு இதற்கான அவகாசத்தை வழங்குகிறது. மார்க்கமானது படைப்பாளன் பற்றியும் மனிதனின் அடிப்படை குறித்தும் இவ்வுலகின் அவனது இருப்பின் நோக்கம் குறித்தும் கற்றுக் கொடுக்கிறது. இதனை பகுத்தறிவானது புரிந்து தீர்ப்பளித்து அத்தகவல்களை உறுதிப்படுத்திக் கொள்கிறது. இதன் மூலம் படைப்பாளனின் இருப்பை ஏற்றுக்கொள்வது ஒருபோதும் பகுத்தறிவைய்யும் தர்க்கத்தையும் செயலிழக்கச்செய்து விடாது என்பதே யதார்த்தமாகும்.

மனிதர்கள் மார்க்கத்திற்குப் பதிலாக பரிசோதனை அறிவியலை ஏன் ஏற்றுக்கொள்ள முடியாது.

தற்காலத்தில் அதிகமான மனிதர்கள், ஒளியானது காலத்திற்கு அப்பால் பட்ட ஒரு விடயம் என நம்பிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் படைப்பாளனான இறைவன் காலம் மற்றும் இடம் ஆகிய விதிகளுக்கு உட்படாதவன் என்பதை ஏற்றுக் கொள்வதில்லை. அதாவது அல்லாஹ் எல்லாப் பொருட்களும் படைக்கபட முன் ஆரம்ப கர்த்தாவாகவும் எல்லாப் படைப்பினங்களின் இறுதியானவனாகவும் உள்ளான். அவனின் படைப்புக்கள் எதனாலும் அவனை முழுமையாக அறிந்திட முடியாது.

அத்துடன் இணைக்கப்பட்ட மூலக்கூறுகள், சிலவற்றிலிருந்து சிலது பிரிக்கப்படும் வேளை அவை தொடர்ந்தும் ஒன்றோடொன்று தொடர்பில் இருக்கின்றன என பலர் நம்புகிறார்கள். அதே போன்று படைப்பாளனான இறைவன் தனது அறிவால் அடியார்களுடன் -அவர்கள் எங்கு சென்றாலும்-இருக்கிறான் என்ற கருத்தை நம்புவதில்லை! ஒருவருக்கு புத்தியுள்ளது என்பதை காணாமலே ஏற்கும் பலர் இறைவனை காணாது நம்புவதை ஏற்க மறுப்பது ஆச்சரியமான விடயமாகும். வேற்றுக் கிரகங்கள் இருப்பதை காணாமலே ஏற்கும் பலர் சுவர்க்கம் நரகம் இருப்பதை ஏற்றுகொள்ள மறுக்கின்றனர்!. பௌதீக அறிவியலானது காணல் போன்ற அடிப்படையிலே இல்லாத ஒன்றை ஏற்று நம்புமாறு கூறுகையில் அதனை நம்பி மனிதன் ஏற்றுக்கொள்கிறான். ஆனால் மரணத்தின் போது அவர்களுக்கு இல்லை என்று நிரூபிக்க பயன்பட்ட பௌதிகவியலோ (உயிரியல்), இராசயனவியலோ (வேதியல்) மனிதனுக்கு ஒரு போதும் பயனளிக்கமாட்டாது.

ஓர் எழுத்தாளரின் இருப்பை அவரின் புத்தகத்தை அறிந்து கொள்வதால் மாத்திரம் மனிதனுக்கு பொய்பித்திட முடியாது. அறிவியலானது பிரபஞ்ச விதிகளை கண்டுபிடித்தது. ஆனால் அதனை நிறுவவில்லை. ஏனெனில் படைப்பாளனே அதனை நிறுவியவன்.

பௌதிகவியல் மற்றும் இரசாயனவியல் துறைகளில் உயர் பட்டம் பெற்ற சிலரில் இறை நம்பிக்கையாளர் உள்ளனர். அவர்களைப் பொருத்தவரை இந்த பிரபஞ்ச விதிகளுக்கு அப்பால் மகத்தான ஒரு படைப்பாளன் இருப்பதை அவர்கள் அறிந்துள்ளனர். சடவாதிகள் நம்பும் பௌதீக அறிவியலானது இறைவன் படைத்த பிரபஞ்ச விதிகளைக் கண்டுபிடித்துள்ளது. ஆனால் அறிவியலானது அவ்விதிகளை படைக்கவில்லை என்பதை உணர வேண்டும். கடவுளால் உருவாக்கப்பட்ட இந்த விதிகள் இன்றி விஞ்ஞானிகள் ஆய்வு செய்வதற்கான எதுவும் கிடையாது. இறைவிசுவாசம் இம்மையிலும் மறுமையிலும் விசுவாசிகளுக்கு நன்மை பயக்கும் அதே வேளையில், பிரபஞ்ச விதிகளை அறிந்து கற்றுக் கொள்வதன் மூலமாக அவர்களின் படைப்பாளன் மீதான நம்பிக்கை அதிகரிக்கும்.

ஒரு நபர் கடுமையான சளிக்காய்ச்சலால் அல்லது சாதாரண காய்ச்சலால் பாதிக்கப்பட்டால் சில வேளை ஒரு கோப்பை தண்ணீரைக் கூட குடிக்க முடியாத நிலை அவருக்கு ஏற்படும். இவ்வாறான பலவீனம் இருக்கும் நிலையில் தனது படைப்பாளனுடனான உறவு தேவையில்லை என்று அவனால் எப்படி இருக்க முடியும்?

விஞ்ஞானம் எப்போதும் தொடர் மாற்றத்திற்கு உட்படுபவை. புதிய கண்டுபிடிப்புகள் முந்தைய கோட்பாடுகளை முறியடிப்பதால், அறிவியலில் மாத்திரம் முழுமையான நம்பிக்கை கொள்வது அடிப்படையில் ஒரு பிரச்சினையாக உள்ளது. அறிவியல் என நாம் படித்தவற்றில் சில இன்னும் கோட்பாடாகவே இருக்கிறது! அவ்வாறு அறிவியல் கண்டுபிடித்தவை அனைத்தும் உறுதியானதும் துல்லியமானதுமாகும் என நாம் வைத்துக் கொண்டாலும் எமக்கு ஒரு சிக்கல் தொடரந்தும் இருந்து கொண்டிருக்கிறன. தற்போதைய அறிவியலானது படைப்பாளனை மறந்து விட்டு கண்டுபிடிப்பாளருக்குத்தான்

எல்லா கண்ணியத்தையும், மரியாதையையும் வழங்குகிறது! இதற்கு பின்வரும் உதாரணமொன்றைக் குறிப்பிட முடியும். யாராவது ஒரு நபர் ஒரு அறையினுள் நுழைந்து அங்கே நேர்த்தியாக செய்யப்பட்ட அழகான ஒரு ஓவியத்தை கண்டெடுக்கிறார் என வைத்துக்கொள்வோம். பின்னர் வெளியே வந்து மக்களிடம் கண்டெடுத்த அந்த ஓவியம் பற்றி கூறுகிறார். அவர் கண்டெடுத்த அந்த ஓவியத்தைப் பார்த்து அனைவரும் ஆச்சரியப்படுகின்றனர். ஆனால் அவர்கள் ' இந்த ஓவியத்தை வரைந்தவர் யார்?' என்ற மிக முக்கிய கேள்வியை கேட்க மறந்து விடுகின்றனர். இவ்வாறுதான் இறை படைப்புகள் குறித்த விடயத்திலும் மனிதர்கள் நடந்து கொள்வதை நாம் பார்க்கிறோம். இயற்கை மற்றும் விண்வெளி விதிகள் தொடர்பான அறிவியல் கண்டுபிடிப்புகளால் ஈர்க்கப்பட்ட மனிதர்கள் இந்த விதிகளை உருவாக்கியவனின் துள்ளியமான படைப்பாற்றலை மறந்துவிடுகிறார்கள். அறிவியல் மூலம் மனிதன் ஒரு ஏவுகணையை செய்யலாம். ஆனால் அந்த அறிவின் மூலம் ஓவியத்தின் அழகிற்கு தீர்ப்பளிக்கவோ, பொருட்களின் பெறுமதியை அளவீடு செய்திடவோ, நன்மை தீமை பற்றி அறியத்தரவோ அதனால் ஒரு போதும் முடியாது. அறிவியல் மூலம் தோட்டா கொல்லும் என நாம் தெரிந்து வைத்திருக்கிறோம். ஆனால் மற்றவர்களை கொல்வதற்காக அதனைப் பயன்படுத்துவது தவறு என்பதை நாம் அறிவதில்லை. பிரபல இயற்பியலாளர் எல்பர்ட் ஐஸ்டீன் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: 'அறிவியல் அறநெறியின் (ஒழுக்கத்தின்) ஆதாரமாக இருக்க முடியாது. அறிவியலுக்கு தார்மீக அடித்தளங்கள் உள்ளன என்பதில் சந்தேகமில்லை, ஆனால் அறநெறிக்கான அறிவியல் அடித்தளங்களைப் பற்றி எம்மால் பேச முடியாது. அற நெறியை அறிவியல் கோட்பாடுகளுக்கும் அதன் சமன்பாடுகளுக்கும் உட்படுத்தும் எல்லா முயற்சிகளும் தோல்வியடைந்துவிட்டது. எதிர்காலத்திலும் அது தோல்வியடையும். பிரபல ஜேர்மன் தத்துவஞானி இமானுவேல் கான்ட் கூறுகிறார்: 'கடவுள் இருப்பதற்கான தார்மீக ஆதாரம் நீதியின்படி நிறுவப்பட்டது, ஏனென்றால் நல்லவருக்கு வெகுமதி அளிக்கப்பட வேண்டும், தீயவர் தண்டிக்கப்பட வேண்டும். இது ஓர் உயர்ந்த மூலத்தின் முன்னிலையில், ஒவ்வொரு நபரும் அவர் செய்தவற்றைப் பற்றி விசாரிக்கப்படும்போதே இது உண்மையில் நிகழும். அதே போல் நல்லொழுக்கமும், மகிழ்ச்சியும் ஒன்றிணைவதற்கான அடிப்படையைக் கொண்டவை. அவை இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒன்றின் ஆளுகைக்கு கீழ் இருந்தாலேயன்றி ஒன்றினைய முடியாது. அவர்தான் யாவற்றையும் அறிந்த

எல்லாவற்றிலும் ஆற்றல் படைத்த கடவுளாவார். இவ்வாறான உயர் மூலத்தைக் கொண்ட இயற்கைக்கு அப்பால் இருக்கும் ஒருவரே கடவுளாக பிரதிபலிக்க தகமையுடயவராவார்.

### *மதம் என்பது மக்களுக்கு அபினா? மதம் மக்களுக்கு போதையா?*

உண்மை என்னவென்றால், சன்மார்க்கம் -மதம்- ஒரு கடமையும் பொறுப்பும் ஆகும். அது மனசாட்சியை விழிப்படையச் செய்கிறது, மேலும் ஒவ்வொரு சிறிய மற்றும் பெரிய விஷயத்திலும் தன்னை சுயவிசாரணை செய்து கொள்ளும்படிவிசுவாசியைதூண்டுகிறது.விசுவாசிதனக்கும்,தன்குடும்பத்துக்கும், தன் அண்டை வீட்டாருக்கும், பாதையில் செல்லும் வழிப்போக்கனுக்கும் கூட பொறுப்பானவனாவான். அவன் தான் விரும்பும் விடயங்களை அடைந்து கொள்வதற்கு தேவையான அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொண்ட பின்னர் கடவுளின் மீது அக்காரியங்களை ஒப்படைக்கிறான், இவ்வாறான செயற்பாடு அபினுக்கு அடிமையானோரின் குணாதிசயங்களில் ஒன்று என்று நான் நினைக்கவில்லை. (கலாநிதி அம்ரு ஷரீபின் குராபதுல் இல்ஹாத் -பதிப்பு -2014 (நாஸ்தீக மூடநம்பிக்கை) என்ற நூலிலிருந்து பெறப்பட்டது.). அபின் என்பது ஹெராயின் தயாரிக்கப் பயன்படும் கசகசா செடியிலிருந்து பிரித்தெடுக்கப்படும் ஒரு போதைப் பொருளாகும்.

மக்களின் உண்மையான அபின் போதை மத நம்பிக்கையல்ல, மாறாக நாத்திகவாதமாகும். நாத்திகம் தன்னைப் பின்பற்றுபவர்களை சடவாதத்திற்கு அழைக்கிறது. மதத்தை நிராகரிப்பதன் மூலமும், பொறுப்புகளையும் கடமைகளையும் கைவிட்டு, அதன் விளைவுகளைப் பொருட்படுத்தாமல் அவர்கள் வாழும் தருணத்தை அனுபவிக்கும்படி அவர்களைத் தூண்டுவதன் மூலமும் இறைத்தண்டனையைப் பொருட்படுத்தாது படைப்பாளனுடனான அவர்களின் உறவை புறந்தள்ளுகிறது. உலகத் தண்டனையிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும் என்ற நிலை இருக்கையில் தன்னை கண்காணிக்கவும் விசாரிக்கவும் எவரும் கிடையாது, மற்றும் மரணத்தின் பின் உயிர்த்தெழுதல் மறுமை விசாரணை ஆகியன இல்லை என்ற நம்பிக்கையில் அவர்கள் விரும்பியதை செய்வரார்கள். அது உண்மையில் அபினுக்கு அடிமையானோரின் பண்புகளில்

உள்ளவையல்லவா?

### *உண்மை மார்க்கத்தை வேறுபடுத்தி அறிந்து கொள்வது எவ்வாறு?*

ஏனைய மதங்களிலிருந்து உண்மை மார்க்கத்தை பின்வரும் மூன்று விடயங்களினூடாக வேறுபடுத்தி அறிந்திட முடியும் :

இந்த மார்க்கத்தின் படைப்பாளனின் பண்புகள் அல்லது கடவுளின் பண்புகள்.
இறைத்தூதர் அல்லது தீர்க்கதரிசியின் பண்புகள்.
தூதுத்துவத்தின் உள்ளடக்கம்.

வின்னுலகத்தூது அல்லது சன் மார்க்கம் என்பது படைப்பாளனுக்குரிய அழகியதும் கண்ணியமானதுமான பண்புகளுக்கான வர்ணனயையும், விளக்கத்தையும் பெற்றிருப்பதோடு அவனைப் பற்றியும் அவனது மெய்நிலை குறித்தும் அவனின் இருப்புக்கான சான்றுகளையும் உள்ளடக்கியிருப்பது அவசியமாகும்.

“(நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராகஃ அல்லாஹ் ஒருவன்தான். அல்லாஹ் எவ்விதத் தேவையுமற்றவன். அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவருக்கும்) பிறக்கவுமில்லை. அவனுக்கு நிகராக எதுவுமில்லை”((இஃலாஸ் : 1- 4). “அவன்தான் அல்லாஹ் (உண்மையாக) வணங்கப்படத் தகுதியானவன் அவனையன்றி வேறுயாரும் இல்லை. (அவன்) மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் நன்கறிபவன். அவன் அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையவன். அவன் தான் அல்லாஹ் (உண்மையாக) வணங்கப்படத் தகுதியானவன். அவனையன்றி வேறு யாரும் இல்லை.(அவனே) ஆட்சியாளன், பரிசுத்தமானவன், சாந்தியளிப்பவன், பாதுகாப்பவன், கண்காணிப்பவன் யாவற்றையும் மிகைத்தவனும், அடக்கியாளுபவனும், பெருமைக்குரியவனுமாவான்.அவர்கள் இணைவைப்பதை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன். அவனே அல்லாஹ் (அவனே) படைப்பாளனும், தோற்றுவிப்பவனும், உருவமைப்பவனுமாவான், அவனுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன. வானங்கள் மற்றும் பூமியில் இருப்பவைகள் அவனைத் துதிக்கின்றன. அவன் யாவற்றையும் மிகைத்தவன்,

ஞானமிக்கவன். (அல் ஹஷ்ர் 22-24).

தூதர் மற்றும் அவரின் பண்புகள் தொடர்பான விடயத்தை பொருத்தவரை மார்க்கம் அல்லது இறைத்தூது விளக்கமளிக்கிறது:

1. 1- படைப்பாளன் (இறைவன்) தனது தூதருடன் தொடர்புகொள்ளும் முறை குறித்து இறைத் தூது (மார்க்கம்) பின்வருமாறு விளக்குகிறது :
   "நான் உம்மை (என் தூதராகத்) தேர்ந்தெடுத்துக் கொண்டேன். ஆதலால், வஹி மூலம் (உமக்கு) அறிவிக்கப்படுவதற்கு செவிசாய்ப்பீராக". (தாஹா : 13).
2. தீர்க்கதரிசிகள் மற்றும் இறைத்தூதர்கள் அல்லாஹ்விடமிருந்து பெற்றவற்றை மக்களுக்கு எத்திவைக்கும் பொறுப்பை ஏற்றவர்கள் என்பதை இறைத்தூது தெளிவுபடுத்துகிறது.
   "தூதரே உமது இரட்சகனிடமிருந்து உமக்கு இறக்கிவைக்கப் பட்டதை எடுத்துரைப்பீராக". (மாஇதா : 67)
3. தூதர்கள் தங்களை வணங்குவதற்காக மக்களை அழைக்க வரவில்லை, மாறாக அல்லாஹ் ஒருவனை மாத்திரமே வணங்க வேண்டும் என்பதின் பால் அவர்களை அழைக்கவே வந்தார்கள் என்பதை இறைத்தூது தெளிவுபடுத்துகிறது.
   "எந்த ஒரு மனிதருக்கும் அல்லாஹ் வேதத்தையும், ஞானத்தையும், நபித்துவத்தையும் வழங்கியிருக்க பின்னர் அவர் மக்களிடம் அல்லாஹ்வை விட்டுவிட்டு எனக்கே அடிமைகளாக இருங்கள்' எனக் கூறுவதற்கு அவருக்கு அதிகாரம் இல்லை. ஆகவே நீங்கள் வேதத்தைக் கற்றுக்கொடுப்பவராக இருப்பதாலும் கற்றுக் கொண்டிருப்பதனாலும் இரட்சகனை சார்ந்தோராக நீங்கள் ஆகிவிடுங்கள்' என்றே கூற வேண்டும்".(ஆல இம்ரான் : 79).
4. நபிமார்களும், இறைத்தூதர்களும் வரையறுக்கப்பட்ட மனித முழுமைத்துவத்தின் உச்சத்தில் உள்ளார்கள் என்பதை உறுதிப்படுத்துகிறது.
   "நிச்சயமாக நீர் மகத்தான நற்குணமுடையவராகவே இருக்கிறீர்". (கலம் : 4).
5. இறைத்தூதர்கள் மனிதர்களுக் கான மனித முன்மாதிரியை பிரதிபலிப்பவர்கள் என்பதை உறுதிப்படுத்துகிறது.

"உங்களில் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் ஆதரவு வைத்து அல்லாஹ்வை அதிகம் நினைவுகூறுவோருக்கு அல்லாஹ்வின் தூதரிடம்

நிச்சயமாக அழகிய முன்மாதிரி இருக்கின்றது". (அஹ்ஸாப் :21).

எந்த ஒரு மதத்தினதும் வேதவாசகங்கள் அதன் தீர்க்கதரிசிகள் விபச்சாரம் புரிவோர், கொலையாளிகள், அல்லது இரத்த வெறியர்கள் மற்றும் துரோகிகள் என குறிப்பிட்டால் அந்த மதத்தை ஏற்றுக்கொள்வது சாத்தியமில்லை. அதே போன்று எந்த ஒரு மதத்தினதும் வேத வசனங்கள் மோசமான அருவருப்பான கருத்துக்களை கொண்டதாக இருப்பின் அந்த மதத்தையும் ஏற்றுக்கொள்வது சாத்தியமில்லை.

தூதுத்துவத்தின் உள்ளடக்கத்தைப் பொறுத்தவரை அது பின்வரும் விடயங்களினால் தனித்துவம் பெற்றிருக்க வேண்டும் :

**1. படைப்பாளனான இறைவன் பற்றிய அறிமுகம்.**

உண்மை மதமானது ஒரு போதும் அதன் இறைவனை அவனின் கண்ணியத்திற்கு பொருந்தாத பண்புகளால் வர்ணிக்கவோ அல்லது அவனின் அந்தஸ்த்தை – மகிமையை-குறைக்கும் விதத்திலோ குறிப்பிட மாட்டாது. அதாவது இறைவனை ஒரு கல்லின் வடிவத்திலோ அல்லது ஒரு மிருகத்தின் வடிவத்திலோ, அல்லது அவனுக்கு பெற்றோர்கள், மற்றும் மனைவி உள்ளதாகவோ அல்லது அவனது படைப்பில் அவனுக்கு ஒப்பானவை உள்ளது என்பது போன்ற அவனின் கண்ணியத்தை குறைத்து மதிப்பிடும் விடயடங்களை குறிப்பிடமாட்டாது.

"அவனைப் போன்று எதுவுமில்லை, அவன் நன்கு செவியேற்பவனாகவும் யாவற்றையும் பார்ப்பவானாகவும் உள்ளான்". (அஷ்ஷூறா : 11). "(உண்மையாக) வணங்கப்படத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் என்றும் உயிருடன் இருப்பவன், நிலைத்திருப்பவன். சிறுதூக்கமோ, உறக்கமோ அவனை ஆட்கொள்ளாது. வானங்களில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன. அவனது அனுமதியின்றி அவனிடம் யார்தான் பரிந்துரை செய்யமுடியும்? (படைப்பினங்களான) அவர்களுக்கு முன் உள்ளவற்றையும் அவர்களுக்குப்பின் உள்ளவற்றையும் அவன் நன்கறிவான். அவன் நாடியவற்றைத் தவிர அவன் அறிந்திருப்பவற்றில் எதையும் அவர்களால் அறியமுடியாது. அவனது 'குர்ஸி' வானங்களையும் பூமியையும்

வியாபித்திருக்கின்றது. அவையிரண்டையும் பாதுகாப்பது அவனுக்கு சிரமமன்று. அவன் மிக உயர்ந்தவன்; மிக்க மகத்துவமானவன்".(பகரா : 255).

**2- இவ்வுலக இருப்பின் நோக்கத்தையும் இலக்கையும் தெளிவுபடுத்துதல்.**

"அல்லாஹ் இது குறித்து பின்வருமாறு குறிப்பிடுகிறான் "(நான் ஜின் மற்றும் மனித இனத்தை என்னை வணங்கி வழிபடுவதற்காகவேயன்றி படைக்கவில்லை". (ஸாரியாத் : 56). "நான் உங்களைப் போன்ற மனிதன்தான், (உண்மையாகவே) வணங்கப்படத்தகுதியான உங்கள் இரட்சகன் ஒருவனே என்று எனக்கு வஹி அறிவிக்கப்படுகிறது என நபியே கூறுவீராக. எவர் தனது இரட்சகனை சந்திப்பதை ஆதரவு வைக்கிறாரோ அவர் நல்லறம் செய்யட்டும் மேலும் தனது இரட்சகனின் வணக்கத்தில் எவரையும் இணையாக்காதிருக்கட்டும்". (கஹ்ஃப் : 110).

**3- மார்க்கக் கருத்துக்கள் யாவும் மனித இயலுமைக்குட்பட்டதாக இருத்தல்**

"அல்லாஹ் உங்களுக்கு இலகுவையே விரும்புகிறான்.அவன் உங்களுக்கு சிரமத்தை விரும்பவில்லை" (பகரா : 185). "எந்த ஓர் ஆத்மாவையும் அதன் சக்திக்கு மேல் அல்லாஹ் சிரமப்படுத்தமாட்டான். அது சம்பாதித்தன் பயன் அதற்குரியதே! அது சம்பாதித்ததன் வினையும் அதற்குரியதே!".(அல் பகரா : 286). "அல்லாஹ் உங்களுக்கு (சட்டங்களை) இலகுபடுத்தவே விரும்புகிறான். மனிதன் பலவீனனாக படைக்கப்பட்டுள்ளான்". (அந்நிஸா:28).

**4. அது முன்வைக்கும் கருத்துக்கள் மற்றும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மைகள்**

யாவும் சரியானது என்பதற்கான பகுத்தறிவுரீதியான ஆதாரங்களை முன்வைத்தல். ஆகவே தூதுத்துவம் முன்வைக்கும் விடயங்கள் சரியானது –உண்மை என்பதை நிரூபிப்பிதற்கு போதுமான தெளிவான பகுத்தறிவு சான்றுகளை எமக்களிப்பது அவசியமாகும். எனவே அல்குர்ஆன் இறையியல் மற்றும் தூதுத்துவம் தொடர்பான ஆதாரங்களையும் பகுத்தறிவு சான்றுகளையும் குறிப்பிடுவதுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. மாறாக இணைவைப்பாளர்கள் மற்றும் நாஸ்திகவாதிகள் அனைவரிடமும் அவர்கள் கூறும் விடயங்கள் சரியானது என்பதற்கான ஆதாரங்களை முன்வைக்குமாறும் சவால் விடுகிறது.

"யூதர்களாக அல்லது கிறிஸ்துவர்களாக இருந்தவர்களைத் தவிர வேறு எவறும்

சுவனத்தில் நுழையவே மாட்டார்கள் என்று அவர்கள் கூறுகின்றனர். அது அவர்களின் வெறும் கற்பனைகளாகும். (இதில்) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் உங்களுடைய ஆதாரத்தை கொண்டுவாருங்கள் ' என்று (நபியே) நீர் கூறுவீராக".(அல்பகரா: 111). "யார் அல்லாஹ்வுடன் வேறு கடவுளை அழைக்கின்றானோ அதற்கு அவனுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அவனது விசாரணை அவனது இரட்சகனிடமே இருக்கின்றது. நிச்சயமாக நிராகரிப்பாளர்கள் வெற்றி பெற மாட்டார்கள்".(அல் முஃமினூன்: 117). "(நபியே! அவர்களை நோக்கி) ''வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை (சிறிது) கவனித்துப் பாருங்கள்'' எனக் கூறுவீராக. (எனினும்) நம்பிக்கை கொள்ளாத மக்களுக்கு நம் வசனங்களும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதும் ஒரு பயனுமளிக்காது". (யூனுஸ் : 101).

**5- தூதுத்துவம் முன்வைக்கும் மார்க்க உள்ளடங்களுக்கிடையில் எவ்வித முரண்பாடுகளும் இருக்க கூடாது.**

"இந்த குர்ஆனை அவர்கள் சிந்தித்துணர வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் கண்டிருப்பார்கள்".(நிஸா : 82). "அவன்தான் (இவ்) வேதத்தை உம்மீது இறக்கினான். இதில் விளக்கமான வசனங்களும் இருக்கின்றன. இவை தான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். மற்றவை (பல அந்தரங்கங்களைக் கொண்ட) முதஷாபிஹாத் (என்னும் ஆயத்துகள்) ஆகும்; எனினும் எவர்களுடைய உள்ளங்களில் வழிகேடு இருக்கிறதோ அவர்கள் குழப்பத்தை ஏற்படுத்துவதற்காக முதஷாபிஹ் வசனங்களின் விளக்கத்தைத் தேடி அதனைப் பின்பற்றுகின்றனர். அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அதன் உண்மையான விளக்கத்தை அறியமாட்டார்கள். கல்வியில் உறுதிப்பாடு உடையவர்கள் அவை அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவைதான். நாங்கள் அதை நம்பிக்கை கொள்கிறோம், என்று அவர்கள் கூறுவார்கள். அறிவுடையோரைத் தவிர மற்றவர்கள் இதைக்கொண்டு நல்லுபதேசம் பெறமாட்டார்கள்".(ஆல இம்ரான் 7).

**6- மதரீதியான ஆதார வாசகங்கள் மனித இயல்பூக்கத்தின் தார்மீக அடிப்படைகளுக்கு முரணற்றதாக இருத்தல் வெண்டும்.**

"எனவே நபியே மார்க்கத்திற்காக உமது முகத்தை நேரிய வழியில் நிலைநிறுத்துவீராக! (இதுவே) அல்லாஹ் மனிதர்களைப் படைத்திருக்கும் அவனுடைய இயற்கையான மார்க்கமாகும். அல்லாஹ்வின் படைப்பில் எவ்வித மாற்றமும் இல்லை. இதுவே நிலையான மார்க்கம். எனினும் மனிதர்களில் அதிகமானோர் அறிய மாட்டார்கள்". (ரூம் : 30). "அல்லாஹ் உங்களுக்கு (சட்டங்களை) தெளிவுபடுத்தவும், உங்களுக்கு முன் சென்ற நல்லவர்களின் வழிமுறைகளில் உங்களைச் செலுத்தவும், உங்களுக்கு மன்னிப்பு வழங்கவும் விரும்புகின்றான். அல்லாஹ் நன்கறிந்தவனும் ஞானமிக்கவனுமாவான். அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பு வழங்க விரும்புகிறான். ஆனால் மனோஇச்சையைப் பின்பற்றுவோர் நீங்கள் முழுமையாக வழிதவற வேண்டும் என்று விரும்புகின்றனர்". (அந்நிஸா : 26-27).

**7. மதரீதியான கருத்துக்கள் பௌதீக அறிவியல் கருத்துக்களுக்கு முரணாணதாக இருக்கக் கூடாது.**

"நிச்சயமாக வானங்களும் பூமியும் இணைந்தே இருந்தன. நாமே அவ்விரண்டையும் பிரித்தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொன்றையும் நீரிலிருந்து நாமே உருவாக்கினோம் என்பதையும் நிராகரித்தோர் அறியவில்லையா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா?". (அன்பியாஃ : 30).

**8- மதமானது மனித வாழ்வின் நடை முறையிலிருந்து ஒதுங்கியதாக இருக்கலாகாது, மாறாக அது மனித நாகரீக முன்னேற்றத்துடன் ஒன்றிச் செல்லக் கூடியதாக இருக்க வேண்டும்.**

"அல்லாஹ் தனது அடியார்களுக்கு வெளிப்படுத்திய அவனது அலங்காரத்தையும் உணவில் பரிசுத்தமானவற்றையும் தடை செய்பவன் யார்? என்று நபியே நீர் கேட்பீராக. இவை நம்பிக்கை கொண்டோருக்கு இவ்வுலக வாழ்வில் மற்றோருடன்

அனுமதிக்கப்பட்டதாகும். மறுமையில் அவர்களுக்கு மட்டுமே உரியதுமாகும் என்று நீர் கூறுவீராக. அறிந்து கொள்ளும் கூட்டத்திற்கு வசனங்களை இவ்வாறே நாம் தெளிவு படுத்துகிறோம்". (அஃராப் : 32).

**9- எல்லாக் காலத்திற்கும் இடத்திற்கும் பொருத்தமானதாக இருத்தல் வேண்டும்.**

"இன்றைய தினம் உங்களுக்கு உங்களது மார்க்கத்தை பூரணப்படுத்தி எனது அருளையும் முழுமைப்படுத்திவிட்டேன். மேலும் உங்களுக்கு இஸ்லாத்தை மார்க்கமாகவும் ஏற்றுக் கொண்டேன்". (மாஇதா : 3).

**10- தூதுத்துவம் சர்வதேசத்தன்மை வாய்ந்ததாக இருத்தல் வேண்டும்.**

"(நபியே!) நீர் கூறுவீராகஃ "மனிதர்களே! மெய்யாக நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறேன்; வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆட்சி அவனுக்கே உரியது, அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறுயாருமில்லை - அவனே உயிர்ப்பிக்கின்றான்; அவனே மரணம் அடையும்படியும் செய்கின்றான் - ஆகவே, அல்லாஹ்வின் மீதும், எழுதப்படிக்கத்தெரியா நபியாகிய அவன் தூதரின் மீதும் ஈமான் கொள்ளுங்கள், அவரும் அல்லாஹ்வின் மீதும் அவன் வசனங்களின் மீதும் ஈமான் கொள்கிறார் - அவரையே பின்பற்றுங்கள்; நீங்கள் நேர்வழி பெறுவீர்கள்". (அஃராப் : 158).

### *அல்லாஹ்வின் மார்க்கத்திற்கும் மக்களின் வழக்கத்திற்கும் இடையில் காணப்படும் வித்தியாசம் என்ன?*

^+ரிய இயல்பு –உள்ளுணர்வு அல்லது ^+ரான பகுத்தறிவு என்ற ஒரு விடயம் உண்டு. ^+ரிய இயல்புக்கும் தர்க்த்திற்கும் சரியான பகுத்தறிவிற்கும் இணங்கியதாக அமையும் அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வந்தவையே! சிக்கல் நிறைந்தவை அனைத்தும் மனிதனிடமிருந்து வந்தவை என்பதை புரிய வேண்டும்.

இதனைப் பின்வருமாறு விளக்கலாம் :

ஒரு முஸ்லிம்; அல்லது கிறிஸ்தவ அல்லது இந்து மத அல்லது ஏதாவது மதத்தின் அறிஞர் வந்து இந்தப்பிரபஞ்சத்திற்கு ஏகனான ஒரே படைப்பாளன் உள்ளான்என்றும்,அவனுக்குநிகராகனவர்எவரும்கிடையாதுஎனவும்,அவனுக்கு சந்ததி எவரும் கிடையாது எனவும், அவன் இப்பூமிக்கு மனித வடிவில்; அல்லது மிருக வடிவில் அல்லது கல்லின் வடிவில் அல்லது சிலை வடிவில் வரமாட்டான், ஆதலால் அவனை மாத்திரமே வணங்கி வழிபடுவதுடன்; பேரிடர்களின் போது அவனிடமே புகழிடம் தேட வேண்டும் என்று கூறினால் உண்மையில் அதுவே அல்லாஹ்வின் மார்க்கமாகும். ஆனால் முஸ்லிம்; அல்லது கிறிஸ்தவ அல்லது இந்து மத அறிஞர் ஒருவர் அல்லாஹ் (கடவுள்) மனிதர்களுகளுக்கு தெரிந்த எந்த ஒரு தோற்றத்திலும்-வடிவத்திலும்-தோன்ற முடியும், அவ்வாறான கடவுளை ஏற்று அவனை வணங்குவதும் அவனிடம் ஒரு நபரினூடாகவோ அல்லது தீர்கதரிசியினூடகவோ அல்லது ஒரு மத குருவினூடாகவோ அல்லது புனிதரினூடாகவோ புகழிடம் தேடிச் செல்வதும் அவசியம் என்று ஒரு கருத்தை முன்வைத்தால் இது மனித சிந்தனையிலிருந்து உதித்த ஒரு வகையான புதிராக காணப்படுகிறது. அல்லாஹ்வின் மார்க்கம் தெளிவானது தர்க்கரீதியானது –அறிவு பூர்வமாணது. அதில் பூசி மெகுழுதல், புதிர்கள் எதுவும் கிடையாது. எந்த ஒரு மத அறிஞராவது ஒரு நபரிடம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் ஒரு கடவுள் என்றும், அவரை வணங்க வேண்டும் என்றும்; யாரையாவது நம்ப வைக்க விரும்பினால், அந்த மதவாதி அவரை நம்ப வைக்க பெரும் பிரயத்தனம் எடுக்க வேண்டும். அவ்வாறு அவர் மிகப்பெரும் முயற்சி செய்தாலும் ஒருபோதும் அவரை நம்ப முன் வர மாட்டார். காரணம் என்னவெனில் இவ்வாறு கூறும் மத அறிஞரிடம் அவர் 'நபி முகம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் நம்மைப் போலவே உண்ணவும் குடிக்கவும் செய்கிறார் அவர் எப்படி கடவுளாக மாறினார்? எனக் கேட்டுவிட்டுவிட்டால் அவருக்கு அதற்கான பதிலை கூறமுடியாமல் போய்விடும்! அவர், தற்காலத்தில் இயேசு மற்று கௌதம புத்தர் மற்றும் ஏனையோரை வணங்குவதற்கு கூறும் -கற்பிதங்களை- நியாயங்களை கூறும் அதிகமான மதவாதிகளை போல் இக்கேள்விக்கு பதிலளிப்பதற்கு முடியாத அந்த மத அறிஞர் இறுதியில் அவரிடம் இது ஒரு புதிரான மற்றும் புதுமையும் புதிரும் நிறைந்த ஒரு கருத்து என்பதனால் நீ ஏற்றுக்கொள்கிறீர் இல்லை.

ஆனால் இதன் விளைவை அல்லாஹ்வை-கடவுளை- சந்திக்கும் வேளையில் நீ புரிந்து கொள்வாய் எனக் கூறித் தப்பிவிடுவார். இந்த உதாரணம் அல்லாஹ்வின் (கடவுளின்) உண்மையான மார்க்கம் மர்மங்கள் இல்லாததாக இருக்க வேண்டும் என்பதையும் மர்மங்கள் மனிதர்களிடமிருந்து மட்டுமே வருகின்றன என்பதை நிரூபிக்கிறது. மேலும் இறை மார்க்கம் அனைவருக்கும் இலவசமானது, அதனால் அனைவரும்; இறையில்லங்களில் தொழுவதற்கும் வணக்கவழிபாடுகளில் ஈடுபடவும் பூரண சுதந்திரம் உண்டு. மாறாக அவ்விறையில்லங்களில் வணங்குவதற்கு உறுப்புருமை பெறுவதற்கான எந்த கட்டணமும் செலுத்தத் தேவையில்லை. அவ்வாறு எந்தவொரு வணக்கஸ்தலத்திலும் வணங்குவதற்கு பதிவும் கட்டணமும் செலுத்தப்பட வேண்டும் என விதிக்கப்பட்டால் அது மனிதனால் உருவாக்கப்பட்ட அசத்திய மதமாகவே இருக்க வேண்டும். ஆனால், ஒரு மத அறிஞர் மக்களிடம் பிற மனிதருக்கு உதவுவதற்கு தர்மம் செய்யுங்கள் என்ற விடயத்தை கூறுவாறானால் அது அல்லாஹ்வின் (இறை) மார்க்கத்தில் உள்ள ஒரு விடயமாகும். அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் அனைவரும் ஒரே ^+ப்பின் பற்கள் போல் சமமானவர்கள். ஏனெனில் அவனின் மார்க்கத்தில் அரேபியர் அரேபியர் அல்லாதவர், வெள்ளையர் கறுப்பர் என்ற வேறுபாடுகள் இல்லை. இறையச்சம் மாத்திரமே வேறுபாட்டிற்கான அளவுகோளாக கொள்ளப்படும். சிலர் ஒரு குறிப்பிட்ட பள்ளியை அல்லது தேவாலயத்தை அல்லது வணக்கஸ்தளத்தை வெள்ளையருக்குரியது எனவும், கறுப்பர்கள் வேறு தனியான இடத்தில் வணக்கங்களை செலுத்த வேண்டும் எனவும் குறிப்பிட்டால் அது மனித சிந்தனையின் வெளிப்பாடே அல்லாது உண்மை இறைமார்க்கத்திற்குரிய ஒன்றல்ல. அதே போன்று பெண்களை கண்ணியப்படுத்தி அவர்களின் அந்தஸ்தஸ்தை உயர்த்தியிருப்பது அல்லாஹ்வின் கட்டளையின் அடிப்படையிலமைந்த ஒரு விடயமாகும். ஆனால் பெண்களை அடக்கி அவர்களின் உரிமைகளை பரித்தல் மனித செயற்பாடாகும். உதாரணமாக ஏதாவது ஒரு நாட்டில் முஸ்லிம் பெண்கள் ஒடுக்குமுறைக்கு ஆட்படுகின்றார்கள் என்றால் அதே நாட்டில் இந்துப் பெண்கள், பௌத்த பெண்கள் மற்றும் கிறிஸ்தவப் பெண்கள் கொடுமைக்கு உள்ளாவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவ்விவகாரத்தை அந்நாட்டு மக்களின் கலாச்சாரம் அல்லது நடைமுறை எனக் குறிப்பிடுவதைத் தவிர அதற்கும் அல்லாஹ்வின் உண்மை மார்க்கத்திற்கும் எவ்வித தொடர்பும் கிடையாது என்பதை மனதில் கொள்ளல் அவசியம். அல்லாஹ்வின் உண்மை

மார்க்கமானது எப்போதும் இயல்பூக்கத்துடன் இயைந்து இணங்கிச் செல்லும் ஒரு மார்க்கமாகும். புகைப்பிடிப்பவர் அல்லது மது அருந்துபவன் எப்போதும் தனது பிள்ளைகளிடம் மது அருந்துவதை விட்டும் புகைப்பிடிப்பதைவிட்டும் விலகி இருக்குமாறு வேண்டிக் கொண்டிருப்பார். காரணம் யாதெனில் அந்த இரண்டு விடயங்களும் ஆரோக்கியம் மற்றும் சமூகத்திற்கும் பேராபத்தானவை என்பதை அவர் நம்பியிருப்பதினாலாகும். உதாரணத்திற்கு மதமானது மதுபானத்தை தடைசெய்தால் உண்மையில் அது அல்லாஹ்வின் -கடவுளின்- கட்டளைகளின் ஒன்றாகவே கருதப்பட வேண்டும். ஆனால் பாலை தடைசெய்தால் எங்களின் புரிதலின் அடிப்படையில் இது நியாயமற்ற விடயமாகும். ஏனெனில் பாலானது ஆரோக்கியமானது என்பதை அனைவரும் அறிந்துள்ளனர். இதனால் தான் மதம் பாலை தடை செய்யவில்லை. அல்லாஹ் எமக்கு ஆரோக்கியமான, நல்லனவற்றை சாப்பிடுவதற்கு அனுமதித்து, ஆரோக்கியமற்ற அருவருப்பானவற்றை சாப்பிடுவதற்கு தடை விதித்தமை படைப்பினங்களுடனான அவனின் கருணை மற்றும் அன்பின் வெளிப்பாடுகளில் ஒன்றாகும்.

பெண்கள் தலையை மறைப்பதும், ஆண்களும் பெண்களும் கண்ணியமாகவும் கற்பொழுக்கத்துடன் நடந்து கொள்வதும் கடவுளின் -அல்லாஹ்வின்- கட்டளையாகும். ஆனால் பல்வகையான வர்ணங்களிலும், அலங்காரங்களிலும் தன்னை அலங்கரித்துக்க கொள்வது மனித செயற்பாடுகளாகும். ^+னாவில் வாழும் நாஸ்திக கிராமியப் பெண்ணும், சுவிஸ்ர்லாந்தல் வாழும் கிறிஸ்தவ கிராமியப் பெண்ணும் கற்பொழுக்கம், இயற்கை உள்ளுணர்வு சார்ந்த ஒரு விடயம் எனும் அடிப்படையில் தமது தலையை மறைப்பதை கலாச்சரமாக பின்பற்றுகிறார்கள்.

தீவிரவாதத்தை உதாரணத்திற்கு எடுத்துக்கொண்டால், இது சர்வதேச அளவில் எல்லா மதப்பிரிவினரிடத்திலும் பரவலாகக் காணக்கூடியதாக உள்ளது. ஆபிரிக்கா மற்றும் உலகின் எல்லாப் பகுதிகளிலும் மார்க்கத்தின் பெயரால் அல்லது இறைவனின் பெயரால் கொலை மற்றும் மிகக் கொடூரமான அடக்குமுறையில் ஈடுபடும் கிறிஸ்தவ தீவிரப் போக்குள்ள பல பிரிவினர் உள்ளனர். இவர்கள் உலக கிறிஸ்தவர்களில் நான்கு விகிதத்தினராக உள்ளனர். அதே வேளை இஸ்லாத்தின் பெயரால் பயங்கரவாத செயற்பாடுகளில் ஈடுபடும்

முஸ்லிம்கள், உலக முஸ்லிம் சனத்தொகையில் ஒரு விகிதத்தினாரகவே உள்ளனர். இவை மாத்திரமின்றி தீவிரவாதமானது இந்து பௌத்த மதங்களிலும் ஏனைய மதங்களிலும் பரவிக் காணப்படுகிறது.

எந்தவொரு மதப்புத்தகத்தையும் படிக்க முன் சத்தியம் மற்றும் அசத்தியத்தை இவ்வாறுதான் வேறுபடுத்திட எம்மால் முடிகிறது.

## *இஸ்லாத்தை உண்மை மார்க்கம் எனக் குறிப்பிடுவது ஏன்?*

இஸ்லாத்தின் போதனைகள் யாவும் நெகிழ்வுத்தன்மை வாய்ந்தவையாகவும், அவை வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளையும் உள்ளடக்கியதாகவும் அமைந்துள்ளது. அத்துடன் அவைகள் யாவும் அல்லாஹ் மனிதனை எந்த இயல்பூக்கத்துடன் படைத்தானோ அதனுடன் இணைந்து செல்வதாகவும் காணப்படுகிறது. இதனடிப்படையில்; இம்மார்க்கம் மனித உள்ளுணர்வுடன் இணைந்து செல்வதை அவதானிக்க முடிகிறது. அவை பின்வருமாறு :

கடவுள் ஒருவன் அவன் தனித்தவன் என்றும் அவனே சிருஷ்டி கர்த்தா அவனுக்கு நிகராக எவரும் இல்லையென்றும் அவனுக்கு எந்தச் சந்ததியும் கிடையாது என்றும், அவன் ஒருபோதும் மனிதனின், அல்லது மிருகத்தின் சிலையின் அல்லது கல்லின் தோற்றத்தில்-வடிவில்- அவதரிக்கமாட்டான் என்றும் முக்கடவுள் தத்துவத்தைத் சார்ந்தவனல்ல என்றும் உறுதியாக நம்புதல். எந்த இடைத்தரகருமின்றி இந்தப் படைப்பாளனை நேரடியாக வணங்குதல். அவன் இப்பிரபஞ்சத்தினதும் அதில் உள்ளவற்றினதும் படைப்பாளன், அவனைப்போன்ற எதுவும் இப்பிரபஞ்சத்தில் கிடையாது. தனது குற்றத்திற்கு மன்னிப்புக்கோரும் போதும் அல்லது உதவி கோரும்போதும் அவனை நேரடியாக தொடர்பு கொள்வதன் மூலம் அவனை மாத்திரம் வணங்குவது மனிதனின் மீதுள்ள கடமையாகும். இந்த விவகாரத்தில் ஒரு மதப்போதகரையோ அல்லது ஒரு மகானையோ அல்லது இடைத்தரகர்களையோ நாடிச்செல்வது கூடாது. அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ் ஒரு தாய் தனது பிள்ளைகளுடன் அன்பு பாராட்டுவதை விட தனது படைப்பினங்களுடன் அதிக கருணையுள்ளவனாக

உள்ளான். எனவே அவன் தன்னிடம் பாவமீட்சி கோரி வருவோரை மன்னித்து கருணைகாட்டுகிறான். சிருஷ்டிகர்த்தாவை மாத்திரம் வணங்குவது அவனுக்கு வழங்க வேண்டிய உரிமைகளில் ஒன்றாகும. மனிதனைப் பொருத்தவரை தனது இரட்சகனுடன் நேரடியான தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது அவனுக்குரிய கடமையாகும். இஸ்லாமிய நம்பிக்கைக் கோட்பாடானது ஆதரங்களினால் நிரூபிக்கப்பட்ட தெளிவான இலகுவான ஒரு மார்க்கமாகும். அதில் கண் மூடித்தனாமான நம்பிக்கைகள் எதுவும் கிடையாது இஸ்லாம் இதயத்துடனும், உணர்வுடனும் மாத்திரம் உறவாடி அவை இரண்டு மாத்திரம் நம்பிக்கைக்கான அடிப்படையாக இருக்க வேண்டும் எனக் கருதவில்லை. மாறாக, அது தனது கொள்கைகளை முன்வைப்பதில் உறுதியானதும் மறுக்க முடியாதுதமான, மிகத் தெளிவான ஆதரங்களை அடிப்படையாகக் கொண்டும், பகுத்தறிவு புரிந்து ஏற்றுக்கொள்ளத்தக்க சரியான காரணங்களினூடகவும் தனது கோட்பாடுகளை முன்வைப்பதில் பல அடிப்படைகளைப் பின்பற்றுகிறது :

இவ்வுலக இருப்பின் நோக்கம், அதற்கான ஆதாரம் மற்றும் மரணத்திற்குப்பின் அவனின் யோகம் -முடிவு- பற்றிய மனிதர்களின் மனதில் ஊடாடும் இயல்பான கேள்விகளுக்கு பதிலளிக்க இறைத்தூதர்களை அனுப்புதல், உலூஹிய்யா -இறைமைத்துவம்- தொடர்பான பிரச்சினைக்கு பிரபஞ்சம் மற்றும் ஆன்மாவிலிருந்தும் ஆதாரங்களையும், வரலாற்றிலிருந்து இறை இருப்பு மற்றும் ஏகத்துவம், அவனின் பரிபூரண தன்மை போன்றவற்றிற்கான சான்றுகளையும் மிகத் தத்ரூபமாக முன்வைக்கிறது. மரணித்தின் பின் மீளஉயிர்த்தெழுதல் தொடர்பான விவகாரத்தில் மனிதனையும், வானம் மற்றும் பூமியையும் படைத்து, வரண்ட பூமியை உயிர்ப்பிப்பதற்கு இயலுமான ஒருவனால் இதனை செய்வது சாத்தியம் என்பதை நிரூபிக்கிறது. அவனின் நீதிக்கும் நேர்மைக்கு சான்றாக நல்லவர்களுக்கு வெகுமதி அளித்து தீயோரை தண்டிப்பதானது அவனின் உயரிய ஞானத்திற்கு எடுத்துக்காட்டு எனக்கூறுகிறது.

இஸ்லாம் என்ற பெயர் அகிலங்களின் இரட்சகனுடனான மனித உறவை பிரதிபலிக்கிறது. ஏனைய மதங்களைப் போன்று ஒரு நபரின் பெயரையோ அல்லது ஒரு இடத்தின் பெயரையோ பிரதிபளிப்பதில்லை. உதாரணத்திற்கு, யூத மதம் அதன் பெயரை யஹூதா இப்னு யஃகூப் அலைஹிஸ்ஸலாம் (அவருக்கு

சாந்தி உண்டாவதாக) என்பவரிடமிருந்தும் பெற்றிருக்கிறது. கிறிஸ்துவம் கிறிஸ்துவிடமிருந்து அதன் பெயரை பெற்றுள்ளது, இந்து மதம் அதன் பெயரை அது தோன்றிய பிரதேசத்தை மையமாக கொண்டு பெற்றுள்ளது. இவையாவும் சில எடுத்துக்காட்டுகளே! இது போன்றே அதிகமான மதங்கள் அவற்றை உருவாக்கியோரின் பெயரின் அடிப்படையில் அமைந்திருப்பதை எம்மால் அவதானிக்க முடியும்.

## ஈமானின் (இறை நம்பிக்கையின்) அடிப்படைகள் :

*ஒரு முஸ்லிமின் ஈமான் (நம்பிக்கை) சீராகுவதற்கான இன்றியமையாத அடிப்படைகள் யாவை?*

ஈமானின் அடிப்படைகள் பின்வருமாறு :

அல்லாஹ்வை நம்புதல்: அல்லாஹ் ஒருவனே இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தினதும் இரட்சகனாகவும், சொந்தக்காரனாகவும் உள்ளான் என்றும், அவன் ஒருவன் மாத்திரமே படைப்பாளன் என்றும், அவன் மாத்திரமே வணக்கத்திற்கும், பணிந்து கட்டுப்படவும் மிகத்தகுதியானவன் என்றும் அவன் எவ்விதக் குறைகளுமற்ற நிறைவான பண்புகளைப் பெற்றவன் என்றும் ஆழமாக நம்பி அதன் அடிப்படையில் செயல்படுவதைக்குறிக்கும். (ஆதார நூல் : ஸியாஜுல் அகீதா- அல்ஈமானு பில்லாஹ்- ஆசிரியர் அப்துல் அஸீஸ் அர்ராஜிஹி பக்கம் (9)).

மலக்குகளை நம்புதல் : அதாவது அவர்களின் இருப்பையும், அவர்கள் ஒளியால் படைக்கப்பட்ட ஒரு படைப்பினம் என்றும் நம்புதல். அவர்கள் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதுடன் அவனுக்கு ஒரு போதும் மாறு செய்ய மாட்டாரக்கள். அவ்வளவு அற்புதமான ஒரு படைப்பே இவர்கள்.

வானுலக வேதங்களை நம்புதல்: இது இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்கள் அனைவருக்கும் இறக்கப்பட்ட அனைத்து வேதங்களையும் குறிக்கும். மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இறக்கப்பட்ட இன்ஜீல், ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இறக்கியருளப்பட்ட தவ்ராத், தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இறங்கிய ஸபூர் வேதம், இப்ராஹீம் மற்றும் மூஸா அலைஹிமஸ்ஸலாம் அவர்களுக்கு வழங்கப்பட்ட ஏடுகள், (71) நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு இறக்கப்பட்ட அல்குர்ஆன் ஆகியன அவற்றுள் சிலதாகும். மேற்குறிப்பிட்ட இறைவேதங்களின் அடிப்படைப் பிரதிகள் யாவும் படைப்பாளனை நம்பி அவனை மாத்திரமே வணங்க வேண்டும் எனும் ஏகத்துவத் தூதை உள்ளடக்கியது. என்றாலும்

அவற்றில் திரிபுகள் மனிதக் கையாடல்கள் நுழைந்து விட்டன. அல்குர்ஆனும் இஸ்லாமிய சட்டதிட்டங்களும் இறக்கப்பட்டதன் பின்னர் அவைகள் யாவும் மாற்றப்பட்டுவிட்டன.

தீர்க்கதரிசிகள் மற்றும், இறைத்தூதர்களை நம்புதல்

மறுமை நாளை நம்புதல் : விசாரணைக்காகவும்,கூலி வழங்கப்படுவதற்காகவும் மனிதர்கள் மறுமை நாளில் எழுப்பப்படுவார்கள் என்பதை விசுவாசித்தலை இது குறிக்கும்.

இறை விதியை நம்புதல் : அல்லாஹ்வின் ஞானம் மற்றும் அவனின் முன்னறிவின் அடிப்படையில் படைப்புகளின் விதிகள் எழுதப்பட்டுவிட்டன என்பதை விசுவாசம் கொள்ளுதலை இது குறிக்கிறது.

இஸ்லாத்தில் ஈமான் எனும் படித்தரத்திற்கு அடுத்து இஹ்ஸான் எனும் படித்தரம் உண்டு. அது மார்க்கத்தின் மிக உயர்ந்த படித்தரமாகும். இந்தப்படித்தரத்தின் கருத்தை நபியவர்களின் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள் : "இஹ்ஸான் என்பது நீ அல்லாஹ்வை நேரடியாக பார்ப்பது போன்று அவனை வணங்க வேண்டும். அவனை நீ பார்க்கா விட்டாலும் அவன் உன்னை பார்த்துக்கொண்டிருக்கிறான்' '(ஹதீஸ் ஜிப்ரீல். ஆதாரம் புஹாரி :(4777) முஸ்லிம் (09)).

இஹ்ஸான் என்பது மனிதனிடத்தில் எந்த நன்றியையோ அல்லது பாராட்டையோ உலக ஆதாயத்தையோ எதிர்பார்க்காது அல்லாஹ்வின் திருமுகத்தை மாத்திரம் நாடி இதயசுத்தியுடன் எல்லா கருமங்களையும் காரியங்களையும் திரம்பட செய்வதும், இதனை எய்துகொள்வதற்கு தன்னாலான எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வதுமாகும். இன்னொரு வகையில் குறிப்பிடுவதாயின் அல்லாஹ்வின் திருமுகம் நாடி இதயசுத்தியுடன் நபிவழிமுறைக்கு இணங்கிச்செல்லும் வகையில் அல்லாஹ்வை நெருங்கும் நோக்கில் செயல்களை நிறைவேற்றுவதாகும். முஹ்ஸினூன் எனும் நிலையை பெற்ற (சிறப்பு மிகு பிரிவினரே) பிறருக்கு நன்மைபயக்கும் விதத்தில் உள்ள

சமூகத்தின் சிறந்த முன்மாதிகரிகள் ஆவர். காரணம் இறை திருப்தியை நாடி மாத்திரமே மார்க்க மற்றும் உலகியல் விடயங்களில் இவர்கள் ஈடுபடுவர். இவர்களை பின்பற்றி நடக்குமளவிற்கு இவர்கள் உயர்முன்மாதிரிமிக்கோராய் திகழ்வர். அது மாத்திரமின்றி இப்பிரிவின் மூலமே சமூகத்தின் விருத்தியும் மனித இனத்தின் செழுமையும் வளர்ச்சியும் முன்னேற்றமும் தங்கியிருப்பதோடு தேசங்களின் வளர்ச்சியும் முன்னேற்றமும் தங்கியுள்ளது.

## *முன்னைய இறைத்தூதர்களை விசுவாசம் கொள்வது முஸ்லிமின் நம்பிக்கைக் கோட்பாட்டில் அடிப்படை அம்சமாக உள்ளதா?*

மனித இனத்திற்காக அனுப்பப்பட்ட இறைதூதர்கள் அனைவரையும் எவ்வித வேறுபாடுமின்றி நம்புவது ஒரு முஸ்லிமின் இறைவிசுவாசத்தில் காணப்பட வேண்டிய முக்கிய அடிப்படையாகும். இவ்வாறு அவன் நம்பவில்லையென்றால் அவனின் ஈமான் எனும் இறைவிசுவாசம் சரியானதாக அமையமாட்டாது. தெளிவாகக் குறிப்பிடுவதாயின் அவன் ஒரு முஸ்லிமே அல்ல என்பதுவே இதன் கருத்தாகும். எந்த ஒரு தூதரையோ அல்லது தீர்க்கதரிசியையோ மறுப்பது மார்க்கத்தின் அடிப்படைகளுடன் மோதுகின்ற விடயமாகும். காரணம் அனைத்து நபிமார்களும் -தீர்க்கதரிசிகளும்-இறுதித்தூதரான முஹம்மத் அலைஹிஸ்ஸாம் அவர்களின் வருகையை குறித்து முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள் அதிகமான நபிமார்களையும், ரஸூல்மார்களையும் அல்லாஹ் பல்வேறுபட்ட சமூகங்களுக்கு அனுப்பியுள்ளான், இவர்களின் பெயர்கள் அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளன. உதாரணத்திற்கு (நூஹ் இப்ராஹீம், இஸ்மாஈல், இஸ்ஹாக் யஃகூப், யூஸுப், மூஸா, தாவூத், ஸுலைமான், ஈஸா போன்றோர் அவர்களுள் சிலராவர்) மேலும் பல நபிமார்கள் அவர்களின் பெயர்கள் குறிப்பிடப் படவில்லை. இந்து மற்றும் பௌத்த மதங்களில் உள்ள ராமர், கிரிஷ்னர், கௌதம புத்தர் போன்ற மதப் பிரதானிகள் யாவரும் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசிகளாக இருப்பதற்கு சாத்தியம் இருந்தாலும், அல்குர்ஆனில் அதற்கான எந்த சான்றும் கிடையாது என்பதனால் ஒரு முஸ்லிம் அவர்களை தீர்க்கதரிசி என நம்பமாட்டான். மக்கள் எப்போது அல்லாஹ்வை விட்டுவிட்டு தமக்கு வழிகாட்டியாய் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசிகளை வணங்க தலைப்பட்டதோ அப்போதிருந்தே மதங்களுக்கு மத்தியில் வித்தியாசங்களும், வேறுபாடுகளும் தோன்ற ஆரம்பித்து

விட்டன. "நபியே உமக்கு முன்னர் நாம் பல தூதர்களை அனுப்பியிருக்கிறோம். அவர்களில் சிலர் பற்றி உமக்கு கூறியுள்ளோம். இன்னும் அவர்களில் சிலர் பற்றி நாம் உமக்குக் கூறவில்லை. அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத் தூதரும் எந்த ஓர் அத்தாட்சியையும் கொண்டுவர முடியாது. அல்லாஹ்வின் கட்டளை வந்துவிட்டால் (மறுமை நிகழ்ந்துவிட்டால்) நீதியைக் கொண்டு தீர்ப்பளிக்கப்படும். அங்கே வீணர்கள் நஷ்டமடைவார்கள்".(ஃகாபிர் :78). "இத்தூதரும் தமது இரட்சகனிடமிருந்து இறக்கப்பட்டதை நம்பிக்கை கொண்டுள்ளனர். முஃமின்களும் (நம்பிக்கை கொண்டுள்ளனர் (அவர்கள்) அனைவரும் அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும்,அவனது வேதங்களையும்,அவனது தூதர்களையும், நம்பிக்கை கொண்டுள்ளனர். அவர்கள் அவனது தூதர்களில் எவருக்குமிடையில் வேறு பாடுகாட்டமாட்டோம். நாம் செவியேற்றோம் கட்டுப்பட்டோம்.எங்கள் இரசட்சகனே! உனது மன்னிப்பைக் கோருகின்றோம் உன்னிடமே மீழுதல் உள்ளது என்று அவர்கள் கூறினார்கள்". (அல் பகரா : 285). "அல்லாஹ்வையும் எங்களுக்கு இறக்கப்பட்டதையும், இப்ராஹீம், இஸ்ஹாக், யஃகூப், ஆகியவர்களுக்கும் இவரது சந்ததிகளுக்கும், இறக்கப்பட்டதையும், மூஸாவுக்கும், ஈஸாவுக்கும், (மற்றும் ஏனைய) நபிமார்களுக்கும் அவர்களது இரட்சகனிடமிருந்து வழங்கப்பட்டதையும் நாம் நம்பிக்கை கொண்டோம். அவர்களில் எவருக்கிடையிலும் நாம் வேற்றுமை பாராட்ட மாட்டோம் நாம் அவனுக்கே முற்றிலும் கட்டுப்பட்டவர்கள்' என்று நபியே நீங்களும் கூறுங்கள்".(பகரா : 136).

### *மலக்குமற்றும் ஜின் ஷைத்தான் ஆகியோருக்கிடையிலான வித்தியாசம் யாது?*

மலக்குகள் என்போர் அல்லாஹ்வின் மிகப் பிரமாண்டமான ஒரு படைப்பு. அவர்கள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள், நன்மையான காரியங்களில் ஈடுபடுவதற்கென கட்டமைக்கப்பட்வர்கள். அல்லாஹ்வின் கட்டளைக்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பவர்கள். அல்லாஹ்வை துதிசெய்து கொண்டும் வணங்கிக் கொண்டும் இருப்போர். அவர்கள் சோர்வடையோ, களைப்புரவோ மாட்டார்கள்.

"அவர்கள் சோர்வடையாது இரவு பகலாக (அவனைத்) துதித்துக் கொண்டிருப்பார்கள்"(அன்பியா :20). "அல்லாஹ் அவர்களுக்கு செய்யுமாறு

கட்டளையிட்டவற்றில் அவனுக்கு மாறு செய்யாது, அவர்களுக்கு அல்லாஹ் ஏவியவற்றை எடுத்து நடப்பார்கள்".(அத்தஹ்ரீம் : 6).

இவர்களை நம்புவதில் முஸ்லிம்கள் யூதர்கள் கிறிஸ்தவர்கள் யாவரும் ஒன்று பட்டுள்ளனர். அவர்களில் ஒருவர் ஜிப்ரீல் ஆவார். அவரே அல்லாஹ்வுக்கும் இறைத்தூதர்களுக்கும் மத்தியில் தொடர்பாளராக இருப்பதற்கு அல்லாஹ் தேர்வு செய்தான். அவரே அல்லாஹ்விடமிருந்து இறைச்செய்தியை (வஹியை) நபிமார்களுக்கு எடுத்து வருபவர். இவரைப் போன்று மீகாஈல் என்ற மலக்கும் உள்ளார். அவரின் பணி மழையைப் பொழிவிப்பதும் தாவரங்களை பராமரிப்பதுமாகும், அதே போன்று இஸ்ராபீல் என்ற மலக்கும் உள்ளார். அவரின் பணி மறுமை நாள் நிகழ ஸூர் ஊதுவதாகும். இங்கே பெயர்குறிப்பிடப்படாத இவர்கள் அல்லாத பல மலக்குகளும் உள்ளனர்.

ஜின்கள் மறை உலகில் வாழும் ஒரு படைப்பு. அவர்கள் எங்களுடன் இந்தப் பூமியில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இவர்களும் மனிதர்களைப் போன்று அல்லாஹ்வுடைய கட்டளைகளை எடுத்து நடக்க வேண்டப்பட்டுள்ளதுடன், அவனுக்கு மாறுசெய்வதை விட்டும் தடுக்கப்பட்டுள்ளனர். என்றாலும் இவர்கள் எமது புறக்கண்களுக்கு புலப்படுவதில்லை. இவர்கள் நெருப்பினால் படைக்கப்பட்டவர்கள், மனிதர்களோ களிமண்ணால் படைக்கப்பட்டுள்ளனர். அல்லாஹ் ஜின்களின் வல்லமை மற்றும் அவர்களின் ஆற்றல்களின் நிலை குறித்து விளக்கும் பல சம்பவங்களை குறிப்பிட்டுள்ளான். அவற்றுள் பௌதீக ரீதியான எந்தத் தலையீடுமின்றி ஊசலாட்டம் அல்லது தீமையைச் செய்வதற்கு மறைமுகமாக தூண்டுதல்களை மனிதனில் ஏற்படுத்துவதானது அவர்களின் ஆற்றலை தெளிவுபடுத்துகிறது. என்றாலும் அவர்கள் மறைவானவற்றை அறியமாட்டார்கள். பலமான இறைவிசுவாசம் கொண்ட ஒரு விசுவாசிக்கு தொல்லை கொடுக்கவோ பாதிப்பை ஏற்படுத்தவோ சக்தி பெறமாட்டார்கள். "நிச்சயமாக ஷைத்தான்கள் தமது நேசர்களை உங்களுடன் தர்க்கம் செய்யத் தூண்டுகின்றனர்". (அல் அன்ஆம் :121).

'ஷைதான்' எனும் வாசகம் மனிதனிரிலோ, ஜின்களிலோ வரம்பு மீறி, கட்டுக்கடங்காத அனைவரையும் குறிக்கின்றது.

### *மரணத்தின் பின் மீண்டும் உயிர்த்தெழுதலுக்குரிய ஆதாரம் யாது?*

அகிலத்தின் புறவய நிகழ்வுகள், ஆதாரங்கள் யாவும் வாழ்க்கையில் எப்போதும் மீள் கட்டமைப்பு மற்றும் மீள் உருவாக்கம் இருப்பதை சுட்டிக்காட்டுகிறது. இதற்கான உதாரணங்கள் அதிகமாகும். அவற்றுள் வரண்ட பூமியை மழையால் உயிர்ப்பித்தல் என்பது ஒரு உதாரணமாகும்.
அல்லாஹ் கூறுகிறான் :

"அவன் இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றை வெளிப்படுத்துகிறான். உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றை வெளிப்படுத்துகிறான். பூமி வரண்டு போன பின் அதனை உயிர்ப்பிக்கிறான். இவ்வாறே நீங்களும் வெளியேற்றப்படுவீர்கள்". (அர்ரூம் :19).

மீண்டும் உயிர்கொடுக்கப்பட்டு எழுப்பப்படுதல் சாத்தியம் என்பதற்கு இன்னொரு உதாரணம், எவ்விதக் கோளாறுமில்லாது நேர்த்தியாகவும் ஒழுங்குமுறைப்படியும் இயங்கும் இப்பிரபஞ்சத்தைக் குறிப்பிட முடியும். ஒரு அணுவில் காணப்படுகின்ற மிகச்சிறிய எலக்ட்ரான் கூட ஒரு சுற்றுப்பாதையில் இருந்து மற்றொரு சுற்றுப்பாதைக்கு அதன் இயக்கத்திற்கு சமமான ஆற்றளை பெற்றாலே தவிர சிறிதும் நகர முடியாது. அனுவில் அடங்கியிருக்கும் மிகவும் நுன்னிய இப்பொருளுக்கே இந்நிலையென்றால் கொலைகாரன் அல்லது அநியாயக்காரன் அகிலங்களின் இரட்சகனிடமிருந்து எந்த விசாரணையோ அல்லது தண்டனையோ இன்றி தப்பி ஓடுவதை கற்பனை செய்ய முடியுமா?

அல்லாஹ் கூறுகிறான் :
"நாம் உங்களை படைத்ததெல்லாம் வீணுக்காக என்றும், நீங்கள் நம்மிடம் கொண்டு வரப்பட மாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டிருந்தீர்களா?" (என்று கேட்பான்.) உண்மை அரசனான அல்லாஹ் உயர்ந்தவனாகி விட்டான். (உண்மையாக) வணங்கப்படத்தகுதியானவன் அவனையன்றி வேறுயாறுமில்லை (அவன்) சங்கையான அர்ஷின் இரட்சகன்". (அல் முஃமினூன்: 115-116). "எவர்கள் தீமைககள் செய்தார்களோ அவர்களை நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் புரிந்தோர்களைப் போன்று அவர்களது வாழ்விலும் அவர்களது மரணத்திலும்,

சமமாக நாம் ஆக்குவோம் என்று எண்ணிக் கொண்டனரா? அவர்கள் தீர்ப்பளிப்பது மிக்க கெட்டதாகிவிட்டது. வானங்களையும் பூமியையும் அல்லாஹ் தக்க காரணத்தின் மீதே படைத்திருக்கிறான். ஆகவே, (அவர்களில் உள்ள) ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அவற்றின் செயலுக்குத்தக்க கூலியே கொடுக்கப்படும். அவை (அணுவளவும்) அநியாயம் செய்யப்பட மாட்டாது". (அல் ஜாஸியா:21-22). இந்த வாழ்வில் நாம் எமது உறவினர்களில் நண்பர்களில் அதிகமானோரை இழக்கிறோம் என்பதை அவதானிக்கிறோமல்லவா? அதே போன்று நாமும் ஒரு நாள் இறக்கப்போகிறோம் என்பதை அறிந்துள்ளோம். ஆனாலும் எமது அடி மனதால் நாமேல்லாம் நிரந்தரமாய் வாழ்வோம் என நாம் உணர்கிறோம். மனித உயிரானது மீள் உயிர்ப்பிக்கப்பட்டு விசாரணைக்குட்படுத்தப்படும் ஒன்றாக இல்லாது வெறும் பௌதீக விதிகளுக்குட்பட்டு சடரீதியான வாழ்க்கை கட்டமைப்புக்குள் மனித உடல் இருந்தால் இந்த இயல்பான சுதந்திர உணர்வுக்கான எந்த அர்த்தமும் இருக்காது. அவ்வாறிருப்பின் உயிரானது காலத்தைக் கடந்து மரணத்தைக் கடந்து சென்றுவிடும்.

## *மரணித்தோரை அல்லாஹ் எவ்வாறு உயிர்பிக்கிறான்?*

அல்லாஹ் முதலில் எவ்வாறு அவர்களை உயிர்கொடுத்து படைத்தானோ அவ்வாறே மீண்டும் அவர்களை உயிர்ப்பிக்கிறான்.

அல்லாஹ் கூறுகிறான் :

"மனிதர்களே! (மரணித்த பின்) மீண்டும் எழுப்பப்படுவது பற்றி சந்தேகத்தில் இருந்தீர்களானால், (அறிந்து கொள்ளுங்கள்) நிச்சயமாக நாம்தான் உங்களை (முதலில்) மண்ணிலிருந்தும் பின்னர் இந்திரியத்திலிருந்தும், பின்பு கருவரைச்சுவரில் ஒட்டிக்கொள்ளக் கூடியதிலிருந்தும் பின்னர் வடிவமைக்கப் பட்டதும் வடிவமைக்கப்படாததுமான சதைப் பின்டத்திலிருந்தும் படைத்தோம், உங்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகவே (இதனை விவரிக்கிறோம்). மேலும், நாம் நாடியவற்றை ஒரு குறிப்பிட்ட காலம் வரை கருப்பையில் தரிபடுத்துகிறோம். பின்பு உங்களை சிசுவாக வெளியேற்றுகின்றோம். பின்பு நீங்கள் உங்கள் வாலிபத்தை அடையும்படிச் செய்கிறோம். அன்றியும், (இதனிடையில்) உங்களில் சிலர் மரிப்பவர்களும் இருக்கிறார்கள். அறிந்த பின் ஒன்றுமே அறியாதவர்களைப்

போல் ஆகிவிடக்கூடிய தளர்ந்த வயது வரை விட்டுவைக்கப்படுபவர்களும் இருக்கிறார்கள். இன்னும், நீங்கள் (தரிசாய்க் கிடக்கும்) வரண்ட பூமியைப் பார்க்கின்றீர்கள், அதன் மீது நாம் (மழை) நீரைப் பொழியச்செய்தால் அது அதிர்வுற்று வளமாகி அழகான பல்வகைப் புற்பூண்டுகளை முளைப்பிக்கிறது". (ஹஜ் : 05). "மனிதனை ஒரு துளி இந்திரியத்திலிருந்து நாமே நிச்சயமாகப் படைத்தோம் என்பதை அவன் பார்க்கவில்லையா? அவ்வாறிருந்தும், அவன் (நமக்கு) வெளிப்படையான தர்க்க வாதியாகி விடுகிறான். மேலும், அவன் தன் படைப்பை (தான் படைக்கப்பட்டதெப்படி என்பதை) மறந்துவிட்டு, அவன் நமக்காக ஓர் உதாரணத்தையும் கூறுகின்றான்; "எலும்புகள் அவை மக்கிப் போய் விட்ட பின் அவற்றை உயிர்ப்பிப்பது யார்?" என்று. "முதல் முதலில் அவற்றை உண்டு பண்ணியவனே (பின்னும்) அவற்றுக்கு உயிர் கொடுப்பான். அவன் எல்லாவகைப் படைப்புகளையும் நன்கறிந்தவன்" என்று (நபியே!) நீர் கூறுவீராக!".(யாஸீன் : 77-79). "(நபியே!) அல்லாஹ்வின் இவ்வருளால் ஏற்படும் பலன்களை நீர் கவனிப்பீராக! இறந்துபோன பூமியை எவ்வாறு செழிக்கச் செய்கிறான்! (இவ்வாறே) நிச்சயமாக அவன் இறந்தவர்களையும் உயிர்ப்பிக்கச் செய்வான். அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் உடையவன்".(அர்ரூம் :50).

### *அல்லாஹ் தனது அடியார்களை ஒரே நேரத்தில் எவ்வாறு விசாரிக்க முடியும்?*

அடியார்களுக்கு ஒரே நேரத்தில் உணவளிப்பது போல் அவர்களை மறுமையில் ஒரே நேரத்தில் விசாரிப்பான்.
அல்லாஹ் கூறுகிறான் :

"மனிதர்களே! (ஆரம்பத்தில்) உங்களை படைப்பதும், (மரணித்த பின்) உங்களுக்கு உயிர் கொடுத்து எழுப்புவதும் அவனுக்கு, உங்களில் ஒருவரை (ஆரம்பத்தில்) படை(த்து உயிர் கொடு)ப்பது போலவே தவிர வேறில்லை. நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) செவியுறுபவனும் உற்று நோக்குபவனும் ஆவான்". (லுக்மான் : 28).

மறுபிறவி கோட்பாட்டில் ஒரு முஸ்லீம் நம்பிக்கை கொள்ளாதது ஏன்? குறிப்பு :(மறுபிறப்பு அல்லது மறு பிறவி என்பது உயிர் அல்லது ஆன்மா

உடலைத் துறந்த பின் அது முற்பிறவியில் செய்த பாவ புண்ணியங்களுக்கேற்ப மனிதனாகவோ, விலங்காகவோ அல்லது மற்ற உயிரினமாகவோ மறுபிறப்பு எடுக்கின்றது என்பது இதன் அடிப்படையாகும்).

இந்த பிரபஞ்சம் முழுதும் படைப்பாளனான அல்லாஹ்வின் ஆளுகையின் கீழ் உள்ளது. ஆகவே அவன் மாத்திரமே தனது விருப்பத்திற்கு அமைவாக அனைத்தையும் அடிபணியவைக்கக்க கூடிய முழுமையான அறிவையும், ஆற்றலையும், திறனையும் பெற்றுள்ளான். சூரியன், கோள்கள் மற்றும் (விண்மீன் திரள்கள்) பால்வெளிமண்டளங்கள் ஆகியவை படைப்பின் துவக்கம் முதல் மிகத்துல்லியத்துடன் சிறப்பான முறையில் செயல்பட்டு வருகின்றன. மேலும் இந்த நுணுக்கமும் திறனும் மனிதர்களின் உருவாக்கத்திற்குப் பொருந்தும் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அத்துடன் மனித உடல்களுக்கும் ஆன்மாக்களுக்கும் இடையே உள்ள ஒருங்கிணைப்பானது, மனித உடலிலிருந்து வெளியேறிய ஆன்மாக்களை –உயிர்களை- விலங்குகளின் உடலில் குடிகொள்ளச் செய்ய முடியாது என்பதையும், தாவரங்கள் மற்றும் பூச்சிகள் அல்லது மனிதர்களிடையே கூட ஊடாடல் செய்ய முடியாது என்பதையும் காட்டுகிறது. மேலும் அல்லாஹ் மனிதனை பகுத்தறிவு மற்றும் அறிவாற்றலால் தனித்துவப்படுத்தி, அவனை பூமியில் ஒரு கலீஃபாவாக -பிரதிநிதியாக- ஆக்கி ஏனைய பல உயிரனங்களை விட அவனை சிறப்பாக்கி கண்ணியப்படுத்தி அவனது அந்தஸ்தை உயர்த்தியுள்ளான். படைப்பாளனான அல்லாஹ் மரணத்தின் பின் மீண்டும் உயிரினங்களை உயிர்த்தெழச் செய்யும் மறுமை நாளை ஏற்படுத்தி உயிரினங்கள் அனைத்தையும் அவன் விசாரித்து தீர்ப்பளிப்பதும், அதன்படி அவர்களின் தலைவிதி சொர்க்கம் அல்லது நரகம் என்பதை தீர்மானிப்பதும், அனைத்து நல்ல மற்றும் கெட்ட செயல்களும் அந்நாளில் மதிப்பிடப்படுவதும் படைப்பாளனான அல்லாஹ்வின் ஞானத்திற்கும் அவனின் நீதிக்குமான சான்றாக அமைந்துள்ளது.

அல்லாஹ் கூறுகிறான் :

"ஆகவே எவர் ஒரு அணுவளவேனும் நன்மை செய்தாலும் அவர் அதனைக் கண்டு கொள்வார். எவர் ஒரு அணுவளவேனும் தீமை செய்தாலும் அவர் அதனைக் கண்டு கொள்வார்". (அல்ஸல்ஸலா :7-8).

### கழாகத் கத்ர் -இறைவிதியாகிய அல்லாஹ்வின் நித்திய அறிவில் எழுதப்பட்ட செயல்களுக்கு (கடவுள்) அல்லாஹ் மனிதர்களை விசாரிப்பது ஏன்?

உதாரணமாக, ஒரு நபர் கடையில் ஏதாவது வாங்க விரும்பினால், அந்தப் பொருளை வாங்குவதற்கு தனது மூத்த மகனை அனுப்ப முடிவு செய்வார், காரணம் அவரின் அந்த மகன் புத்திசாலி என்றும் அவர் உடனே சென்று தந்தை விரும்புவதை வாங்குவார் என்றும் அவருக்கு முன்பே தெரியும். ஆனால்அவரின் அடுத்த மகனைப் பொருத்தவரை தனது நண்பர்களுடன் விளையாடுவதில் ஈடுபட்டு பணத்தை தொலைத்து விடுவார் என்பதனால் அவரிடம் இப்பொறுப்தை ஒப்படைக்க விரும்பமாட்டார். இது உண்மையில் ஒரு அனுமானத்தின் அடிப்படையில் தந்தை தனது தீர்ப்பை கட்டமைத்துள்ளார் என்பது புரிகிறது.

ஆகவே விதிகள் பற்றிய பூரணமாக அறிந்திருப்பது ஒரு போதும் எமது தெரிவிற்கு முரணாக அமைவதில்லை. காரணம் எமது தெரிவுகள் மற்றும் விருப்புகள் பற்றிய அவனின் முழுமையான அறிவிற்கேட்ப எமது செயல்களை அல்லாஹ் அறிந்துள்ளான் என்பதே இதன் கருத்தாகும். அத்துடன் மனித இயல்பை அறிவதில் அவனை விஞ்சிட யாரும் கிடையாது. அவனே எம்மைப் படைத்தவன், எம் இதயத்தில் நாம் விரும்பும் நன்மையான மற்றும் தீமையான விடயங்களை அவன் அறிந்திருப்பதோடு, நம் செயல்களையும் அவதானித்துக்கொண்டிருக்கின்றான். இவ்வாவறு அவன் நம்மைப் பற்றி அறிந்தவற்றை அவனிடம் பதிவு செய்து வைத்திருப்பது நம் விருப்பத்திற்கு முரணாக மாற மாட்டாது. காரணம் அல்லாஹ்வுக்கே –கடவுளுக்கே- முழுமையான அறிவு இருக்கிறது என்பதையும், மனித அறிவு குறை நிறைந்தவை அவனின் எதிர்பார்ப்புகள் சரியானதாகவோ அல்லது தவறனதாகவோ அமைய முடியும் என்பதையும் நாம் ஏற்றுக் கொள்கிறோம் .

ஒரு மனிதன் அல்லாஹ் விரும்பாத வகையில் செயற்படுவது சாத்தியமான விடயம். ஆனால் அவனின் செயற்பாடானது ஒரு போதும் இறை நாட்டத்திற்கு எதிரானதாக அமையாது. ஏனெனில் அல்லாஹ் அவனுக்கு தெரிவு செய்வதற்கான விருப்பத்தை வழங்கியுள்ளான். அவனின் அந்தச் செயற்பாடானது அவனுக்கு பாவமானதாக இருந்தாலும் அவன் அல்லாஹ்வின் நாட்டத்திற்கு உட்பட்டவனாகவே உள்ளான். இதற்கு முரணாக அவனால் இருக்க முடியாது

ஏனெனின் அல்லாஹ்வின் நாட்டத்தை மீறிச் செல்லும் அதிகாரத்தை அவனுக்கு அல்லாஹ் வழங்கவில்லை.

நாம் விரும்பாத ஒன்றை எமது உள்ளம் ஏற்றுக்கொள்ளவென அதனை நிர்ப்பந்திக்கவோ அதனை திணித்திடவோ எம்மால் முடியாது. ஒரு மனிதனை பயமுறுத்தி அச்சுறுத்துவதன் மூலம் நம்முடன் இருக்க கட்டாயப்படுத்துவது சாத்தியமான விடயம். ஆனால் அந்த மனிதனை எம்மை விரும்ப வேண்டும் என கட்டாயப்படுத்திட முடியாது. ஆகவே எமது உள்ளத்தை எந்த வகையிலும் நிர்பந்தித்தித்து கட்டாயப்படுத்திட முடியாதவாறு அல்லாஹ் பாதுகாத்துள்ளான். இதன் காரணமாவே எமது உள்ளங்களின் விருப்பங்கள் மற்றும் அதன் தூண்டல்களுக்கு ஏற்ப எம்மை விசாரித்து எமக்கான வெகுமதிகளை வழங்குகிறான்.

# இவ்வுலக வாழ்வின் இலக்கு :

### *உலக வாழ்வின் அடிப்படை இலக்கு யாது?*

உண்மையில் உலக வாழ்வின் அடிப்படை இலக்கு தற்செயலாக உணர்வு பிரவாகிக்கும் மகிழ்ச்சியை அனுபவிப்பது அல்ல. மாறாக அல்லாஹ்வை – கடவுளை- அறிந்து அவனுக்கு வழிப்படுவதன் ஊடாக அடைந்து கொள்ளும் ஆழமான அக நிம்மதியை எய்துகொள்வதாகும்.

இந்த இறை இலக்கை எய்து கொள்வதே –நித்திய சுகத்தையும் யதார்த்தமான நிரந்த மகிழ்ச்சியையும் அடைந்து கொள்ள காரணமாக அமையும். ஆக, இதுவே எங்களது அடிப்படை குறிக்கோளாக இருந்தால் இந்த இலக்கை அடைந்து கொள்வதில் ஏற்படும் எந்தக் கஷ்டங்கள் மற்றும் பிரச்சினைகள் இருப்பினும் அவற்றை எதிர்கொள்வது அற்பமாகிவிடும்.

வாழ்வில் எந்தத் துன்பத்தையோ கஷ்டத்தையோ எதிர்கொள்ளாத ஒரு மனிதனின் ஆடம்பரமான வாழ்வு குறித்து சிந்திப்போமானால் இவ்வாறான ஒரு மனிதன் தனது ஆடம்பர வாழ்வின் காரணமாக அல்லாஹ்வை மறந்து அவன் படைக்கப்பட்ட நோக்கத்தை நிறைவேற்றுவதில் தோல்வியடைந்தவனாவான். இவ்வாறான ஒரு மனிதனை, கஷ்டம் மற்றும் துன்பம் நிறைந்த அனுபவங்கள் அல்லாஹ்வின்பால் இட்டுச்சென்று தனது வாழ்வின் இலக்கை உண்மையில் அடைந்து கொண்ட ஒரு மனிதனோடு ஒப்பிட்டுப்பாருங்கள். இருவரும் சமமாவார்களா? இஸ்லாமிய போதனைகளின் கண்ணோட்டத்தில் துன்பங்களை அனுபவித்து அல்லாஹ்வின் பால் சென்ற மனிதன், எவ்விதக் கஷ்டத்தையும் அனுபவிக்காது இவ்வுலகின் சுகபோகங்களில் திழைத்து, சுகபோகமான வாழ்வு அல்லாஹ்வை விட்டும் தூரப்படுத்தி இருந்தவனை விட சிறந்தவனாவான். எல்லா மனிதர்களும் இவ்வுலக வாழ்வில் ஏதோ ஒரு இலக்கை அல்லது நோக்கத்தை அடைந்து கொள்ளவே பாடுபடுகின்றனர். அனேகமாக அவர்களின் இலக்கானது அவர்களிடம் காணப்படுகின்ற கொள்கையின் அடிப்படையில் அமைந்திருக்கும். நாம் மார்க்கத்தில் கண்டு அறிவியலில் காண முடியாமல் இருக்கின்ற ஒன்றுதான்,

மனிதன் எதற்காக முயற்சி செய்கிறான் என்பதற்கான காரணமாகும்.
மதமானது மனிதன் படைக்கப்பட்டு உயிர் வாழ்க்கை உருவாக்கப்பட்டதிற்கான காரணத்தை மிகவும் தெளிவாகக் குறிப்பிடுகிறது. அதே வேளை அறிவியல் என்பது ஒரு சாதனமே, அதனிடம் ஒரு மனிதனின் எண்ணம் மற்றும் நோக்கம் போன்றவற்றிற்கான எவ்வித விளக்கமும் கிடையாது.

மதத்தை ஆதரிப்பதற்கு அல்லது அதில் ஈடுபாடுகாட்டுவதில் மனிதர்கள் அதிகம் பயப்படுவதற்கான காரணம் வாழ்வின் சுகங்ககளை அனுபவிப்பதற்கு அது தடையாக அமைந்து விடும் என்பதினாலாகும். மதம் என்பது உண்மையில் மகிழ்ச்சியான விடயங்களிருந்து அவசியம் ஒதுங்கியிருக்க வேண்டும் என்பதும், அது அனுமதித்தவை தவிர அனைத்தும் தடைசெய்யப்பட்டது என்பது மக்களிடம் பரவலாக காணப்படும் நம்பிக்கையாகும்.

இந்த தவறான நம்பிக்கையில் வீழ்ந்துள்ள அதிகமானோர் மதத்தைப் புறக்கணித்து விரண்டோடுகின்றனர். இப்பிழையான கருத்தியலை சரிபடுத்தவே இஸ்லாமிய மார்க்கம் வந்தது, அது அடிப்படையில் மனிதனுக்கு அனைத்தும் அனுமதிக்கப்பட்டதே என்றும் தடைசெய்யப்பட்டவைகளும் வரையறைகளுக்குட்பட்ட விடயங்களும் சில அம்சங்களே என்றும் இதில் எவரும் முரண்படுவதற்கில்லை என்பதாகவும் குறிப்பிட்டது.

ஆன்மா மற்றும் உடல் பிறர் உரிமைகள் ஆகியவற்றிற்கிடையில் சமநிலை பேணுமாறு தூண்டுவது போன்று சமூகத்தின் அனைத்து உறுப்பினர்களுடன் ஒன்றிணைந்து வாழுமாறும் தனிமனிதனுக்கு அழைப்பு விடுக்கிறது.

மதத்தை துறந்து வாழும் சமூகங்கள் எதிர்கொள்ளும் மிகப்பெரிய சவால்களில் ஒன்றாக தீய மற்றும் மோசமான மனித நடத்தையுடையோரை கையாழ்வது பற்றியதாகும். இவ்வாறான சமூகங்களில் நெறிதவறியோரை தடுக்க மிகக் கடுமையான தண்டனைகளை விதிப்பதை மட்டுமே உன்னால் காண முடியும். "உங்களில் அழகிய செயலுடையவர் யார் என்பதை சோதிக்கவே அவன் மரணத்தையும் வாழ்வையும் படைத்தான்".(அல்முல்க் :2).

*உலக வாழ்வின் பெருமானம் என்ன?*

பரீட்சையானது புதிய கல்வி வாழ்வை எதிர்கொள்வதற்காக, மாணவர்களின் தராதரத்தை மதிப்பிட்டு வேறுபடுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்டதாகும். பரீட்சை குறுகியதாக இருந்தாலும், புது வாழ்வை எதிர் நோக்கியிருக்கும் மாணவரின் தலைவிதியை அது தீர்மானிக்கிறது. அதேபோன்று தான் மறுமை வாழ்வை முனனோக்கிச் செல்வோரின் தராதரத்தை வேறுபடுத்துவதற்காக இவ்வுலக வாழ்வு மனிதர்களுக்கான தேர்வாகவும் சோதனை களமாகவும் இருக்கிறது. உண்மையில் மனிதன் அவன் திரட்டிவைத்த பொருட்களுடன் இவ்வுலகைவிட்டு பிரிந்து செல்லாது தான் செய்த நல்வினைகளுடனும் செயற்பாடுகளுடனுமே பிரிந்து செல்கிறான். ஆகவே மறுமை வாழ்வையும், அங்கு கிடைக்கவிருக்கும் வெகுமதியையும் நோக்காகக் கொண்டு செயற்பட வேண்டும் என்பதை மனிதன் புரிந்துகொள்வது அவசியமாகும்.

மனிதனுக்கு மகிழ்ச்சியான வாழ்வு எவ்வாறு (கிடைக்கும்) சாத்தியமாகிறது?

அல்லாஹ்வுக்கு முழுமையாக அடிபணிந்து, அவனுக்குக் கட்டுப்பட்டு, அவனின் விதியை ஏற்றுக்கொள்வதன் மூலமே மனிதனுக்கு மகிழ்ச்சி கிடைக்கிறது.

எல்லா விடயங்களும் அடிப்படையில் அர்த்தமற்றவை என்றும். அத்துடன் ஒரு நிறைவான வாழ்வை அடைந்து கொள்வதற்கு தமக்கென ஒரு கருத்தை சிருஷ்டித்துக்கொள்வதற்கான சுதந்திரம் இருப்பதாகவும் பலர் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். இவ்வுலகில் எமது இருப்புக்கான நோக்கத்தை மறுப்பது உண்மையில் தன்னையே ஏமாற்றிக்கொள்வதற்கு நிகரான விடயமாகும். அதாவது இவ்வுலக வாழ்வில் எமக்கு ஒரு இலக்கு உண்டு என நாம் போலியாக எமக்குள்ளே கூறிக்கொள்வதை ஒத்ததாகும். எமது இந்நிலையானது குழந்தைகள் தங்களுக்கு மத்தியில் விளையாடும் போது வைத்தியர்கள், செவிலியர்கள், தாய் தந்தையர்கள் என நடிப்பதை போன்றதாகும் என்பதை நாம் புரிந்து கொள்ளல் வேண்டும். வாழ்வில் எமது இலக்கை தெரிந்து கொள்ளாது விடின் மகிழ்ச்சியை ஒரு போதும் அடைந்து கொள்ளவே முடியாது என்பதே யதார்த்தமாகும். உதாரணத்திற்கு ஒரு மனிதன் தனது விருப்பத்திற்கு மாறாக மிகவும் ஒரு

ஆடம்பரமான தொடரூந்தில் முதல் தர வகுப்பில் ஏற்றப்பட்டிருப்பதை காண்கிறார். இது ஒரு மிக உயர்ந்த அனுபவமாகவும் ஆடம்பரத்தின் உச்சமாகவும் அவரைப் பொருத்தவரை இருக்கலாம். என்றாலும் நான் எப்படி இந்த தொடரூந்தில் ஏறினேன்? இந்தப் பயணத்தின் நோக்கம் என்ன? இது எங்கு செல்கிறது? போன்ற அவரின் மனதில் தோன்றும் கேள்விகளுக்கு விடை காணாது அவரின் பயணம் மகிழ்ச்சியானதாக இருக்குமா? மேற்குறிப்பிட்ட கேள்விகளுக்கான எந்தப்பதிலும் கிடைக்கவில்லையாயின் அவரால் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும்? அவர் தனது வசம் உள்ள அனைத்து ஆடம்பரங்களையும் அனுபவிக்கத் தொடங்கினாலும், அவர் ஒருபோதும் உண்மையான, அர்த்தமுள்ள மகிழ்ச்சியை அடைய மாட்டார். இந்தக் கேள்விகளை அவர் மறக்கச் செய்ய இந்தப் பயணத்தின் சுவையான உணவு மாத்திரம் போதுமா? இந்த வகையான மகிழ்ச்சி தற்காலிகமானதும் போலியானதுமாகும். இந்த முக்கிய கேள்விகளுக்கான பதில்களைக் கண்டறிவதை வேண்டுமென்றே பொருட்படுத்தாது இருப்பதன் மூலம் மட்டுமே அதனை பெற்றுக்கொள்ள முடியும். இது குடிப்பழக்கத்தின் விளைவாக ஏற்படும் தற்காலிக போலி பரவச நிலையைப் ஒத்தது. அது குடிப்பழக்கத்திற்கு உட்பட்ட அந்நபரை அழிவுக்கே இட்டுச் செல்லும். அத்துடன் மனித இருப்பின் இன்றிமையா கேள்விகளான இவைகளுக்கு விடை காணாத வரையில் யதார்த்தமான உண்மையான மகிழ்ச்சி ஒரு மனிதனுக்கு கிடைக்கப் போவதில்லை என்பதே ஒரு பேருண்மையாகும்.

# உண்மை மார்க்கத்தின் மேன்மை

### *இஸ்லாத்தை ஏற்பது அனைவருக்கும் சாத்தியமானதா?*

ஆம், இஸ்லாம் அனைவருக்கும் சாத்தியமானது. இவ்வுலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் உண்மை மார்க்கத்தில் அல்லாஹ்வுக்கு அடிபணிந்த நிலையில் எவ்வித இடைத்தரகருமின்றி முஸ்லிமாகவே பிறக்கின்றனர். அந்தக் குழந்தையானது தனது குடும்பம், அல்லது பாடசாலை அல்லது எந்த மத அமைப்புக்களினதும் தலையீடுகளுமின்றி பருவ வயதை அடையும் வரையில் நேரடியாக அல்லாஹ்வையே வணங்கிக் கொண்டிருக்கிறது. அவன் பருவவயதை அடைந்ததும் தனது செயல்களுக்கு பொறுப்புக் கூறக்கூடியவனாகவும் அது குறித்து விசாரணைக்குட்படக்கூடியவனாகவும் மாறிவிடுகிறான். அந்தக் குழந்தை பருவவயதை அடைந்தபின் ஈஸாவை தனக்கும் அல்லாஹ்வுக்கும் இடையில் ஒரு மத்தியஸ்தராக ஏற்றுக்கொள்வதன் மூலம் அவன் கிறிஸ்தவனாகவும், புத்தரை மத்தியஸ்தராக எடுத்துக்கொள்வதன் மூலம் பௌத்தனாகவும், கிரிஷ்னனை தனது மத்தியஸ்தராக எடுத்துக்கொள்வதன் மூலம் ஒரு இந்துவாகவும் மாறிவிடுகிறான். அல்லது முஹம்மதை மத்தியஸ்தராக ஏற்று இஸ்லாத்திலிருந்து முற்றிலும் விலகி நடப்பதற்கோ, அல்லது அல்லாஹ்வை மாத்திரம் வணங்கி இயற்கை மார்க்கத்தில் நிலைத்திருக்க்கூடியவானகவோ மாறிவிடுகிறான். முஹம்மத் நபியவர்கள் தனது இரட்சகனிடமிருந்து கொண்டுவந்த இறைத்தூதைப் பின்பற்றுவர் ^+ரிய இயல்புணர்வுக்கு ஒத்துப்போகும் உண்மை மார்க்கத்தையே பின்பற்றுகிறார். இது தவிர அனைத்துக் கொள்கைகளும் வழிகேடும் நெறிபிறழ்வுமாகும். உதாரணத்திற்கு மனிதனுக்கும் அல்லாஹ்வுக்குமிடையில் முஹம்மதை மத்தியஸ்தராக எடுத்துக்கொண்டாலும் சரியே! “எல்லாக் குழந்தைகளும் இயற்கை மார்க்கமான இஸ்லாத்திலே பிறக்கின்றன. அந்தக் குழந்தையின் பெற்றோரே அக்குழந்தையை யூதனாகவோ அல்லது கிறிஸ்துவனாகவோ அல்லது நெருப்பு வணங்கியாகவோ மாற்றிவிடுகின்றனர்”. (ஆதாரம் : முஸ்லிம் (1218)).

### *மதங்களுக்கிடையிலான உரையாடல் குறித்து இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன?*

படைப்பாளனான அல்லாஹ்விடமிருந்து கிடைத்த உண்மை மார்க்கம் ஒன்றே தவிர வேறொன்றும் இல்லை. அந்த சத்திய மார்க்கமானது ஏகனும் தனித்தவனுமான படைப்பாளனை விசுவாசித்து அவனை மாத்திரமே வணங்குவதுமாகும். இவை தவிரவுள்ள அனைத்தும் மனிதனால் கண்டுபிடிக்கப் பட்டவைகளாகும். உதாரணத்திற்கு நாம் இந்தியாவுக்கு சென்று அங்கிருக்கும் மக்கள் மத்தியில் இறைவன் ஒருவனாவான் என்று கூறினால் அவர்கள் அனைவரும் ஆம் கடவுள் ஒன்றே என்று ஒரே குரலில் விடையளிப்பார்கள். உண்மையில் இதுவே அவர்களின் வேதங்களில் எழுதிவைக்கப்பட்ட விடயமாகும். என்றாலும் அவர்கள் அனைவரும் வேதம் கூறும் கடவுட் கொள்கைக்கு முரண்பட்டு இருப்பதுடன் இதில் அவர்கள் தங்களுக்கு மத்தியில் கடுமையாக மோதிக்கொள்கின்றனர். மேலும் இறைவன் பூமிக்கு எந்த வடிவத்தில் அல்லது தோற்றித்தில் வருகிறான் என்ற ஒரு அடிப்படை புள்ளியில் அவர்கள் தங்களுக்கு மத்தியில் முரண்பட்டு நிற்கின்றனர். உதாரணமாக, இந்திய கிறிஸ்தவர் கடவுள் குறித்து இவ்வாறு கூறுவார்: கடவுள் ஒருவனே, ஆனால் அவர் மூன்று நபர்களில் (பிதா,மகன் மற்றும் பரிசுத்த ஆவியானவர்) பிரதிபலிக்கிறார் எனத் திரித்துவக் கொள்கையை குறிப்பிடுவார். இந்து மதத்தவராயின் அவர் கடவுளானவர் விலங்கு, அல்லது மனிதன் அல்லது சிலை வடிவத்தில் வருகிறார் எனக் கூறுவார். இந்து மதத்தில் : (சாந்தோக்கிய உபநிடதம் 6:1-2) 'கடவுள் ஒருவன் மட்டுமே இரண்டாவது ஒருவன் கிடையாது'( வேதம் : சுவேதா சுவேத்தரா உபநிடதத்தில் (4: 19 ,4:20, 9:6) ' கடவுளுக்கு பெற்றோரோ தலைவரோ கிடையாது' 'அவனை காணவும் முடியாது. மேலும் கண்ணால் அவனை பார்க்கவும் முடியாது'அவனுக்கு ஒப்பாக எவரும் கிடையாது (யஜுர் வேதம் 9:40) 'ஐம்பூதங்களை (காற்று,நீர்,நெருப்பு போன்றவை) வணங்குவர்கள் இருளில் நுழைந்து இருளில் மூழ்கிப்போனோராவர். இவர்கள் மனிதனால் படைக்கப்பட்டவற்றையே (சிலை மற்றும் கற்கள் போன்ற கையினால் செய்யப்பட்டவற்றை) வணங்குகின்றனர். கிறிஸ்தவத்தில் : (மத்தேயு 4:10) 'அப்பொழுது இயேசு அவனை நோக்கி: போ, சாத்தானே, ஏனென்றால், உன் தேவனாகிய கர்த்தரைத் தொழுதுகொள், அவனை மட்டுமே சேவிப்பாயாக

என்று எழுதப்பட்டுள்ளது' (யாத்திராகமம் 20:3) -5).என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம் நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்; உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்துப் பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராய் இருக்கிறேன்.'என்னைத் தவிர வேறு தெய்வங்கள் உங்களுக்கு இருக்க வேண்டாம், நீங்கள் செதுக்கப்பட்ட ஒரு உருவத்தையோ, மேலே வானத்தில் உள்ளதையோ, கீழே பூமியில் உள்ளதையோ, பூமிக்குக் கீழே உள்ள தண்ணீரில் உள்ளதையோ நீங்கள் உருவாக்க வேண்டாம். அவர்களுக்கு பணிவிடை செய்யாதீர்கள், ஏனென்றால் உங்கள் கடவுளாகிய ஆண்டவர் ரோஷமிக்கவர் என்னைப் பகைக்கும் தந்தையர்களின் பாவங்களை மூன்றாம் நானகாம் தலைமுறையிலும் விசாரிக்கிறோன். மதப்பிரிவுகளுக்கு மத்தியில் அல்லது மதங்களுக்குள்ளே காணப்படுகின்ற அனைத்து வித்தியாசங்களும் வேறுபாடுகளும் பிரச்சினைகளுக்குமான அடிப்படை காரணம், மனிதர்கள் தங்களுக்கும் இறைவனுக்கும் மத்தியில் மத்தியஸ்தர்களை எடுத்துக் கொண்டமையே, என்பதை மனிதன் மிக ஆழமாக சிந்தித்தால் உணர்ந்து கொள்வான். உதாரணத்திற்கு கத்தோலிக்க மற்றும் புரடஸ்தான்த் பிரிவினரும் இந்து மதப் பிரிவினரும் படைப்பாளனான அல்லாஹ்வுடன் தொடர்பு கொள்ளும் முறையில் வித்தியாசப்படுகின்றனர். படைப்பாளன் ஒருவன் உள்ளான் என்பதிலல்ல. இவர்கள் அனைவரும் நேரடியாக இறைவனை –அல்லாஹ்வை- வணங்கினால் அவர்கள் அனைவரும் அவனை ஏக இறைவனை ஏற்றுக்கொண்டவர்களாகி விடுவர். இறைவனின் இலட்சணங்கள் குறித்து இந்து மற்றும் கிறிஸ்தவ மதங்களில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. இதற்கு உதராணமொன்றை குறிப்பிடலாம். அதாவது நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் படைப்பாளனான ஒரே கடவுளை யார் வணங்கினாரோ அவர் புனித இஸ்லாம் மார்க்கத்தில் இருந்தார் அதுவே உண்மை மார்க்கமாகும்.என்றாலும் யார் ஒரு மதப்போதகரை அல்லது புண்ணியவானை தனக்கும் படைப்பாளனுக்குமிடையில் எடுத்துக் கொண்டாரோ அவர் அசத்திய மார்க்கத்தில் உள்ளார் என்பதாகும்.

எனவே இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பின்பற்றியோரும் ஒரே இறைவனான அல்லாஹ்வை மாத்திரமே வணங்க வேண்டும். அதாவது அவர்கள் அல்லாஹவைத் தவிர உண்மையாக வணங்கப்படக்கூடிய இறைவன் வேறு யாரும் கிடையாது என்றும் இப்ராஹீம் அல்லாஹ்வின் தூதர் என்றும் அவர்கள் சான்றுபகர்ந்து ஏற்க வேண்டும் என்பது இதன் பொருளாகும். அல்லாஹ் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை நபி இப்ராஹீம் அவர்களின் தூதுத்துவத்தை உண்மைப்படுத்துவதற்காக அனுப்பினான். இந்த வகையில் நபி இப்ராஹீமை பின்பற்றியோர் இந்த புதிய நபியை ஏற்றுக் கொள்ளவது அவசியமாகும். அப்போது அவர்கள் அல்லாஹ்வைத் தவிர உண்மையாக வணங்கப்படக் கூடிய இறைவன் வேறு யாரும் கிடையாது என்றும் மூஸா மற்றும் இப்ராஹீம் அல்லாஹ்வின் தூதர்கள் என்றும் அவர்கள் சான்று பகர்ந்து ஏற்றுக் கொள்ளல் வேண்டும். எடுத்துக்காட்டிட்காக இந்த நேரத்தில் யார் காளை மாட்டை வணங்கக்கூடியவர்களாக இருந்தார்களோ அவர்கள் பிழையான அசத்தகிய மார்க்கத்தில் இருந்தார்கள் என்பது இதன் கருத்தாகும்.

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தூதை உண்மைப்பிக்கும் முகமாக நபி ஈஸா வந்த போது நபி மூஸாவைப் பின்பற்றியோர் யாவரும் ஈஸாவையும் அவர்களின் ^+டர்களையும் உண்மைப்படுத்திட வேண்டும். இந்த வகையில் அவர்களில் ஒருவர் இஸ்லாத்தை ஏற்கையில் அவர் பின்வருமாறு ஷஹாதா கலிமாவைச் கூற வேண்டும். அதாவது அல்லாஹவைத் தவிர உண்மையாக வணங்கப்பட்க்கூடிய இறைவன் வேறு யாரும் கிடையாது என்றும் இப்ராஹீம் மற்றும் மூஸா, ஈஸா ஆகியோர் அல்லாஹ்வின் தூதர் என்றும் அவர்கள் சான்றுபகர்ந்து ஏற்க வேண்டும். அத்துடன், இந்நேரத்தில் யார் திரித்துவத்துவத்தை ஏற்று, ஈஸாவையும் அவரின் தாயையும் வணங்கிக் கொண்டிருந்தார்களோ அவர்கள் பிழையான கோட்பாட்டில் இருக்கிறார்கள்.

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமக்கு முன்னர் அனுப்பப்பட்ட தூதர்களை உண்மைப்படுத்தி தூதராக வந்ததும் ஈஸா மற்றும் மூஸா (அலைஹிமஸ்ஸலாம்) ஆகியோரை பின்பற்றியோர் இந்த புதிய நபியை ஏற்க வேண்டும். அப்போது அவர்கள் உண்மையாக வணங்கப்படக்கூடிய அல்லாஹ்வைத்தவிர வேறு கடவுள் கிடையாது என்றும்

முஹம்மத், ஈஸா, மூஸா இப்ராஹீம் ஆகியோர் அனைவரும் அல்லாஹ்வின் தூதர்கள் என சாட்சி கூறவேண்டியது அவசியமாகும். ஆகவே முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தூதராக அனுப்பட்டிருக்கும் வேளையில் யார் அவர்களை வணங்கி அல்லது அவர்களிடம் மன்றாடி உதவியை கோருவோராய் இருப்பின் அவர் அசத்தியத்தில் இருக்கிறார். ஆகவே இஸ்லாத்தைப் பொருத்தவரை அதற்கு முன்புள்ள ஏகத்துவ கொள்கையை போதிக்கும் இறைவனால் இறக்கப்பட்ட, காலத்தால் நீட்சி பெற்ற மதங்களின் அடிப்படைகளையும், தூதர்கள் தங்களது காலத்திற்கு ஏற்றவாறு ஒவ்வொரு சமூதாயத்தினருக்கும் அவற்றை சுமந்து வந்துள்ளனர் என்பதையும் உண்மைப்படுத்துகிறது. தேவை வித்தியாசப்படுகையில் புதிய மார்க்கத்திற்கான ஒரு கட்டமும் வந்துவிடுகிறது, அது அடிப்படையுடன் ஒன்று படுவதுடன் அந்த சமூகத்தின் படிப்படியான தேவைகளின் நிலைக்கேற்ப அதன் சட்டங்கள் வேறுபடுகின்றன. அது மாத்திரமன்றி அடிப்படை ஏகத்துவக் கோட்பாட்டில் முன்னையதை தொடர்ந்து வந்த தூதுத்துவங்கள் உண்மைப்படுத்தி வந்துள்ளதையும் காணமுடிகிறது. இந்த அடிப்படையில் உரையாடலின் மூலம் ஒரு இறைவிசுவாசி படைப்பாளனின் இறைதூதுத்துவத்தின் ஒத்த தன்மையை புரிந்து கொள்வான்.

மதங்களுக்கிடையிலான உரையாடல் என்பது சரியான ஒரே மார்க்கத்தின் கருத்தியலை வலியுறுத்தும் அமைப்பில் இந்த அடிப்படை கருத்தின் அடியாக முண்னெடுக்க வேண்டியது அவசியம்.

உரையாடலைப் பொருத்தவரை அதற்கே உரிய பல அடிப்படைகளும், ஈமான் மற்றும் இருப்பியல் சார் சொல் நெறிகளும் உண்டு. இவற்றை மனிதன் மதித்து நடப்பதும் இதிலிருந்தே பிறருடன் தொடர்பை முன்னெடுப்பதும் அவசியமாகும். இவ்வுரையாடலின் நோக்கம் நாம் நடைமுறையில் கண்டுகொண்டிருக்கும் மனிதனுக்கும் தூய ஏகத்துவக் கோட்பாட்டிற்கும் தடையாக இருந்து அழிவுக்கும், நாசத்திற்கும் வழிவகுக்கும் கண்மூடித்தனமான பிடிவாத சார்பியக் கணிப்புகளுக்கு அப்பாட்பட்டு வெறித்தனம் மனோஇச்சை போன்றவற்றிலிருந்து விடுபடுவதாகும்.

### *இஸ்லாம் சகிப்புத்தன்மையின் பால் அழைப்புவிடுக்கிறதா?*

இஸ்லாமிய மார்க்கம் அழைப்பு, பரஸ்பர விட்டுக்கொடுப்பு (சகிப்புத்தன்மை) அழகிய முறையில் தர்க்கம் செய்தல் பேன்ற விடயங்களில் கட்டமைக்கப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறுகிறான் :

"(நபியே! மனிதர்களை) மதிநுட்பத்தைக் கொண்டும், அழகான நல்லுபதேசத்தைக் கொண்டுமே உமது இறைவனுடைய வழியின் பக்கம் அழைப்பீராக! மேலும், அவர்களுடன் (தர்க்கிக்க நேரிட்டால்) (கண்ணியமான) அழகான முறையில் தர்க்கம் செய்வீராக. உமது இறைவனுடைய வழியிலிருந்து வழி தவறியவர்கள் எவர்கள் என்பதை நிச்சயமாக அவன்தான் நன்கறிவான். நேரான வழியிலிருப்பவர்கள் யார் என்பதையும் அவன்தான் நன்கறிவான்". (அந்நஹ்ல் :125). புனித குர்ஆன் இறுதி வேதமாகவும், தீர்க்கதரிசிகளில் முஹம்மது இறுதி தீர்க்கதரிசியாகவும் இருப்பதால் இஸ்லாமிய மார்க்க சட்டத்துரையானது மார்க்க அடிப்படைகள் மற்றும் கொள்கைகள் குறித்து உரையாடுவதற்கும் விவாதிப்பதற்குமான வழியை அனைவருக்கும் திறந்து கொடுத்துள்ளது. இந்த வகையில் 'மார்க்கத்தில் எந்தவொரு நிர்ப்பந்தமும் கிடையாது' என்ற கோட்பாடானது இஸ்லாமிய மார்க்த்தில் உத்தரவாதப்படுத்தப்பட்டுள்ளது. ஒரு அரசு தங்களுக்கு பாதுகாப்பளித்து தங்களின் மார்க்கத்தைப் பின்பற்றி வாழ்வதற்கான உரிமையை வழங்கியமைக்கு பதிலாக அந்நாட்டிற்குச் செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்றி பிறரின் கௌரவத்தை மதிக்கும் நிலை இருக்கும் பட்சத்தில் ^+ரிய இஸ்லாத்தின் இயற்கை இறையியல் கோட்பாட்டை ஏற்க வேண்டும் என்று எவரையும் அது நிர்ப்பந்திக்காது.

இதற்கு சிறந்த உதாரணமாக முஸ்லிம்கள் 638 ம் வருடம் ஜெரூஸல நகரை வெற்றி கொண்டபோது உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அம்மக்களுக்கு எழுதிய உமரிய உடன்படிக்கை சாசனமாகும். அதில் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தேவாலயங்கள் மற்றும் உடமைகளுக்கு பாதுகாப்பு உத்தரவாதம் அளிப்பதாக குறிப்பிட்டுள்ளார்கள். இதனால்தான் உமரிய உடம்படிக்கையானது குத்ஸ் வரலாற்றில் மிகப்பெரும் ஆவணமாகக்

கருதப்படுகிறது.

'அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கிறேன். இது ஈலியா (ஜெரூஸலம்) நகர மக்களுக்கு உமர் இப்னுல் கத்தாப் அவர்கள் எழுதிக்கொள்வது, இந்நகரில் வாழ்வோர் யாவரும் அவர்களின் உயிர்களுக்கும், குழந்தைகளுக்கும், உடமைகளுக்கும், அவர்களின் தேவாலயங்களுக்குமான பாதுகாப்பைப் பெற்றுக் கொள்வர். அவர்களின் தேவாலயங்கள் இடிக்கப்படவோ, அவர்களின் இருப்பிடங்களில் பிறர் குடியமர்த்தப்படவோ மாட்டார்கள். (இப்னுல் பத்ரீக் : அத்தாரீஹ் அல்மஜ்மூஃ அலத் தஹ்கீக் வத்தஸ்தீக், பாகம் 2 பக்கம் 147). இந்த உடன்படிக்கையை கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு எழுதிக்கொண்டிருக்கையில் தொழுகைக்கான நேரம் நெருங்கியது. அப்போது திருச்சபை முதல்வாரன ஸபார்னியோஸ் அவர்கள் புனித தேவாலயத்தில் தொழுகையை நிறைவேற்றுமாறு உமருக்கு அழைப்பு விடுத்தார். இதனை கலீபா அவர்கள் மறுத்து, அவரிடம் நான் இங்கே தொழுதால் உங்களை முஸ்லிம்கள் மிகைத்து, அமீருல் முஃமின் ' அவர்கள் இங்கே தொழுதார்கள் எனக் கூறுவார்கள் என்பதை நான் பயப்படுகிறேன்' எனக் கூறினார்கள். தாரீஹுத்தபரி –முஜீரித்தீன் அல் உலைமி அல் மக்திஸி.

இஸ்லாம், முஸ்லிமல்லாதவர்களுடனான உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் மதித்து நிறைவேற்றுவதுடன், துரோகிகள் மற்றும்; உடன்படிக்கைகளை மீறுபவர்களுடன் கண்டிப்போடு நடந்து கொள்கிறது. அத்துடன் இவ்வாறான துரோகிகளுடன் முஸ்லிம்கள் ஒத்துழைத்து நடப்பதை இஸ்லாம் தடைசெய்கிறது.

"நம்பிக்கை கொண்டோரே! உங்களுக்கு முன்னர் வேதம் கொடுக்கப்பட்டவர்ளில் உங்கள் மார்க்கத்தைக் கேலியாகவும் விளையாட்டாகவும் எடுத்துக் கொண்டவர்களையும், இன்னும் நிராகரிப்பாளர்களையும் நேசர்களாக நீங்கள் எடுத்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் நம்பிக்கையாளரர்களாக இருந்தால் அல்லாஹ்வையே அஞ்சிக்கொள்ளுங்கள்". (அல் மாஇதா :57). (அல் மாஇதா :57) முஸ்லிம்களுடன் போராடுகின்ற, தங்களின் இருப்பிடங்களிலிருந்து வெளியேற்றுகின்றவர்களுடன் ஒத்துழைத்து நடந்து கொள்ளக் கூடாது என்பதை அல்குர்ஆன் பல இடங்களில் வலியுறுத்தி குறிப்பிட்டுள்ளது.

"எவர்கள் மார்க்கவிடயத்தில் உங்களுடன் போரிடவில்லையோ அவர்களுக்கும் மேலும் உங்களை உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்றவில்லையோ அவர்களுக்கும் நீங்கள் நன்மை செய்வதையும் அவர்களுடன் நீங்கள் நீதியாக நடப்பதையும் அல்லாஹ் உங்களுக்கு தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதியாக நடப்பவர்களை நேசிக்கிறான். எவர்கள் மார்க்க விடயத்தில் உங்களுடன் போரிட்டு, உங்களை உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்றினார்களோ அவர்களையும் மேலும் உங்களை வேளியேற்றிட உதவி செய்தார்களோ அவர்களையும் நேசத்திற்குரியவர்களாக எடுத்துக்கொள்வதையே உங்களுக்குத் தடுக்கிறான். அவர்களை யார் நேசர்களாக எடுத்துக் கொள்கின்றார்களோ அவர்கள்தாம் அநியாயக்காரரர்கள்". (அல் மும்தஹினா :8-9). (அல் மும்தஹினா :8-9) அல்குர்ஆன் ஈஸா மற்றும் மூஸா அலைஹிமஸ்ஸலாம் ஆகியோரின் சமூகத்தில் அக்காலத்தில் இருந்த ஏகத்துவவாதிகளை புகழ்ந்து பேசுகிறது.

"அவர்கள் அனைவரும் ஒரே சமமானவர்கள் அல்லர். வேதத்தை உடையோரில் சத்தியத்தில் நிலைத்திருக்கும் கூட்டத்தினரும் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை இரவு வேளைகளில் ஓதி சிரம்பணிகின்றனர். அவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொள்கின்றனர். மேலும் நன்மையை ஏவி தீமையைவிட்டும் தடுத்து நல்ல காரியங்கள் புரிவதிலும் விரைகின்றனர். அவர்கள் நல்லவர்களில் உள்ளவர்கள் ஆவர்". (ஆலு இம்ரான் (113-114). "நிச்சயமாக வேதமுடையோரில், அல்லாஹ்வையும், உங்களுக்கு இறக்கப்பட்டதையும், அவர்களுக்கு இறக்கப்பட்டதையும், அல்லாஹ்வை அஞ்சியவர்களாக நம்பிக்கை கொள்வோரும் உள்ளனர். அல்லாஹ்வின் வசனங்களை அவர்கள் அற்ப விலைக்கு விற்கமாட்டார்கள். இத்தகையோருக்குரிய கூலி அவர்களது இரட்சகனிடம் அவர்களுக்கு உண்டு. நிச்சயமாக அல்லாஹ் விசாரணை செய்வதில் தீவிரமானவன்". (ஆல இம்ரான் : 199). "நம்பிக்கை கொண்டவர்களாயினும், யூதர்களாயினும், கிறிஸ்தவர்களாயினும், ஸாபியீன்களாயினும் எவர்கள் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் உண்மையாகவே நம்பிக்கை கொண்டு நற்செயல்களைச் செய்கிறார்களோ அவர்களுடைய கூலி அவர்களுடைய இறைவனிடத்தில் அவர்களுக்கு நிச்சயமாக உண்டு. மேலும், அவர்களுக்கு எவ்விதப் பயமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்".(அல் பகரா: 62).

## அறிவெழுச்சி-அறிவொளிக் காலம் (Enlightenment) பற்றிய இஸ்லாமிய நிலைப்பாடு யாது?

அறிவொளி பற்றிய இஸ்லாமிய கருத்தானது, இறை விசுவாசம் மற்றும் அறிவின் உறுதியான அடித்தளத்தில் அமையப்பெற்றுள்ளது. அதாவது முதலில் அல்லாஹ் பற்றிய (கடவுள்) நம்பிக்கை மற்றும் அந் நம்பிக்கையிலிருந்து பிரிக்க முடியாத அறிவு ஆகியவற்றின் மூலம் அறிவொளியையும் இதய ஒளியையும் ஒருங்கே பெற்றுள்ளது.

ஐரோப்பிய அறிவொளிக் கருத்து மற்ற மேற்கத்திய கருத்துகளைப் போலவே இஸ்லாமிய சமூகங்களுக்குள் புகுத்தப்பட்டுவிட்டது. இஸ்லாமிய கருத்தோட்டத்தில் (Enlightenment) அறிவொளியானது இறைவிசுவாசத்தின் ஒளியைப் பெறாத வெறுமனே பகுத்தறிவில் மாத்திரம் நம்பிக்கை கொண்ட ஒரு விடயமல்ல. அதே வேளை இந்தப் பூமியில் வாழ்வதற்கும் மக்கள் பயன் பெறும் விதத்திலும் பொது நலனை அடைந்து கொள்ளும் விதத்திலும் விவகாரங்களை கையாள்தல் சிந்தித்தல், நோட்டமிடுதல், கூர்ந்து அவதானித்தல் போன்ற விடயங்களில் அல்லாஹ்வால் வழங்கப்பட்டுள்ள அருட்கொடையான பகுத்தறிவை அவன் பயன்படுத்தாது விட்டால் அவனின் இறைவிசுவாசம் அவனுக்குப் எந்தப்பயனையும் அளிக்கமாட்டாது.

மத்திய கால நூற்றாண்டுகளில் கான்ஸ்டான்டினோப்பிளில் உட்பட மேற்கு மற்றும் கிழக்கத்திய அனைத்து தேசங்களிலும் அணைந்திருந்த நாகரித்தையும் பண்பாட்டையும் முஸ்லிம்களே மீண்டும் கட்டியெழுப்பி அவற்றிற்கு ஒளி பாய்ச்சினர்.

மனித விருப்புக்கும், பகுத்தறிவிற்கும் எதிராக கிறிஸ்தவ திருச்சபை அதிகாரிகளால் நடாத்தப்பட்ட சர்வதிகாரத்திற்கும், கொடுங்கோண்மைக்கும் எதிராக ஐரோப்பாவில் தோன்றிய இயல்பான எதிர் வினையகாவே அறிவொளி இயக்கம் காணப்படுகிறது. இஸ்லாமிய நாகரீமானது இந்நிலைபற்றி அறிந்திருக்கவில்லை.

அல்லாஹ் கூறுகிறான் :

"அல்லாஹ் நம்பிக்கையாளர்களின் பாதுகாவலன் ஆவான். அவன் அவர்களை இருள்களிலிருந்து வெளியேற்றி ஒளியின் பக்கம் செலுத்துகிறான். ஆனால், நிராகரிப்பவர்களுக்கோ அவர்களின் பாதுகாவலர்கள் ஷைத்தான்கள்தான். அவை அவர்களை ஒளியிலிருந்து நீக்கி இருள்களின் பால் செலுத்துகின்றன. அவர்கள் நரகவாசிகள். மேலும், அவர்கள் அதில் நிரந்தரமாக தங்கி விடுவார்கள்". (அல் பகரா : 257). இவ்வசனங்களை சிந்திப்பதன் மூலம், இறைவிருப்பே -நாட்டமே- மனிதனை இருளிலிருந்து ஒளியின் பால் வெளியேற்றுகிறது, அதாவது வழிகேட்டிலிருந்து நேரான பாதைக்கு வழிகாட்டுகிறது என்பதை அறிய முடிகிறது. ஆக மனிதனுக்குக் கிடைக்கும் இறை வழிகாட்டலானது அல்லாஹ்வின் அனுமதியின் பிரகராமே ஒருவருக்குக் கிடைக்கிறது என்பதே உண்மையாகும். ஏனெனில் அறியாமை, இணைவைப்பு-(பல தெய் வழிபாடு), மூட நம்பிக்கை போன்ற இருள்களிருந்து விடுவித்து இறை நம்பிக்கை, அறிவு, உண்மை அறிவு ஆகியவையின் பால் அல்லாஹ்வால் வழிகாட்டப்படும் மனிதன் பகுத்தறிவு, அகப்பார்வை, (நுண்ணறிவு) உள்ளுணர்வு போன்றவற்றால் அறிவொளி பெற்றவராவார்.

அல்லாஹ் தனது வழிகாட்டலை ஒளி எனும் அடை மொழி மூலம் பின்வரும் வசனத்தில் சுட்டிக்காட்டுகிறான் :

"நிச்சயமாக அல்லாஹ்விடமிருந்து உங்களுக்கு ஒளியும் தெளிவான வேதமும் வந்துவிட்டது" (அல் மாஇதா: 15).

மனிதர்களை இறைமறுப்புக்காரிருளிருந்து மீட்டெடுத்து இறைவனை ஏற்று வாழும் தெளிவான இறைவழிகாட்டல் எனும் ஒளியின்பால் வழிகாட்டவே தனது தூதர்களான மூஸா மற்றும் ஈஸாவிற்கும் (திரிபுபடுத்தப்படாத) வேதங்களான தவ்ராத்தையும் இன்ஜீலையும் இறக்கியருளியதோடு இறுதித்தூதரான முஹமத்திற்கு அல்குர்ஆனை இறக்கிவைத்தான். இதன் மூலம் ஒளியை நேர்வழியுடன் இணைந்ததாக அல்லாஹ் ஆக்கிவைத்துள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :

"நிச்சயமாக நாம் தவ்ராத்தை இறக்கினோம்.அதில் நேர்வழியும் ஒளியும் இருக்கின்றன". (மாஇதா : 44). "அவருக்கு நாம் இன்ஜீலை வழங்கினோம். அதில் நேர்வழியும் ஒளியும் இருக்கின்றன. இன்னும் அது தனக்கு முன்னுள்ள தவ்ராத்தை உண்மைப்படுத்தக் கூடியதாகவும் நேர்வழியாகவும் பயபக்தியாளர்களுக்கு நல்லுபதேசமாகவும் இருக்கிறது". (மாஇதா : 46).

அல்லாஹ்வின் ஒளியின்றி எந்த நேர்வழியும் கிடையாது. அதே போல் அல்லாஹ்வின் அனுமதியில்லாது எந்த ஒளியும் மனித உள்ளத்திற்கும் அவனின் வாழ்கைக்கும் ஒளியேற்றிட முடியாது.
அல்லாஹ் கூறுகிறான் :

"அல்லாஹ் வானங்கள் மற்றும் பூமியின் பிரகாசமாவான்" (அந்நூர் :35) அல்குர்ஆனில் எல்லா நிலைகளிலும்' அந்நூர்' ஒளி என்ற வார்த்தை ஒருமையாகவும், அதே வேளை 'இருள்கள்' 'அழ்ழுலுமாத்' என்ற வார்த்தையானது பன்மையிலும் இடம் பெற்றுள்ளதை இங்கே எம்மால் அவதானிக்க முடிகிறது. இதில் அல் குர்ஆன் எந்தளவு மிக மதிநுட்பத்தை கையாண்டிருக்கிறது என்பதை விவரிக்க வேண்டிய அவசியமில்லை. (கலாநிதி அத்துவைஜிரியின் இஸ்லாத்தின் அறிவொளி என்ற கட்டுரையிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது https://www.albayan.ae/five-senses/2001-11-16-1.1129413 .)

## இருப்பியலின் அடிப்படைக் கோட்டுபாடுகள் குறித்த இஸ்லாத்தின் நிலைப்பாடு :

*இயற்கைத் தேர்வுக்கோட்பாடு பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது? இயற்கைத் தேர்வுக்கோட்பாட்டை (ஒரு பகுத்தறிவற்ற இயற்பியல் செயல்முறை) என்றும் ஒரு தனித்துவமான புத்தாக்கப் படைப்பு சக்தியாகக் கருதும் சில டார்வினிஸ்டுகள், எந்தவொரு உண்மையான அனுபவ அடிப்படையும் இல்லாமல் அனைத்து கடினமான பரிணாமச் சிக்கல்களையும் தீர்க்கும் ஒரு தனித்துவம் நிறைந்த புத்தாக்க சக்தியாக கருதுகின்றனர். இதனடிப்படையில் பாக்டீரியா உயிரணுக்களின் கட்டமைப்பு மற்றும் தொழிற்பாட்டில் உள்ள வடிவமைப்பின் சிக்கலான தன்மையை அவர்கள் பின்னர் கண்டுபிடித்தனர். அவர்கள் ™ஸ்மார்ட்› பாக்டீரியா, ™நுண்ணுயிர் நுண்ணறிவு›, ™முடிவுகாணுதல்-(முடிவெடுத்தல்)› மற்றும் ™சிக்கல் தீர்க்கும் பாக்டீரியா› போன்ற சொற்களைப் பயன்படுத்தத் தொடங்கினர். இதனால், பாக்டீரியா அவர்களின் புதிய கடவுளாக மாறியது. (theism a giant leap of faith Dr. Raida Jarrar).*

இயற்கைத்தேர்வுக்கோட்பாடானது குறிப்பிடும் பாக்டீரியா நுண்ணறிவின் செயற்பாடுகள் யாவும் அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ்வின் நுண்ணறிவு மற்றும் விருப்பத்தின் வெளிப்பாடாக அமைந்துள்ளது என்பதை படைப்பாளனான அல்லாஹ் தனது வேதத்தினூடாகவும் தனது தூதரினூடாகவும் தெளிவு படுத்துகிறான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“அல்லாஹ்வே அனைத்துப்பொருட்களினதும் படைப்பாளனும் யாவற்றிற்கும் அவனே பொறுப்பாளனுமாவான்”. (அஸ்ஸுமர் : 62). “அவனே ஏழு வானங்களையும் தட்டுத் தட்டாகப் படைத்தான். மகா கருணையாளனான அவனின் படைப்பில் நீ எவ்விதக் குறைபாட்டையும் காணமாட்டீர். அவ்வாறாயின் உனது பார்வையை அதனை நோக்கி செலுத்துவீராக அவற்றில் ஏதேனும் பிளவுகளை காண்கிறீரா?”. (அல் முல்க் :3).

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :
“நிச்சயமாக நாம் எல்லாவற்றையும் குறிப்பிட்ட விதிமுறையின் படியே படைத்துள்ளோம்” (அல் கமர் : 49). வடிவமைப்பு, துல்லியமான கட்டுப்பாடு, குறியிடப்பட்ட மொழி, நுண்ணறிவு, உள்நோக்கம், சிக்கலான அமைப்புகள், ஒன்றுக்கொன்று சார்ந்துள்ள விதிகள் போன்ற மற்றும் பல சொல்லாடல்களும் பிரயோகங்களும் நாத்திகர்ளைப் பொருத்தவரை இயற்கை தேர்வுக்கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளாதிருந்தும் இவ்வுலக உருவாக்கம் தற்செயலனவை, சடுதியானவை என்ற கருத்தியலுக்கு இட்டுச்சென்றது. மதத்திலிருந்திருந்தும் ,படைப்பாளனின் இருப்புக்குறித்த நம்பிக்கையிலிருந்தும் தப்பிக்கும் பரிதாபமான முயற்சிகளில் ஒன்றாக விஞ்ஞானிகள் படைப்பாளனுக்கு பல் வேறு பெயர்களைக் குறிப்பிடுகின்றனர் அவற்றுள்; (இயற்கைத் தாய், பிரபஞ்சத்தின் விதிகள், டார்வினின் இயற்கைத்தேர்வுக் கோட்பாடு போன்றவை அவற்றுள் சிலவையாகும். அல்லாஹ் கூறுகிறான் :

“இவைகள் வெறும் பெயர்களே தவிர வேறில்லை, நீங்களும், உங்கள் மூதாதையர்களுமே அவற்றைச் சூட்டிக்கொண்டீர்கள். அதற்கு அல்லாஹ் எவ்வித ஆதாரத்தையும் இறக்கி வைக்வில்லை. அவர்கள் வெறும் யூகத்தையும் தங்கள் மனவிருப்பத்தையுமே பின்பற்றுகின்றனர். நிச்சயமாக அவர்களது இரட்சகனிடமிருந்து நேர்வழி அவர்களிடம் வந்தே இருக்கிறது”. (அந்நஜ்ம் : 23).
உண்மையில் ‘அல்லாஹ்’ என்ற பெயரை அல்லாது மாற்றுப் பெயர்களைப் பயன்படுத்துவதானது அவனின் முழுமையான பண்புகளில் சில நீங்கிவிடவும், பல்வேறுபட்ட சர்ச்சைக்குரிய கேள்விகள் தோன்றவும் காரணமாக அமைந்து விடும். உதாரணத்திற்கு :

அல்லாஹ்வை நினைவு கூறுவதை தவிர்ப்பதற்கு சர்வதேச ரீதியாக சட்டங்கள உருவாக்கப்பட்டு, அவர்களின் நம்பிக்கையின் படி தற்செயலாக தோன்றிய இயற்கையான விதிகளுக்கு உட்பட்டதான சிக்கலான அமைப்புக்களும் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன. இறுதியில் மனிதனின் புத்திக்கூர்மை மற்றும் அவனது அபூர்வமான திறமைகள் எவ்வித அடிப்படையுமற்ற முட்டால்தனமான, குருட்டுத்தனமான ஒரு அடிப்படையின் பால் இணைக்கப்படுகின்றன.

## *மனிதன் அடிப்படை குரங்குகள் என்ற கருத்தை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ளாதது ஏன்? (அதாவது மனிதன் குரங்கிலிருந்து பிறந்தான் என்பதை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ளாதது ஏன்?)*

இஸ்லாம் இந்தக் கருத்தை முழுமையாக மறுக்கின்றது, மனிதனை கண்ணியப்படுத்தி இந்தப்பூமியின் இறை பிரதிநிதியாக அவனை ஆக்குவதில் அகிலத்தாரின் இரட்சகன் அல்லாஹ்வின் உயரிய நோக்கை நிறைவேற்றுவதற்காக ஆதாமை ஏனைய எல்லாப் படைப்பினங்களிருந்தும் தனித்துவமாகப் படைத்து வேறுபடுத்தினான் என அல்குர்ஆன் தெளிவு படுத்துகிறது.

டார்வின்வாதிகள் படைப்பாளனை விசுவாசிக்கும் -நம்பும் - விசுவாசியை அவன் நேரில் காணாத ஒன்றை நம்புகிறான் என்பதற்காக அவனை ஒரு பிற்போக்குவாதியாக கருதுகின்றனர். ஆனால் ஒரு இறை நம்பிக்கையாளனைப் பொருத்தவரை அவன் தனது அந்தஸ்தையும் கௌரவத்தையும் உயர்த்தி மேலோங்கச் செய்யக்கூடிய ஒன்றையே விசுவாசம் கொண்டுள்ளான். அவர்களே தனது நிலையையும் அந்தஸ்த்தையும் குறைத்து தமது நிலைகளை தாழ்த்திக்கொள்ளக்கூடிய ஒன்றை நம்புகின்றனர். இவர்களின் நம்பிக்கை எவ்வாறாக இருந்தாலும் தற்போது வாழும் குரங்குகள் மனிதனாக மாறி விருத்தியடையாதது ஏன்? என்ற கேள்வி இக்கோட்பாடு சார்ந்தோரிடம் முன்வைக்கப்படுகிறது. இதற்கான பதிலை இன்னும் அவர்களால் கூற முடியவில்லை! இக்கோட்பாடு சில கருதுகோள்களின் தொகுப்பாகும், மேலும் இந்த கருதுகோள்கள் ஒரு குறிப்பிட்ட நிகழ்வை நேரடியாக பார்ப்பதன் மூலமும் அல்லது ஒரு குறிப்பிட்ட புறவயமான ஒன்றை குறித்து ஆழ்ந்து சிந்திப்பதன் மூலமும் நிகழ்கிறது, மேலும் இந்த கருதுகோள்களை நிரூபிப்பதற்கு அதி சிறந்த சோதனைகள் அல்லது கருதுகோளின் உண்மைத் தன்மையை சான்றாகவைத்து நேரடி அவதானிப்பும் மேற்கொள்ளப்படவேண்டும். ஆனால்; இந்தக் கோட்பாட்டுடன் இணைந்தாக கருதப்படும் கருதுகோள்களில் ஒன்றை ஆய்வு மூலமோ அல்லது நேரடி அவதானிப்பு மூலமோ நிரூபிக்க முடியாத போது இக்கோட்பாட்டையே முழுமையாக மறுபரீ^+லனைக்கு உட்படுத்த வேண்டும். அறுபதுனாயிரம் (60000) ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியை உதாரணத்திற்கு எடுத்துக் கொண்டால், அந்த கோட்பாடு அர்த்தமுள்ளதாக

இருக்காது. அத்துடன் இக்கோட்பாட்டாளர்களின் விதிகளின் படி நாம் அவற்றை நேரடியாகப் பார்த்து அவதானிக்காததன் காரணத்தினால் இவர்களின் இந்த வாதத்தை ஏற்பதற்கான எந்த அடிப்படையும் கிடையாது. சமீபகாலத்தில் சில பறவை இனங்களின் சொண்டுகளில் வடிவமைப்பில் மாற்றம் ஏற்பட்டிருப்பது அவதானிக்கப்பட்டுள்ளது. ஆனால் அவை பறவைகளாகவே தொடர்ந்தும் உள்ளன. என்றாலும் இந்த கோட்பாட்டின் அடிப்படையில் பறவைகள் இன்னொரு வடிவாக மாறவேண்டுமே! ஆனால் அவை அதற்கே உரிய இயல்பூக்கத்துடனே வாழ்கின்றன என்பதே உண்மையாகும். 'அத்தியாயம் 7: ஓல்லர் மற்றும் ஓம்டால்.' மோர்லேண்ட், ஜே.பி. தி கிரியேஷன் ஹைபோதெசிஸ்: சயின்டிஃபிக் உண்மையில் மனிதனின் உருவாக்கத்தின் அடிப்படை குரங்கு அல்லது குரங்கின் பரிணாம வளர்ச்சியின் முடிவு என்ற கருத்தானது ஒருபோதும் டார்வினின் கருத்தல்ல. ஆனால்; மனிதனும் குரங்கும் பொதுவான அறியப்படாத ஒரே அடிப்படையைக் கொண்டுள்ளன. அது தற்போது "அழிந்து போன உயிர் வட்டம்" என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. அதன்படி இதற்கென உயிரியல் பரிணாம வளர்ச்சி நிகழ்ந்து அது மனிதனாக மாற்றம் பெற்று விட்டது. முஸ்லிம்கள் டார்வினின் கூற்றை முழுமையாக நிராகரித்தாலும் சிலர் நம்புவதுபோல் குரங்கு மனிதனின் பாட்டன் என்று அவர் குறிப்பிடவில்லை. இத்தத்துவத்தை –கோட்பாட்டை– டார்வின் உருவாக்கினாலும் அவரிடம் இக்கோட்பாடு குறித்து பல சந்தேகங்கள் இருப்பதை அவர் தனது தோழர்களுக்கு எழுதிய கடிதங்களில் நிரூபித்துள்ளதுடன் அதற்கான வருத்தங்களையும் தெரிவுத்துள்ளார் என்பதே உண்மையாகும். ('அத்தியாயம் 7: ஓல்லர் மற்றும் ஓம்டால்.' மோர்லேண்ட், ஜே.பி. தி கிரியேஷன் ஹைபோதெசிஸ்: சயின்டிஃபிக்). - டார்வின் கடவுள் இருப்பதை ஏற்றுக்கொண்டு அதனை நிரூபித்துள்ளார். ஆனால் அவரின் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டோரே, மனிதன் விலங்கின் தோற்றம் கொண்டவன் என்ற கருத்தை அவரின் கோட்பாட்டுடன் இணைத்து பிற்காலத்தில் குறிப்பிட்டனர். இக்கருத்தை கூறியோர் அடிப்படையில் நாத்திகவதிகளே!. (டார்வினின் வாழ்க்கை வரலாறு – லன்டன் பதிப்பகம் .கோலின்ஸ் 1958 பக்கம் 92-93). உண்மையில் முஸ்லிம்களைப் பொருத்தவரை அல்லாஹ் மனித இனத்தை கண்ணியப்படுத்தி இப்பூமியின் பிரதிநிதியாக ஆக்கியுள்ளான் என்பதை உறுதியாக ஏற்றுக்கொண்டுள்ளனர். ஆகையால் இப்பிரதிநியானவர் ஒரு விலங்கின் தோற்றத்திலோ அல்லது அதனை ஒத்த நிலையில் இருப்பதுவோ அவனுக்கு எவ்வகையிலும் பொருந்தாத விடயமாகும்.

### *பரிணாம வளர்ச்சித்தத்துவம் குறித்து இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

பொதுவான தோற்றம் -அடிப்படை- குறித்த பரிணாமாவியல் கருத்திற்கான திருப்தியான ஆதாரங்களை அறிவியல் முன்வைக்கிறது. அதனையே அல்குர்ஆனும் குறிப்பிடுகிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
"உயிருள்ள அனைத்தையும் நீரிலிருந்தே நாம் படைத்தோம், அவர்கள் நம்ப வேண்டாமா?" (அன்பியாஃ:30). அல்லாஹ் உயிரினங்களை திறன்வாய்ந்ததாகவும், இயல்பில் தமது சூழலுடன் இயைந்து செல்லக் கூடியதாகவும் படைத்துள்ளான். அவைகளின் அளவு, தோற்றம் மற்றும் நீளம் போன்றவை விருத்தியடைய முடியும். உதாரணத்திற்கு செம்மறியாட்டை எடுத்துக் கொள்வோம். அவை குளிரான பிரதேசத்தில் வாழ்பவையாக இருப்பின் அக்குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்குரிய தோலையும் பெற்றிருக்கும். சீதோசன வெப்ப நிலைக்கேட்ப -அதன் உரோமங்கள் -கம்பளி குறைவாகவோ அல்லது அதிகமானதாகவே இருக்கலாம். ஆகவே வடிவங்களும் வகைகளும் சூழல் வேறுபாட்டிற்கேட்ப வித்தியாசப்படும். இவ்விவகாரத்தில் மனிதர்களும் கூட அவர்களின் நிறம், குணம், மொழி, வடிவம் ஆகியவற்றில் வேறுபட்டுள்ளனர். அந்தவகையில் ஒரு மனிதனை ஒத்த இன்னொரு மனிதன் இருக்க முடியாது. என்றாலும் அவர்கள் அனைவரும் மனிதர்களாவே உள்ளனர். விலங்குளின் இன்னொரு வகையினராக மாறமாட்டார்கள். அல்லாஹ் கூறுகிறான் : "வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதும், உங்கள் மொழிகளும், நிறங்களும் வெவ்வேறாக இருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவையாகும். இதிலும் அறிவுடையோருக்கு நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன". (அர்ரூம் : 22). "மேலும், எல்லா உயிர்ப் பிராணிகளையும் அல்லாஹ் நீரிலிருந்து படைத்துள்ளான்; அவற்றில் தன் வயிற்றின் மீது நடப்பவையும் உண்டு; அவற்றில் இரு கால்களால் நடப்பவையும் உண்டு; அவற்றில் நான்கு (கால்)களை கொண்டு நடப்பவையும் உண்டு; தான் நாடியதை அல்லாஹ் படைக்கிறான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான்".(நூர்:45).

ஒரு படைப்பாளனின் இருப்பை மறுப்பதை நோக்காகக் கொண்டு

உருவாக்கப்பட்ட பரிணாமக் கோட்பாடு, அனைத்து உயிரினங்கள், விலங்குகள் மற்றும் தாவரங்கள் யாவும் ஒரு பொதுவான தோற்றம் கொண்டவை என்றும், அவை ஒரே தோற்றத்தில் இருந்து உருவானது என்றும், இது ஒரு உயிர் கலம் என்றும் கூறுகிறது. முதல் உயிரணு உருவாக்கமானது நீரில் உள்ள அமினோ அமிலங்களின் கலவையின் விளைவாகும். இது டிஎன்ஏ வின் முதல் கட்டமைப்பை உருவாக்கியது. இது உயிரினத்தின் மரபணு பண்புகளைக் கொண்டுள்ளது. இந்த அமினோ அமிலங்களின் கலவையுடன், ஒரு உயிரணுவின் முதல் அமைப்பு உருவாக்கப்பட்டது. அத்துடன் பல்வேறு சுற்றுச்சூழல் மற்றும் வெளிப்புற காரணிகளின் விளைவாக, இந்த உயிரணுக்களின் பெருக்கத்திற்கு வழிவகுத்தது, இது முதல் விந்தணுவை உருவாக்கியது, பின்னர் ஒரு அட்டையாக வளர்ந்தது, அதன் பின்னர் ஒரு சதைத் துண்டாக உருவானது.

இங்கே நாம் அவதானிக்கும் அடிப்படையில் மேற்குறிப்பிட்ட உயிரின உருவாக்கத்திற்கான இந்நிலைகள் யாவும் தாயின் வயிற்றில் மனித உருவாக்கத்தின் நிலைகளுடன் மிகவும் ஒத்துப்போவதை காணமுடிகிறது. இருப்பினும், உயிரினங்கள் அதன் வளர்ச்சியுடன் நின்றுவிடுகிறது. DNAவில் கொண்டுள்ள அதன் மரபணு பண்புகளின்படிக்கு ஏற்பவே ஒரு உயிரினம் உருவாகிறது. உதாரணத்திற்கு தவளைகளை எடுத்துக்கொள்வோம். அவை அதன் வளர்ச்சி –விருத்தி- முழுமைபெற்றதும் அவை தவளைகளாகவே உள்ளன என்பதை நாம் பார்க்கிறோம். ஆகவே மரபணுப் பண்புகளுக்கேற்ப வளர்ச்சி முழுமைபெற்ற அனைத்து உயிரினங்களின் நிலையும் இது போன்றுதான் அமையும் என்பதை நாம் புரிந்து கொள்ளல் வேண்டும். புதிய உயிரினங்களின் தோற்றத்தில், மரபணு மாற்றங்கள் பரம்பரை பண்புகளில் அவற்றின் தாக்கம் குறித்த விவகாரத்தை உள்ளடக்கினாலும், அது படைப்பாளனின் வல்லமை மற்றும் அவனின் நாட்டத்தையும் எவ்வகையிலும் பொய்ப்படுத்திடாது. இருப்பினும், நாத்திகர்கள் உயிரின தோற்றமானது ^+றற்ற முறையில் (ஒரு ஒழுங்கமைப்பின்றி) நிகழும் ஒன்று எனக் கூறுகிறார்கள். அதே வேளை பரிணாமவியல் கோட்பாடானது, இவை யாவும் பல பரிணாம நிலைகள் ஊடாகவே உருவாகிறது என்பதையும், அவை மிகவும் ஆழ்ந்த அறிவும் நுணுக்கமும் புலமைத்துவமிக்க ஒருவனின் உயர் திட்டமிடலுடனும், நோக்கத்துடனுமே நிகழ்கிறது என்பதையும் உறுதிப்படுத்துகிறது. இதனடிப்படையில் இறைப்பரிணாமவியலை ஏற்று

இயல்பாக, ஒழுங்கின்றி நிகழும் உயிரின உருவாக்கத்தை மறுதலிக்க வேண்டும். அத்துடன் இம்மாபெரும் உயிரியல் பரிணாமத்தின் பின் ஞானமும் வல்லமையும் ஆழ்ந்த அறிவுமிக்க ஒருவனின் பங்களிப்பை ஏற்றாக வேண்டும். ஆகவே இந்த அடிப்படையில் பரிணாமத்தை ஏற்று டார்வினிஸ பரிணாமவியலை முழுமையாக நிராகரித்து விடலாம். 'எனது சகாக்களில் பாதி பேர் முற்றிலும் முட்டாள்கள் என்றே கருதுகிறேன். அல்லது டார்வினிசக் கோட்பாடானது மதத்துடன் இயைந்து செல்லும் அதிகமான கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது' என மூத்த தொல்லியல் நிபுணரும் உயிரியலாளருமான ஸ்டீபன் ஜூல் குறிப்பிடுகிறார்.

### *அல்குர்ஆன் பரிணாமக் கோட்பாட்டின் கருத்தை எவ்வாறு சரிசெய்தது ?*

அல்குர்ஆன் முதல் மனிதர் ஆதத்தின் சம்பவத்தை குறிப்பிடுவதனூடாக மனித பரிணாமக் கோட்பாட்டின் கருத்தியலை பின் வரும் விடயங்களின் ஊடாக சரிசெய்தது :

மனிதன் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட எப்பொருளாகவும் இருக்கவில்லை.

“திட்டமாக மனிதன் மீது காலத்தில் ஒரு நேரம் வந்து, அதில் அவன் இன்ன பொருள் என்று குறிப்பிட்டுக் கூறுவதற்கில்லாத நிலையில் இருக்கவில்லையா?”. (அல் இன்ஸான் : 1) .

ஆதம் படைக்கப்பட்டது முதலில் களிமண்ணாலே :

“நிச்சயமாக (ஆரம்பத்தில் முதல்) மனிதனை களிமண்ணின் மூலச்சத்திலிருந்து படைத்தோம்”. (முஃமினுன் :12). “அவனே எல்லா பொருள்களையும் (படைத்து) அவற்றின் கோலத்தையும் மிக்க அழகாக அமைத்தான். ஆரம்பத்தில் மனிதனை களிமண்ணைக் கொண்டே படைத்தான். (அஸ்ஸஜ்தா : 7). “அல்லாஹ்விடத்தில் ஈஸாவின் உதாரணம் ஆதத்தின் உதாரணத்தைப் போன்றதாகும். அவன் அவரை மண்ணிலிருந்து படைத்து பின்னர் அவருக்கு 'குன்' ஆகுக என்றான். உடனே அவர் மனிதனாக ஆகிவிட்டார்'' (ஆல இம்ரான் 59).

மனித குலத்தின் தந்தை ஆதம் கண்ணியப்படுத்தப்பட்டுள்ளமை :
“இறைவன் கூறினான் : இப்லீஸே! நான் என்னுடைய இரு கைகளால் படைத்திருக்கும் இவருக்கு சிரம் பணிவதை விட்டு உன்னைத் தடுத்தது எது? நீ கர்வம் கொண்டு விட்டாயா? அல்லது நீ உயர் அந்தஸ்து உடையவர்களுள் ஒருவனாகி விட்டாயா?”. (ஸாத் : 75).

முதல் மனிதர் ஆதம் அலைஹிஸ்ஸலாம் (மனித குலத்தின் தந்தை) அவர்கள் களிமண்ணினால் மாத்திரம் விசேடமாக படைக்கப்படடமைக்காக சிறப்பிக்கப்பட்டார் என்பதல்ல, மாறாக மேலே குறிப்பிடப்பட்ட அல்குர்ஆன் வசனம் குறிப்பிடுவது போல் அவர்கள் அகிலத்தாரின் இரட்சகனான அல்லாஹ்வின் திருக்கையினால் நேரடியாக படைக்கப் பட்டமையும், அல்லாஹ்வுக்கு கட்டுப்படுமுகமாக மலக்குகள் அல்லாஹ்வால் அவருக்கு சிரம்தாழ்த்த பணிக்கப்பட்டமையுமாகும்.

“பின்னர், ‘நீங்கள் ஆதத்துக்குப் பணியுங்கள்!’ என்று வானவர்களுக்கு நாம் கட்டளையிட்டபோது அவர்கள் எல்லோரும்; பணிந்தார்கள் இப்லீஸைத் தவிர! அவன் கட்டளையை மறுத்தான். மேலும் ஆணவம் கொண்டுவிட்டான்; நிராகரிப்பவர்களில் ஒருவனாகவும் ஆகிவிட்டான்”. (அல் பகரா : 34).
ஆதத்தின் சந்ததிகள் படைக்கப்படல் :

“பின்னர் ஆதத்தின் சந்ததியை அற்பமான இந்திரியத்துளியினால் உண்டாக்கினான்”. (ஸஜ்தா: 08). “பின்னர் பாதுகாப்பான ஓரிடத்தில் அவனை நாம் இந்திரியத்துளியாக வைத்தோம். பின்னர் இந்திரியத்துளியை கருவறைச்சுவரில் ஒட்டிக் கொள்ளக்கூடியதாகப் படைத்தோம், பின்னர் (கருவறைச்சுவரில்) ஒட்டிக்கொள்ளக்கூடியதை சதைப்பிண்டமாக்கினோம். பின்னர் சதைப்பிண்டத்தைப் எலும்பாக்கி, எலும்பை சதையால் போர்த்தினோம். பின்னர் அவனை வேறொரு படைப்பாக ஆக்கினோம். படைப்பாளர்களில் மிகச்சிறந்தவனான அல்லாஹ் மிக உயர்ந்தவனாவான்”. (அல் முஃமினூன் : 13-14). ”அவன்தான் நீரிலிருந்து மனிதனைப்படைத்து அவனுக்கு தலைமுறையையும் திருமண உறவையும் ஆக்கினான். உமது இரட்சகன் பேராற்றலுடையவனாக இருக்கிறான்”. (அல் புர்கான் : 54).

**ஆதமின் சந்ததிகள் கண்ணியப்படுத்தப்பட்டுள்ளமை :**

"நிச்சயமாக நாம் ஆதமுடைய சந்ததியினரை கண்ணியப்படுத்தினோம். இன்னும் தரையிலும் கடலிலும் நாம் சுமந்து சென்றோம். மேலும் நாம் தூய்மையானவற்றிலிருந்து அவர்களுக்கு உணவளித்தோம். நாம் படைத்த பலவற்றைவிடவும் இவர்களை மேன்மைப்படுத்தினோம்". (அல் இஸ்ரா: 70 ).
முதல் மனிதர் ஆதத்தின் சந்ததிகள் தோற்ற நிலைகளான (அற்பமான நீர், இந்திரியத்துளி, கருவறையில் ஒட்டிக்கொள்ளும் இரத்தக்கட்டி, சதைக்கட்டி) போன்றவைகள் பரிணாம கோட்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள உயிரின உருவாக்கம் மற்றும் இனப்பெருக்கம் போன்ற விடயங்களுடன் ஒத்துப்போவதை அனுமானிக்க முடிகிறது.

"அவன் வானங்களையும் பூமியையும் படைத்தவன். அவன் உங்களுக்காக உங்களிலிருந்தே உங்கள் மனைவியையும் கால் நடைகளிலிருந்து ஜோடிகளையும் அமைத்து அதில் உங்களை பெருகச்செய்கின்றான். அவனைப் போன்று எதுவுமில்லை. அவன் செவியேற்பவன் பார்ப்பவன்". (அஷ்ஷூறா :11). படைப்பின் அடிப்படை மூலம் ஒன்று என்பதையும் படைப்பாளனின் தனித்துவத்தையும் எடுத்துக்காட்டவே ஆதத்தின் சந்ததிகளின் துவக்கம் அற்பமான நீரிலிருந்து அமைந்தாக அல்லாஹ் ஆக்கிவைத்துள்ளதுடன், இந்தப் பூமியில் மனிதனை பிரதிநிதியாக்கியதில் அவனின் நுட்பத்தை திட்டப்படுத்திடவும், மனித இனத்தை கண்ணியப்படுத்தும் முகமாகவும் படைப்பில் மனிதன் ஏனைய படைப்புகளிலிருந்து தனித்துவமானவன் என்பதையும் வேறுபடுத்திக் காட்டியுள்ளான். முதல் மனிதரை பெற்றோரின்றிபடைத்ததானது அவனின் முழு வல்லைமைக்கும் எடுத்துக்காட்டாக இருப்பதுடன், தந்தையின்றி படைக்கப்பட்ட ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அவனின் முழுமையான ஆற்றலுக்கும் மக்களுக்கான அத்தாட்சியாக இருக்கவும் உதாரணமாக குறிப்பிடுகிறான். "அல்லாஹ்விடத்தில் ஈஸாவின் உதாரணம் ஆதத்தின் உதாரணத்தைப் போன்றதாகும். அவன் அவரை மண்ணிலிருந்து படைத்து பின்னர் அவருக்கு 'குன்' ஆகுக. என்றான் உடனே அவர் மனிதனாக ஆகிவிட்டார்'' .(ஆல இம்ரான் 59).

பரிணாமக் கோட்பாட்டின் மூலம் இறைவனை மறுப்பதற்கு முனையும் அதிகமானோருக்கு அக்கோட்பாடே எதிராக உள்ளது என்பதை விளங்கிக்கொள்ளல் வேண்டும்.

## *இஸ்லாம், இப்பிரபஞ்சத்தின் அடிப்படை தோற்றம் பற்றிய கோட்பாடுகளை தவிர்க்க முடியாத சரியான ஒன்றுடன் மாத்திரம் மட்டுப்படுத்துவது ஏன்?*

மக்களிடையே பல்வேறு கோட்பாடுகள் மற்றும் நம்பிக்கைகள் இருப்பது மிகச்சரியான உண்மை ஒன்று இல்லை என்பதற்கு அர்த்தமல்ல. உதாரணத்திற்கு, கருப்பு கார் வைத்திருக்கும் ஒருவர் பயன்படுத்தும் போக்குவரத்து சாதனம் குறித்து பலரின் கருத்துக்கள் மற்றும் யூகங்களும் வித்தியாசமானதாக இருந்தாலும், அவர் கருப்பு கார் வைத்திருக்கிறார் என்ற உண்மையை மறுப்பதிற்கில்லை. அத்துடன் முழு உலகமும் அந்த நபரின் கார் சிவப்பு நிறமானது என நம்பினாலும், அந்த நம்பிக்கை அதை சிவப்பு நிறமாக்காது என்பதே யதார்த்தமான விடயம். ஆகவே இங்கே அவரிடம் ஒரு கருப்பு கார் உள்ளது என்ற ஒரு யதார்தத்தை அனைவரும் ஏற்றாக வேண்டும்.

ஆக, ஏதாவது ஒரு குறிப்பிட்ட பொருள் குறித்து பல்வேறுவகையான வேறுபட்ட கருத்துக்களும், யூகங்கங்களும் இருந்தாலும், அக்குறிப்பிட்ட பொருள் பெற்றுள்ள ஒரே யதார்தத்தை மறுத்து விட முடியாது.

இப்பிரபஞ்சத்தின் அடிப்படை குறித்து பல்வேறுவகையான மனித கண்ணோட்டங்களும், கருத்துக்களும் இருப்பினும், கடவுளுக்கென்று மனிதர்கள் அறிந்து வைத்துள்ள தோற்றம் எதுவும் கிடையாது. அவனோ எந்த இணையோ, சந்ததியோ அற்ற ஏக படைப்பாளன் என்ற ஒரே யதார்தத்தை அவை நிராகரித்திடமாட்டாது. இந்த கருதுகோளின் அடிப்படையில் உலகம் முழுவதுமே படைப்பாளனை ஒரு மிருக வடிவிலும் அல்லது மனிதவடிவிலும் கட்டமைத்தாலும் அது யதார்தத்திற்கு அப்பால் பட்ட விடயமாகும். இதிலிருந்து அல்லாஹ் மிகவும் தூயவனாக உள்ளான்.

ஒரு முஸ்லிம் தார்மீக –அறநெறி- மற்றும் வரலாற்று சார்பியல் வாதக் கொள்கைகளை ஏற்றுக்கொள்வாரா? (தார்மீக சார்பியல் வாதமென்பது: ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தின் அடிப்படையில் மாத்திரமே தார்மீக தீர்ப்புகள் சரியானவை அல்லது பிழையானவை என்ற கோட்பாடாகும். அதாவது தனது சுய கருத்து மற்றும் சிந்தனைக்கேட்ப இச்சைக்கு ஏற்றால் போல் பண்பாடுகளையும், வரலாற்றியலையும் மாற்றிக்கொள்வதைக் குறிக்கும்).

மனிதனின் இச்சைக்கேட்ப பாலியல் பலாத்காரம் தீயதா இல்லையா என்பதைத் தீர்மானிப்பது நியாயமற்றது. மாறாக, பலாத்காரத்தில் மனித உரிமை மீறல் உள்ளது என்பதும், அவனது மதிப்பு மற்றும் சுதந்திரம் மீறப்படுவதும் தெளிவாகிறது. இதுவே கற்பழிப்பு தீமை என்பதற்கான ஆதாரமாகும். அதே போல் ஓரினச்சேர்க்கை. இது பிரபஞ்ச விதிமுறைகளை மீறும் செயற்பாடு மாத்திரமன்றி; முறையான திருமணத்திற்கு அப்பாட்பட்ட தொடர்புமாகும். முழு உலகமும் இது செல்லுபடியற்றது என முடிவு செய்தாலும் இதுவே சரியான முறையாகும். அதாவது முறையான ஆண் பெண் திருமணமே சரியான ஏற்றுக்கொள்ளப்பட்ட விடயமாகும். மனித குலம் அனைவரும் ஓரினச்சேர்கையானது சரி என்பதை ஏற்றுக்கொண்டாலும் அது பட்டவர்த்தனமான தவறாகும் என்பதை ஏற்றாக வேண்டும். அதேபோல் வரலாற்றின், ஒவ்வொரு காலமும் அவரவர் கண்ணோட்டத்திற்கும் பார்வைக்கும் வாசிப்புக்கேட்ப எழுதப்பட வேண்டும் என்பதை ஏற்றுக்கொண்டால் ஒவ்வொருவரினதும் மதிப்பீடும் அவர் முக்கியம் எனக் கருதிய ஏனைய காலகட்டத்தின் மதிப்பீட்டிலிருந்து வேறுபடுகிறது. ஆனால் இவ்வாறான பல வரலாற்று நிகழ்வுகள் குறித்த மதீப்பீடானது வரலாற்று சார்பியத்தை உருவாக்கிடமாட்டாது. ஏனெனில் நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் வரலாற்று நிகழ்வுகளுக்கு ஒரு யதார்த்தம் இருப்பதை யாராலும் மறுக்கமுடியாது என்பதே பேருண்மையாகும். மனிதனால் உருவாக்கப்பட்ட வரலாற்றியலானது அதன் நிகழ்வுகள் மன விருப்பத்திற்கேட்ப அமையப்பெற்றிருப்பதால் உருக்குழைவு மற்றும் துல்லியமற்ற தன்மைக்கு உட்படக்கூடியவை. அவை உலக இரட்சகனான அல்லாஹ்வின் வரலாற்றியலைப் போன்று இருக்காது, அல்லாஹ்வின் வராற்று குறிப்பானது முக்காலங்கள் பற்றிய துல்லியமான விடயங்களை கொண்டதாக இருக்கும்.

இப்பிரபஞ்ச இருப்பு மற்றும் பண்பாடுகளின் அடிப்படைக்கு பொதுவான ஒரு யதாரத்தம் இருப்பதற்கான ஆதாரம் என்ன?

அதிகமானோரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட "முழுமையான உண்மை இல்லை" என்ற கூற்றானது உண்மையில் எது சரி எது தவறு என்பது பற்றிய நம்பிக்கையாகும். அவர்கள் அதை மற்றவர்கள் மீது திணிக்க முயற்சி செய்கிறார்கள். இதனால் அவர்கள் நடத்தைக்கான அளவுகோளொன்றை கட்டமைத்து அனைவரும் அதைக் கடைப்பிடித்தொழுக வேண்டும் என கட்டாயப்படுத்துகிறார்கள். இதனால் அவர்கள் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்று நம்பிய விடயத்தை மீறுவதுடன் இது ஒரு சுய-முரண்பாடான நிலையாக கொள்ளப்படுகிறது.

பொது உண்மை அல்லது யாதார்த்தம் இருப்பதற்கான ஆதாரம் பின்வருமாறு :

மனசாட்சி (உள்ளகரீதியான கட்டுப்பாடு) : மனித நடத்தையை கட்டுப்படுத்தும் தார்மீக வழிகாட்டுதல்களின் தொகுப்பான மனசாட்சி, உலகம் ஒரு குறிப்பிட்ட வழியில் செயல்படுகிறது என்பதற்கும், அங்கே சரியானவையும் மற்றும் தவறானவையும் உண்டு என்பதற்குமான சான்றாகும். இந்த நெறிமுறைக் கோட்பாடுகள் சர்ச்சைக்கு உட்படாத அல்லது பொது வாக்கெடுப்புக்கு உட்படுத்தப்படாத சமூகக் கடமைகளாகும். அவை சமூகத்தின் உள்ளடக்கத்திற்கும் மற்றும் கருத்துக்கும் இன்றியமையாத சமூக யதார்த்தங்களாகும். உதாரணமாக, பெற்றோரை மதிக்காமை அல்லது திருடுவது என்பது உலகளவில் கண்டிக்கத்தக்க நடத்தையாக பார்க்கப்படுகிறது. அது உண்மையான நல்ல விடயம் என்றோ மரியாதைமிக்க விடயம் என்றோ நியாயப்படுத்த முடியாது. பொதுவாக இது எல்லாக் காலத்திற்கும் அனைத்து கலாச்சாரங்ளுக்கும் பொதுவாகப் பொருந்தக் கூடிய விடயமாகும். அறிவியல்: (அறிவியல்) என்பது விடயங்களை அதன் யதார்த்த நிலையில் புரிந்து கொள்ளுதலாகும். அதுவே அறிவும் திட்டவட்டமான நம்பிக்கையும் ஆகும். அதனால், அறிவியல் என்பது உலகில் உள்ள புறநிலை உண்மைகளைக் கண்டறிந்து நிரூபிக்கக்கூடியவற்றில் தங்கியுள்ளது. நிலையான உண்மைகள் இல்லை எனில் எதைத்தான் ஆய்வு செய்ய முடியும்? ஒருவருக்கு

அறிவியல் முடிவுகள் உண்மையா என்பதை எப்படி அறிய முடியும்? உண்மையில், அறிவியலின் அடிப்படைகளும் விதிகளும் பொதுவான யதாரத்தங்களின் மீதே அமைக்கப்பட்டுள்ளன. மதம் : உலகின் அனைத்து மதங்களும் வாழ்க்கைக்கு ஒரு தோற்றப்பாடு, அர்த்தம் மற்றும் வரைவிளக்கனத்தை வழங்குகின்றன. மனிதனின் மிகவும் ஆழமான கேள்விகளுக்கான பதில்களை பெற்றுக்கொள்வதற்கான ஆழ்ந்த விருப்பத்தின் விளைவாக இது உருவாகிறது. மதத்தின் மூலம், மனிதர்கள் தங்கள் தோற்றம், முடிவு மற்றும் உள் அமைதி ஆகியவற்றை தேடிக்கொள்ள முயல்கிறார்கள். இவற்றிற்கான பதில்களைப் பெறுவதன் மூலம் மட்டுமே அவற்றைப் பெற்றுக் கொள்ள முடியும். மனிதர்கள் பரிணாம வளர்ச்சியடைந்த விலங்குகளை விட மேலானவன் என்பதற்கும் வாழ்க்கையில் ஒரு உயர்ந்த நோக்கம் இருப்பதற்கும் மதத்தின் இருப்பே சான்றாகும்.

எம்மை தனது ஆழ்ந்த நுட்பத்தின் மூலம் படைத்து, அவனை அறிந்து கொள்வதற்கான வேட்கையையும் விதைத்திருப்பதும் படைப்பாளன் ஒருவனின் இருப்பை உறுதிப்படுத்துவதற்கான மிகப்பெரும் சான்றாக அமைந்துள்ளது. உண்மையில், ஒரு படைப்பாளனின் இருப்பே மொத்த உண்மைக்கான ஒரு அளவுகோளாகும். தர்க்கம் : எல்லா மனிதர்களுக்கும் வரையறுக்கப்பட்ட அறிவு மற்றும் வரையறுக்கப்பட்ட அறிவாற்றல் திறன்கள் இருப்பதால், முழுமையான எதிர்மறை கருத்துக்களை உருவாக்குவது தர்க்கரீதியாக சாத்தியமற்றது. ஒரு நபர் தர்க்கரீதியாக, 'கடவுள் இல்லை' என்று சொல்ல முடியாது, ஏனென்றால் ஒரு நபர் அத்தகைய கருத்துக்களை வெளியிடுவதற்கு, அவர் முழு பிரபஞ்சம் பற்றி ஆரம்பம் முதல் இறுதி வரை முழுமையான அறிவைப் பெற்றிருக்க வேண்டும். இது சாத்தியமற்றது என்பதால், ஒரு நபர் தர்க்கரீதியாக கூறக்கூடியது என்னவென்றால், 'என்னிடம் உள்ள வரையறுக்கப்பட்ட அறிவின் அடிப்படையில், கடவுள் இருப்பதை நான் நம்பமாட்டேன், என்பதாகும்.

இணக்கத்தன்மை : பொதுவான உண்மையைத் மறுப்பதானது

நடைமுறை, நமது மனசாட்சி, மற்றும் வாழ்க்கை அனுபவங்கள் போன்றவைகளுடனான முரண்பாடுகளுக்கு அது வழிவகுத்துவிடுகிறது.

இருக்கும் எதிலும் முழுமையான சரி அல்லது தவறு இல்லாதது தெளிவான

தரநிலைகளின் பற்றாக்குறைக்கு வழிவகுக்கிறது. உதாரணமாக, போக்குவரத்து விதிகளைப் புறக்கணிப்பதே சரியானது என்று நான் கருதினால், அது என்னைச் சுற்றியுள்ளவர்களின் உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும், இதன் விளைவாக மனிதர்களிடையே சரியான மற்றும் தவறான தரநிலைகள் முரண்படுகின்றன. இதன் விளைவாக, எதைப்பற்றியுமான உறுதியை உருவாக்கிட இயலாது.

மனிதன் தான் விரும்பிய குற்றங்களை செய்வதற்கான சுதந்திரத்தை பெற்றுக்கொள்வதானது,

சட்டங்களை இயற்றுதல் மற்றும் நீதியை நிலைநாட்டல் போன்ற விடயங்களை அசாத்தியப்படுத்திவிடும்.

ஆகவே கட்டற்ற சுதந்திரத்தைப்பெற்ற மனிதன் ஒரு அசிங்கமான மனிதனாக மாறிவிடுகிறான். இவ்வாறான சுந்திரத்தித்தை அனுபவிப்பதற்கு அவனாலேயே ஒரு போதும் முடியாது என்பதே நிரூபிக்கப்பட்ட உண்மையாகும். அத்துடன் பிழையான நடத்தை என்பது இவ்வுலகத்தார் எல்லோரும் சரியெனக் கண்டாலும் அது பிழையானதே! பண்பாடுகள் குறித்த ஒரே உண்மையும் சரியான விடயமும் என்னவென்றால் அது சார்பியமற்றது, அவை ஒரு போதும் கால, இடம் போன்றவற்றால் மாற்றம்பெறாத அம்சமாகும்.

கட்டமைப்பு (ஓழுங்கு) : பொதுவான யதார்த்தமின்மை அராஜகத்திற்கு வழிவகுக்கிறது,

எடுத்துக்காட்டாக, புவியீர்ப்பு விதி ஒரு அறிவியல் உண்மையாக இல்லாதிருந்தால் நாம் ஓரிடத்தில் நிற்றல் மற்றும் அமர்தல் ஆகிய விடயங்களை புதிதாக நாம் இயங்கும் வரையில் அதனை நாம் ஒரு போதும் நம்ப மாட்டோம். அதே போல் இலக்கம் ஒன்றை இலக்கம் ஒன்றுடன் கூட்டும் போது வரும் கூட்டுத்தொகை இரண்டு என்று நாங்கள் நம்ப மாட்டோம்.

இதனால் ஒரு நாகரிகத்தில் ஏற்படும் விளைவு மிகவும் மோசமாக இருப்பதுடன், அறிவியல் மற்றும் இயற்பியல் விதிகள் முக்கியமற்றதாக மாறிவிடும், அது மாத்திரமின்றி மக்களின் கொடுக்கல் வாங்கல் செயற்பாடுகள் சாத்தியமற்றதாகவும் மாறியிருக்கும்.

## *பிரபஞ்ச தோற்றத்தின் அடிப்படை குறித்த ஒரே பொது உண்மை யாது?*

இதனை பின்வருமாறு விளக்க முடியும். அதாவது இப்புவிப் பந்தில் வாழும் மனிதர்கள் ஆகாயத்தில் பறப்பவர்களை ஒத்தவர்கள். உதாரணத்திற்கு பல்வேறு கலாச்சாரப் பின்புலங்களைக் கொண்டோர் ஒரு விமானத்தில் ஏறுகிறார்கள் எனக் கொள்வோம், அந்த விமானம் அவர்களை எங்கு கொண்டு செல்கிறது, அதனை ஓட்டிச்செல்பவர் யார் என்பதோ அவர்களுக்குத் தெரியாது, அது மத்திமரமின்றி எல்லா காரியங்களையும் தாங்களே சுயமாக செய்து கொள்ளவேண்டும், விமானத்தின் உள்ளே ஏற்படும் அசௌகரியங்கள் கஷ்டங்கள் அனைத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் எனவும் நிர்பந்திக்கப்படுகிறார்கள் என வைத்துக்கொள்வோம்.

அவ்வேளை விமானியிடமிருந்து விமானப்பணியாளர் குழு ஒருவர் மூலமாக ஒரு செய்தி அவர்களுக்கு கிடைக்கிறது. அவர் அவர்களிடம் வந்து விமானத்தில் இருப்பதன் நோக்கம் குறித்தும் அவர்கள் செல்லும் இடம் குறித்தும் விமானம் இறங்கும் இடம் குறித்தும் விவரிப்பதுடன், விமானியின் ஆளுமைப்பண்புகள் குறித்தும் அவருடன் தொடர்பு கொள்வதற்கான வழிகளையும் தெளிவு படுத்துகிறார் என்று நாம் வைத்துக்கொண்டால் இது குறித்த பயணிகளின் கருத்துக்கள் பின்வருமாறு அமையும்.
அதில் முதலாம் பயணி : உண்மையில் இந்த விமானத்திற்கு ஒரு விமானி (பைலட்) உள்ளார் என்றும் அவர் இரக்கசுபாவம் கொண்டவர் என்றும் நாம் தடுமாற்றத்தில் இருக்காது இருப்பதற்காக எமது சந்தேகங்களுக்கு பதிலளிக்கவே இவரை அனுப்பியுள்ளார் என்று கூறுகிறார்.

இரண்டாவது பயணி : இந்த விமானத்திற்கு எந்த விமானியும் (பைலட்டும்) கிடையாது, விமானியினால் அனுப்பப்பட்டவரை நான் நம்ப மாட்டேன் என்றும், நாம் எந்த ஒன்றின் துணையில்லாமலே வந்தோம், எனவே இங்கே எந்த நோக்கமும் கிடையாது என்று கூறுகிறார்.

மூன்றாவது பயணி : எம்மை யாரும் இங்கு கொண்டுவரவில்லை. நாமெல்லாம் தற்செயலாக ஒன்று திரட்டப்பட்டோம் என்று கூறுகிறார்.

நான்காம் ஒருவர் : விமானத்திற்கு ஒரு விமானி (பைலட்) இருக்கிறார், அவரால் அனுப்பப்பட்டவர் அவரின் மகனாவார், அந்த விமான ஓட்டி எம்முடன் இருப்பதற்காக அவரின் மகனின் தோற்றத்தில் வந்தார் என்கிறார்.

ஐந்தாமவர் : இந்த விமானத்திற்கு ஒரு விமான ஓட்டி (பைலட்) உண்டு, ஆனால் அவர் எவரையும் தகவலளிப்பதற்கு அனுப்பவில்லை என்கிறார். விமானி எங்களுடன் இருப்பதற்கு அவர் விரும்பிய தோற்றத்தில் எல்லாம் அவதாரம் எடுப்பார் என்றும் எங்களின் இப்பயணத்திற்கு முடிவு கிடையாது, நாம் இந்த விமானத்தின் உள்ளேதான் தொடர்ந்தும் இருப்போம் என்கிறார்.

ஆறாமவர் : இந்த விமானத்திற்கு எந்த விமானியும் (பைலட்) கிடையாது, அதனால் ஒரு அடயாளக் குறியீட்டு கற்பனை விமானியை நான் எடுத்துக்கொள்ள விரும்புகிறேன் என்று குறிப்பிடுகிறார்.

ஏழாமவர் : விமானத்திற்கு விமானி உண்டு. ஆனால் நாம் இந்த விமானத்தில் ஏறினோம் அது சுயமாக இயங்குகிறது. அந்த விமானியோ எமது விவகாரங்களிளோ விமானத்தின் விவகாரகங்களிலோ எந்த தலையீடும் செய்ய வில்லை என்கிறார்.

எட்டாவது ஒரு பயணி இவ்வாறு குறிப்பிடுகிறார் : இந்த விமானத்திற்கு ஒரு விமானி இருக்கிறார், அவரின் தூதுவரை நான் மதிக்கிறேன், ஆனால் விமானத்தினுள்ளே ஒரு செயல் நல்லதா கெட்டதா என்பதை தீர்மானிக்க, சட்டங்கள் தேவையில்லை. எமது செயற்பாடுகள் யாவும் எமது மனவிருப்பம் மற்றும் ஆசைகளின் அடிப்படையில் இருக்க வேண்டும் என விரும்புகிறோம். ஆகையால் எமக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தும் எல்லாவகையான விடயங்களையும் சுதந்திரமாக செய்வோம் என்கிறார்.

ஒன்பதாவது பயணி : இந்த விமானத்திற்கு ஒரு விமானஓட்டி (பைலட்) இருக்கிறார், அவர் எனக்குரிய ஒரே விமானியாக இருக்கிறார். நீங்கள் அனைவரும் எனக்கு பணிபுரிய வந்த ஊழியர்களே என்றும் எந்த சந்தர்பத்திலும் நீங்கள் உங்கள் இலக்கை அடைந்து கொள்ளமாட்டீர்கள் என்கிறார்.

பத்தாவது நபர் : பைலட் 'விமானியின்' இருப்பானது ஒப்பீட்டு ரீதியானது, அவர் இருப்பதை நம்புவோருக்கு அவர் இருக்கிறார், எவர்கள் இல்லையென்று நம்புகிறார்களோ அவர்களுக்கு இல்லையென்பதாகும். அதாவது ஒவ்வொரு பயணியும் அந்த விமானி பற்றியும் பயணத்தின் நோக்கம் குறித்தும் பயணிகளிளுடன் நடந்துகொள்ளும் முறை குறித்தும் எதனை கற்பனையில் கொண்டிருக்கிறார்களோ அவைகள் அனைத்தும் சரியானவையே என்று கூறுகிறார்.

இந்தக்கற்பனை கதையானது தற்போது இப்பூமியில் வாழும் மனிதர்களின் உண்மைக் கருதுகோள்கள் குறித்த விம்பத்தை குறிப்பிடுவதுடன், இந்தப் பூமியின் அடிப்படைத் தோற்றம் இவ்வாழ்க்கையின் இலக்கு குறித்த ஒரு தோற்றப்பாட்டையும் தருகிறது.

இந்த உதாரணத்தின் மூலமாக நாம் சாதாரணமாக விளங்கிக் கொள்ள முடியுமான ஒரு விடயம் என்னவெனில், இங்கே விமானத்தை செலுத்துவதற்குரிய பயிற்சியைப்பெற்ற ஒரு விமானி இருக்கிறார் என்பதும் அவர் குறிப்பிட்ட ஒரு இலக்கிலிருந்து இன்னொரு இலக்கு நோக்கி செலுத்துகிறார் என்பதையும் இவ்விடயத்தில் எவரும் முரண்படாது ஒருமித்த கருத்தைக் கொண்டுள்ளனர் என்பதையும் புரிந்து கொள்ளமுடிகிறது.

விமானத்தின் பைலட் இருப்பதை மறுப்பவர் அல்லது அந்த விமானி குறித்து பல கருத்துக்களைக் கொண்டவர் இதற்கான விளக்கத்தையும் தெளிவுபடுத்தலையும் வழங்க வேண்டும், இவ்வாறான கருத்துக்கொண்டவரின் நிலை சரி மற்றும் தவறுக்கு உட்படக்கூடிய சாத்தியப்பாடு அதிகமாவே உள்ளது!. இந்த சாதாரண உதாரணத்தை படைப்பாளனின் இருப்புக் குறித்த விடயத்தில் பிரயோகிப்போமேயானால் இந்த பிரபஞ்ச தோற்றம் குறித்து பல்வேறுவகையான கோட்பாடுகள் ஒரு குறிப்பிட்ட பொதுவான யதார்த்தத்தின் இருப்பை மறுதலித்துவிடாது என்பதை எம்மால் கண்டுகொள்ள முடியும். அப்பொதுவான யதார்த்தம் :

எந்த சந்ததியும், இணையும் இல்லாத ஏகனும் ஒரே படைப்பாளனுமாகிய இறைவன் தனது படைப்பினங்கிலிருந்து சுயாதீனமானவனாக உள்ளான். அவன்

அந்தப் படைப்பினங்களின் எந்த ஒன்றின் வடிவிலும் பிரதிபலிக்க மாட்டான். இந்த உலகமே ஒன்று சேர்ந்து படைப்பாளனான கடவுள் உதாரணத்திற்கு ஒரு மிருகத்தின் வடிவிலோ அல்லது மனிதனின் தோற்றத்திலோ அவதாரமெடுப்பான் என்று ஒரு கருத்தாக்கத்தை ஏற்படுத்தி அதனை ஏற்றுக்கொள்ள முனைந்தாலும் ஏகவல்லோனாகிய கடவுள் அவ்வாறு மாற மாட்டார். இந்நிலையிலிருந்து அல்லாஹ் மிகவும் தூயவனகவும் உயர்ந்தோனாகவும் உள்ளான்.

படைப்பாளனான இறைவன் நீதியாளனாவான். நல்லனவற்றிற்கு வெகுமதியை வழங்குவதும், தீயனவற்றிற்கு தண்டனை வழங்குவதும் அவனின் நேர்மைக்கு சான்றாகும். அவன் எப்போதும் மனிதர்களுடன் தொடர்புள்ளவனாக இருப்பதுடன், அவன் மனிதர்களைப் படைத்து விட்டு அவர்களை கைவிடுபவனாக ஒரு போதும் இருக்க மாட்டான் என்பதே பேருண்மையாகும். இதன் காரணமாகத்தான் அவன் தனது நேரான பாதையை தெளிவு படுத்தி அவனை முறையாக வணங்குவதற்கு, எந்த ஒரு பாதிரியாரோ, துறவியோ அல்லது எந்த இடைத்தரகரோ இல்லாமல், அவனை மட்டுமே நாடி புகழிடம் தேட வேண்டும் என்பதற்கான வழிமுறையை எத்திவைப்பதற்காக அவனின் தூதர்களை அனுப்பிவைத்தான். இந்த வழியைப் பின்பற்றுபவர்கள் வெகுமதிக்கு தகுதியானவர்கள், அதே நேரத்தில் அதிலிருந்து விலகியவர்கள் தண்டனைக்கு தகுதியானவர்கள். இதன் விளைவு சொர்க்கத்தின் பேரின்பம் மற்றும் நரக வேதனையின் மூலம் மறுமை வாழ்வில் வெளிப்படுகிறது.

இந்த ^+ரிய வழிகாட்டலே 'இஸ்லாம் மார்க்கம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இதுவே சத்திய மார்க்கமும் வழியுமாகும். இதனையே தனது அடியார்களுக்கு ஒரே மார்க்கமாக படைப்பாளனான இறைவன் ஏற்றுக்கொண்டிருக்கிறான்.

முஸ்லிமல்லாதவரைக் குறிக்க 'காஃபிர்' என்ற வார்த்தையைப் பயன்படுத்துவது மற்ற தரப்பினரை அவமரியாதை செய்வதாக அமையுமா?

அவ்வாறு அமையாது. உதாரணத்திற்கு ஒரு முஸ்லீம் திரித்துவக் கோட்பாட்டில் நம்பிக்கை கொள்ளாததால்; அவர் இறைராஜ்யத்தில் பிரவேசிக்க

மாட்டார் என்ற அடிப்படையில் அவரை ஒரு காஃபிர் -கிறிஸ்துவத்தை ஏற்காதவர்- என்று கிறிஸ்தவர் கருதுகிறார்களே! இதே போன்றுதான் இஸ்லாத்தை வாழ்க்கைநெறியாக ஏற்காதவர் யாராயினும் அவர்களுக்கு அரபு மொழியில் காபிர் என்ற வார்தை பயன்படுத்தப்படுகிறது. 'குப்ர்' என்ற வார்த்தைக்கு உண்மையை அல்லது சத்தியத்தை மறுப்பது என்று பொருள், முஸ்லீம்களுக்கு உண்மை, சத்தியம் என்பது ஏகத்துவமாகும். கிறிஸ்தவர்களைப் பொருத்தவரை அவர்களது மதத்தின் அடிப்படையில் சத்தியம் என்பது திரித்துவமாகும்.

# இறுதி வேதம் :

### *அல்குர்ஆன் என்றால் என்ன?*

அல்குர்ஆன் என்பது அகிலத்தின் இரட்சகனிடமிருந்து அனுப்பட்ட வேதங்களில் இறுதி வேதமாகும். முஸ்லிம்களைப் பொருத்தவரை அல்குர்ஆனுக்கு முன் அனுப்பப்பட்ட அனைத்து வேதங்களையும் அதாவது இப்ராஹீம் அலை அவர்களின் ஸுஹுபுகள் உட்பட ஸபூர் தவ்ராத் இன்ஜீல் அவை அல்லாத இறைவேதங்களை நம்புகின்றனர். அத்துடன் எல்லா இறைவேதங்களும் தூய ஏகத்துவத்தை அதாவது "அல்லாஹ்வை இறைவனாக நம்பி வணக்கத்தை அவனுக்கு மாத்திரமே செலுத்தல்" என்ற கோட்பாட்டை அடிப்படையாக கொண்ட உண்மை செய்தியை –தூதுத்துவத்தை உள்ளடக்கியதாக இருந்தது என்பதை உறுதியாக ஏற்றுக்கொள்கின்றனர். இருப்பினும் அல்குர்ஆன் முந்தைய இறைவேதங்களைப் போன்று, குறிப்பிட்ட குழு அல்லது பிரிவினருக்கு மாத்திரம் ஏகபோக உரிமை கொண்டதாக இல்லை. அதே போன்று பல்வேறு வித்தியாசமான பிரதிகளும் கிடையாது. அது எந்த மாற்றத்திற்கும் உட்படவுமில்லை, மாறாக அது அனைத்து முஸ்லிம்களுக்கும் ஒரே பிரதியாக மாத்திரமே காணப்படுகிறது. அல்குர்ஆன் வாசகம் எந்த மாற்றமோ அல்லது திரிபோ இன்றி அதன் அஸல் (அடிப்படை) மொழியான அறபு மொழியிலேயே காணப்படுகிறது. அது இன்று வரையிலும் பாதுகாக்கப் பட்டதாகவே தொடர்ந்தும் உள்ளது, எதிர்காலத்திலும் அகிலத்தாரின் இரட்சகனான அல்லாஹ் வாக்களித்தது போன்று இப்பூவுலகம் அழிக்கப்படும் வரையில் அது நிலைத்திருக்கும். அல்குர்ஆன் அனைத்து முஸ்லிம்களினதும் கைகளில் பரிமாறப்படும் ஒரு நூலாக இருப்பதுடன், அதிகமானோரின் உள்ளங்களில் பதியவைத்து பாதுகாக்கப்பட்டுள்ளது. பல்வேறு மொழிகளிலும் அல்குர்ஆன் மொழிபெயர்ப்புகள் மக்களின் புலக்கத்தில் பரவாலாக உள்ளன. அவைகள் யாவும் அல்குர்ஆனின் கருத்துக்களை பிரதிபலிக்கும் மொழிபெயர்ப்பு மாத்திரமே என்பதை கருத்திற் கொள்ளவும். அன்றைய அரேபியர்கள் சொற்பொழிவு, சொல்லாட்சி, கவிதை போன்றவற்றில் தலைசிறந்தவர்களாக இருந்த போதிலும், குர்ஆன் போன்ற ஒன்றைத் கொண்டுவருமாறு அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ் அரேபியர்களுக்கும்

அரேபியர் அல்லாதவர்களுக்கும் சவால் விடுத்தான். இருப்பினும், இந்த குர்ஆன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரிடமிருந்தும் வர முடியாது என்பதை அவர்கள் உறுதியாக ஏற்றுக்கொண்டனர். ஆனாலும் இந்த சவால் பதினான்கு நூற்றாண்டுகளுக்கும் மேலாக இருந்தும், எவரும் இச்சவாலை எதிர்கொள்ள முடியவில்லை. இதுவொன்றே இந்தக் குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து கிடைத்த வேதம் என்பதற்கு மிகப் பெரிய சான்றுகளில் ஒன்றாகத் திகழ்கிறது.

### *முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அல்குர்ஆனை தவ்ராத்திலிருந்து பிரதி செய்தாரா?*

அவ்வாறு தவ்ராத்திலிருந்து பிரதிசெய்யப்பட்டு யூதர்களிடமிருந்து இந்த அல்குர்ஆன் வந்திருந்தால் மனிதர்களில் அதனை தங்களுக்குரியது என்பதாக உரிமை பாராட்டுவதில் அவர்கள் முந்திக்கொண்டிருப்பர். வேத இறைவெளிப்பாடு (வஹி) இறங்கிய காலத்தில் இவ்வாறான வாதமொன்றை அவர்கள் முன்வைத்தனரா என்று நாம் கேள்வியெழுப்பினால் அதற்கு இல்லையென்பதே பதிலாகும்.

அத்துடன் இன்னோரு வகையில் சிந்திப்பின், தொழுகை ஹஜ் மற்றும் ஸகாத் போன்ற ஷரீஆ மற்றும் கொடுக்கல்வாங்கல் சட்டங்கள் வித்தியாசப்படுபவனாக இல்லையா? மேலும், மற்ற வேதங்களுடன் ஒப்பிடுகையில் குர்ஆனின் தனித்துவம் மற்றும் அதன் மனிதகையாடல்களுக்கு உட்படாத தன்மை மற்றும் அறிவியல் அற்புதங்களை உள்ளடக்கியது குறித்து முஸ்லிமல்லாதவர்களின் சாட்சியத்தை நோக்க வேண்டியதும் அவசியமாகும். ஒரு கொள்கையுடையவர் தன்னுடைய கொள்கைக்கு முரணான ஒரு கோட்பாட்டினை சரியென ஏற்றுக்கொண்டால், அதுவே அதன் உண்மைக்கு மிகப்பெரிய சான்றாகும். ஆகவே அகிலத்தாரிடமிருந்து கிடைத்த ஒரே தூதாக இது இருப்பதால் இது ஒன்றாக இருப்பதே அவசியமாகும். நபியவர்கள் கொண்டுவந்த இவ்விறைவேதமானது மோசடிக்கான ஆதாரமன்று! மாறாக அவரின் நேர்மைக்கான ஆதாரமாகும். அல்லாஹ் அறபு அணியிலக்கினக்கலையில் திறன்மிக்கோராக கருதப்பட்ட அறபுகள் மற்றும் அறபுகள் அல்லாதோரிடமும் இவ்வேதத்தைப் போன்ற அல்லது இது போன்று ஒரு வசனத்தையேனும் கொண்டு

வருமாறு சவால் விடுத்தான். அவர்கள் அச்சாவாலுக்கு முகம் கொடுக்க இயலாது தோற்றுப்போனார்கள் என்பதே வரலாறாகும். அந்த சவால் இன்று வரை தொடர்ந்து கொண்டேயிருக்கிறது!.

### *நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அல்குர்ஆனில் வந்ததை ஆரம்ப கால நாகரிகங்களிலிருந்து எடுத்தாரா?*

புராதன –பண்டைய நாகரிங்களில் சரியான சில விடயங்கள் காணப்பட்டன. அதில் மிகவும் அதிகமானவை கட்டுக்கதைகளும், புனைவுகளுமே. வரண்ட பாலை நிலத்தில் வளர்ந்த எழுதப்படிக்கத் தெரியாத ஒரு தீர்கதரிசிக்கு இவ்வாறான நாகரிங்களில் உள்ள (சிறப்பான) சரியான விடயங்களை மாத்திரம் (நகல் செய்து) பிரதி செய்துவிட்டு கட்டுக்கதைகளையும் புராணங்களையும் விட்டு விடுவதற்கு எவ்வாறு முடிந்தது? என்பது சிந்திக்கத் தக்க விடயமல்லவா!?.

### *அல்குர்ஆன் அறபு மொழியில் இறக்கப்பட்டது ஏன்?*

உலகத்தில் பல்லாயிரக்கணக்கான மொழிகளும், வழக்கு மொழிகளும் பரவலாக காணப்படும் ஒரு விடயாமாகும். இவ்வாறாக காணப்படும் எந்த மொழியில் அல்குர்ஆன் இறக்கப் பட்டாலும் ஏன் மற்றைய மொழியொன்றில் இறக்கப்பட்டிருக்கக்கூடாது, அல்லது இறங்கியிருக்க வேண்டுமே என்ற கேள்வியை சாதாரணமாக மக்கள் கேட்கவே செய்வர். உண்மையில் அல்லாஹ் தனது தூதர்களாக அவர்களின் சமூகத்தாரின் மொழியை பேசக்கூடியவரையே அனுப்பி வைத்தான் இந்த அடிப்படையில் இறுதித்தூதராக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸலம் அவர்களை தேர்வு செய்தான். எனவே நபியவர்களினதும் அவர்களின் சமூகத்தின் மொழியும் அறபாக இருந்தது ஆகையால் அவர்களின் மொழியான அறபு மொழியில் அல்குர்ஆனை அல்லாஹ் இறக்கினான். அதனை மறுமை நாள் வரையில் எந்த திரிபுமின்றி பாதுகப்பான். இதே போல் அல்லாஹ் ஈஸா அலை அவர்களின் வேதநூலின் மொழியாக அராமிக் மொழியை தெரிவு செய்தான்.

அல்லாஹ் கூறுகிறான் :

"நாம் எந்தத் தூதரையும் அவர் தனது சமூகத்திற்கு தெளிவு படுத்துவதற்கு அவர்களது மொழியிலேயே தவிர அனுப்பவில்லை". (இப்ராஹீம் : 4).

அந்நாஸிஹ் வல்மன்ஸூஹ் என்றால் என்ன? நாஸிஹ் என்பது புதிய சட்டத்தையும் (மாற்றியது) அல் மன்ஸூஹ் என்பது பழைய சட்டத்தையும் (மாற்றத்திற்குட்பட்ட முந்தைய சட்டத்தையும்) குறிக்கும்.

அந்நாஸிஹ் வல்மன்ஸூஹ் கோட்பாடானது இஸ்லாமிய ஷரீஆ சட்டங்களில்- தீர்ப்புகளில் ஏற்பட்ட ஒரு வளர்ச்சியாகும். இக்கோட்பாடானது முன்னைய ஒரு சட்டத்தீர்ப்பின் செயற்பாட்டை நிறுத்துவது, அல்லது குறிப்பிட்ட பிரச்சினை தொடர்பாக வந்த புதிய சட்டத்தை அனுமதித்தல் அல்லது பொதுவாக குறிப்பிடப்பட்ட ஒரு விடயத்தை வரையறுத்தல் அல்லது குறிப்பாக வந்துள்ள ஒரு தீர்ப்பை பொதுமைப்படுத்தல் போன்ற விடயங்களை முன்வைக்கும். இது ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவரகள் முதல் முன்னைய சட்டங்களில் காணப்பட்ட எல்லோராலும் அறியப்பட்ட ஒரு விவகராமாகும். இதற்கு உதாரணமாக பின்வரும் விடயங்களை குறிப்பிட முடியும். ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் நலனை கருத்திற்கு கொண்டு ஒரு சகோதரர் தனது சொந்த சகோதரியை திருமணம் முடித்துக்கொள்வதற்கான அனுமதி வழங்கப்பட்டது. பின்னர் ஏனைய காலங்களில் வந்த இறை சட்டதிட்டங்களில் இது தீமையாக கருதப்பட்டு மாற்றப்பட்டது. அதே போன்று சனிக்கிழமை அன்று உழைத்தல் என்பது நலன் என்ற அடிப்படையில் இப்ராஹீம் அலை அவர்களினது ஷரீஆவிலும் முன்பிருந்த நபிமார்கள் மற்றும் ஏனைய எல்லா இறைசட்டங்களிலும் அனுமதிக்கப்பட்ட ஒரு காரியமாக இருந்து வந்தது. அந்த நலவானாது மூஸாஅலை அவர்களின் சட்டத்தில் தீங்காக மாறியது. அதாவது அவர்களுக்கு அனுமதி வழங்கப்படவில்லை. அதே போன்று அல்லாஹ் இஸ்ரவேலர்கள் காளை மாட்டின் கன்றை வணங்கியமைக்குப் பின் அவர்கள் ஒவ்வொருவரும் தங்களையே மாய்த்துக்கொள்ளுமாறு அல்லாஹ் கட்டளையிட்டான். இந்த சட்டம் அதன் பின்னர் நீக்கப்பட்டது. இவையல்லாத இது போன்ற உதாரணங்கள் அதிகம் காணப்படுகின்றன. ஆக ஒரே மார்க்கச்சட்டத்தில் ஒரு சட்டத்தீர்ப்பு இன்னொரு சட்டத்தீர்ப்பின் மூலம் மாற்றப்பட்டுள்ளது என்பதையும் அல்லது இரு தனித்தனியான மார்க்கச்சட்டங்களுக்கு இடையில் மார்க்கத் தீர்ப்புகளில்

வித்தியாசம் இடம்பெற்றுள்ளது என்பதை மேற்குறிப்பிட்ட உதாரணங்களிலிருந்து விளங்கிக்கொள்கிறோம்.

உதாரணத்திற்கு குறிப்பிட்ட வைத்தியரொருவர் தன்னிடம் சிகிச்சைக்காக வந்த நோயாளிக்கு குறிப்பிட்ட சில மருந்துகளின் மூலம் சிகிச்சையை துவங்குவார். காலம் செல்ல குறித்த நோயாளியின் சிகிச்சையில் ஏற்பட்டிருக்கும் படிமுறை மாற்றத்தின் காரணமாக அந்த மருந்தின் அளவை அதிகரிப்பார் அல்லது அதனை குறைத்து விடுவார். இவ்வாறாக இருக்கும் ஒரு மருத்துவரை பெரும் ஞானியாகவல்வா குறிப்பிடுகிறோம். அவ்வாறு இருக்கையில் அல்லாஹ் மனித நலன்களையெல்லாம் அறிந்தவன் என்ற அடிப்படையில் அவனுக்கே உயர் முன்மாதிரி உண்டு. அந்த வகையில் இஸ்லாமிய சட்டங்களில் -தீர்ப்புகளில் புதிய சட்டம் பழைய சட்டம் - என்றிருப்பது அல்லாஹ்வின் உயர்ஞானத்தை பறைசாட்டும் ஒரு விடயமாகும்.

### *அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் ஒன்று திரட்டப்பட்ட அல்குர்ஆன் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் எரிக்கப்பட்டது என்பதின் விபரம் யாது?*

உண்மையில் ஒரு விடயத்தை புரிந்து கொள்ளல் அவசியம். அதாவது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தமது தோழர்கள் ஓதுவதற்காகவும் பிறருக்கு கற்றுக் கொடுப்பதற்காகவும் அல்குர்ஆனை பதிவு செய்யப்பட்ட ஒரு ஆவணமாகவே விட்டுச்சென்றார்கள். அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சிப்பொறுப்பை ஏற்றதும் பல ஏடுகளில் தொகுக்கப்பட்டதை பார்ப்பதற்கு இலகுபடுத்தல் என்ற நோக்கில் ஒரே இடத்தில் சேகரிக்குமாறு பணித்தார்கள். உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் நகரங்களில் வசித்து வந்த ஸஹாபாக்களிடம், பல்வேறு அரேபிய வழக்குமொழிகளில் காணப்பட்ட ஏடுகளையும் பிரதிகளையும் ஏரித்து விடுமாறு பணிப்புரை விடுத்து, நபியவர்கள் விட்டுச்சென்ற மூலப்பிரதியான அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களால் ஒன்று திரட்டப்பட்டு வைக்கப்பட்ட அல்குர்ஆனின் புதிய பிரதிகளை அவர்களுக்கு அனுப்பிவைத்தார். இதன் மூலம் நபியவர்கள் விட்டுச்சென்ற ஒரே மூலப் பிரதியை இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின்

அனைத்து நகரங்களிலும் மக்கள் பயன்படுத்துவதற்கான உத்தரவாதத்தை ஏற்படுத்திக்கொடுத்தார்.

ஆக அல்குர்ஆன் எந்த மாற்றமுமின்றி அதன் மூல வடிவில் இன்றுவரை இருந்து கொண்டிருக்கிறது. அது முஸ்லிம்களின் வாழ்வோட்டத்தில் எல்லாக் காலங்களிலும் இணைபிரியா ஒரு அம்சமாகவும் காணப்படுகிறது. அவர்கள் அதனை தங்களுக்கு மத்தியில் பகிர்ந்து கொள்வதுடன் அதனை தொழுகைகளிலும் அன்றாடம் ஓதியும் வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்க விடயமாகும்.

### *அல்குர்ஆனில் வந்த விடயங்கள் பிரயோக விஞ்ஞானத்தினுடன் முரண்படுகிறதா?*

இஸ்லாம் ஒரு போதும் பிரயோக விஞ்ஞானத்துடன் முரண்படுவதில்லை. மாறாக அல்லாஹ்வை இறைவனை ஏற்றுக்கொள்ளாத மேற்குலக விஞ்ஞானிகளில் பலர் தங்களது அறிவியல் ஆய்வின் மூலமாக படைப்பாளனின் இருப்பு இன்றியமையாத ஒன்று என்ற முடிவுக்கு வந்துள்ளனர். இவ்வறிவியல் ஆய்வே அவர்களை இந்த யதார்த்தத்தின் பால் அழைத்துச்சென்றுள்ளது. இஸ்லாம் பகுத்தறிவு மற்றும் சாதாரண சிந்தனை சார் தர்க்கவியலை மிகைத்து பிரபஞ்சத்தைப் பற்றி சிந்திக்கவும் கூர்ந்து அவதானிக்கவும் அது தூண்டுகிறது. மேலும், இஸ்லாம் அல்லாஹ்வின் அத்தாட்சிகளையும் பிரபஞ்சத்தின் அற்புதமான படைப்புகளையும் சிந்திக்குமாறு அனைத்து மனிதர்களுக்கும் அழைப்பு விடுப்பதோடு இந்தப் பூமியில் சுற்றித்திரிந்து, பிரபஞ்சத்தைக் நோட்டமிடுமாறும், பகுத்தறிவு,சிந்தனை மற்றும் சிந்தனை சார் தர்க்கத்தைப் பயன்படுத்தவும் ஊக்குவிக்கிறது. மேலும், இந்தப்பிரபஞ்சம் மற்றும் ஆன்மா குறித்த அற்புதங்களை பல தடவைகள் மீட்டிப்பார்க்குமாறு அழைப்பு விடுக்கிறது. இவற்றிற்கான பதில்களை தேடுவோர் இப்பிரபஞ்ச காரணகர்த்தாவை நிச்சயம் கண்டு கொள்வர் என்பதில் எவ்விதச் சந்தேகமில்லை. மேலும் இந்த பிரபஞ்சம் மிக நுணுக்கமாக, உயரிய நோக்கத்துடனும் நாட்டத்துடனும் வசப்படுத்தப்பட்டதாக உருவாக்கப்பட்ட ஒன்று என்ற முழுமையான உறுதிமிக்க முடிவுக்கு வருவதுடன், இறுதியில் இஸ்லாம் அழைப்புவிடுக்கும் அல்லாஹ்வைத் தவிர உண்மையான கடவுள் எவரும் கிடையாது என்ற முடிவுக்கு வந்து விடுவர்.

அல்லாஹ் கூறுகிறான் :

“அவனே ஏழு வானங்களையும் தட்டுத் தட்டாகப் படைத்தான். மகா கருணையாளனான அவனின் படைப்பில் நீ எவ்விதக் குறைபாட்டையும் காணமாட்டீர். அவ்வாறாயின் உனது பார்வையை அதனை நோக்கி செலுத்துவீராக, அவற்றில் ஏதேனும் அவற்றில் ஏதேனும் கோளாறுகளைக் காண்கிறீரா? மேலும் இரு முறைப் பார்! (இவ்வாறு நீ எத்தனை முறை துருவித் துருவிப் பார்த்த போதிலும் ஒரு குறையையும் காண முடியாது.) உன் பார்வைதான் அலுத்து, கேவலமுற்று உன்னிடம் திரும்பிவிடும்”. (அல்முல்க்:3-4). “நிச்சயமாக இவ்வேதம் உண்மையானதுதான் என்று அவர்களுக்குத் தெளிவாகும் பொருட்டு, நம் அத்தாட்சிகளை (உலகத்தின்) பல பாகங்களிலும் காண்பிப்பதுடன், அவர்களுக்குள்ளாகவும் அதி^+க்கிரத்தில் நாம் (நமது அத்தாட்சிகளைக்) காண்பிப்போம். (நபியே!) உமது இறைவன் நிச்சயமாக அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பது (உமக்கு) போதாதா?”. (புஸ்ஸிலத் : 53) . - “வானங்கள் மற்றும் பூமியைப் படைத்ததிலும், இரவு பகல் மாறி மாறி வருவதிலும், மனிதர்களுக்குப் பயன் தருபவற்றை கடலில் கொண்டு செல்லும் கப்பல்களிலும், வானத்திலிருந்து அல்லாஹ் மழையை இறக்கி பூமி இறந்த பின் அதனை அவன் இதன் மூலம் உயிர்ப்பிப்பதிலும், எல்லாவிதமான உயிரினங்களை அவன் பரவச் செய்திருப்பதிலும், காற்றுகளை சுழலச்செய்வதிலும், வானம் பூமிக்கிடையில் வசப்படுத்தப்பட்டுள்ள மேகத்திலும் விளங்கிக் கொள்ளும் சமூகத்திற்கு பல அ த்தாட்சிகள் உள்ளன”. (அல்பகரா:164). “அவனே இரவையும், பகலையும், சூரியனையும், சந்திரனையும் உங்களுக்காக (படைத்துத்) தன் அதிகாரத்துக்குள் வைத்திருக்கிறான். (அவ்வாறே) நட்சத்திரங்கள் அனைத்தும் அவனுடைய கட்டளைக்கு உட்பட்டவையாகவே இருக்கின்றன. நிச்சயமாக இதிலும் சிந்தித்து அறியக்கூடிய மக்களுக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன”. (அந்நஹ்ல் :12) “(எவருடைய உதவியுமின்றி) நம் சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசாலமாக்கியும் வைத்திருக்கிறோம்”. (அத்தாரியாத் : 47). “(நபியே!) நிச்சயமாக அல்லாஹ்தான், மேகத்திலிருந்து மழையை பொழியச் செய்து, அதைப் பூமியில் ஊற்றுக்களாக ஓடச் செய்கிறான். பின்னர், அதைக் கொண்டு பல நிறங்களையுடைய (பலவகைப்) பயிர்களை வெளிப்படுத்துகிறான். பின்னர், அவை (கருக்கொண்டு) மஞ்சள் நிறமாக இருக்கக் காண்கிறீர்கள். பின்னர், அதைக் காய்ந்த சருகுகளாக

ஆக்கிவிடுகிறான் என்பதை நீர் பார்க்கவில்லையா? நிச்சயமாக இதில் அறிவுடையவர்களுக்கு நல்ல படிப்பினை இருக்கிறது". (அஸ்ஸுமர் :21). நவீன அறிவியலால் இப்போது கண்டுபிடிக்கப்பட்ட நீர் சுழற்சி 500 ஆண்டுகளுக்கு முன்பு விவரிக்கப்பட்டது. அதற்கு முன், கடலில் இருந்து தண்ணீர் வந்து நிலத்தில் ஊடுருவி, அதனால் நீரூற்றுகள் மற்றும் நிலத்தடி நீர் உருவானது என்று மக்கள் நம்பினர். மண்ணில் உள்ள ஈரம் குவிந்து நீரை உருவாக்குவதாகவும் நம்பப்பட்டது. 1400 ஆண்டுகளுக்கு முன்பு நீர் எப்படி உருவானது என்பதை அல்குர்ஆன் தெளிவாகக் கூறியுள்ளது. "நிச்சயமாக வானங்களும் பூமியும் இணைந்தே இருந்தன. நாமே அவ்விரண்டையும் பிரித்தோம், என்பதையும் உயிருள்ள ஒவ்வொன்றையும் நீரிலிருந்து நாமே உருவாக்கினோம் என்பதையும் நிராகரித்தோர் அறியவில்லையா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா?". (அல் அந்பியாஃ : 30).

நவீன அறிவியலால் நீரில் உயிர் உருவானது என்றும் முதல் செல்லின் (உயிர் கலத்தின்) அடிப்படைக் கூறு நீர் என்றும் கண்டுபிடிக்க முடிந்தது. இந்த தகவல் முஸ்லிம் அல்லாதவர்களுக்கு தெரிந்திருக்கவில்லை. அதே போல் தாவர உலகின் சமநிலை குறித்த விடயமும் இவ்வாறுதான். இந்த விடயங்களை முஸ்லிம்கள் அறிவியல் கண்டுபிடிப்பிற்கு முன்னரே அல்குர்ஆனின் ஊடாக அறிந்திருநதனர். இதன் மூலம் அல்குர்ஆன் நபி முஹம்மது மனோ இச்சைப்பிரகாரம் எதையும் பேசுவதில்லை என்பதை நிரூபித்துள்ளது. "நிச்சயமாக நாம்(ஆரம்பத்தில் முதல்) மனிதனை களிமண்ணின் மூலத்திலிருந்து படைத்தோம். பின்னர் பாதுகாப்பான ஓரிடத்தில் அவனை நாம் இந்திரியத்துளியாக வைத்தோம். பின்னர் இந்திரியத்துளியை கருவறைச்சுவரில் ஒட்டிக்கொள்ளக் கூடியதாகப் படைத்தோம், பின்னர் (கருவறைச்சுவரில்) ஒட்டிக் கொள்ளக்கூடியதை சதைப்பிண்டமாக்கினோம். பின்னர் சதைப்பிண்டத்தைப் எலும்பாக்கி, எலும்பை சதையால் போர்த்தினோம். பின்னர் அவனை வேறொரு படைப்பாக ஆக்கினோம். படைப்பாளர்களில் மிகச்சிறந்தவனான அல்லாஹ் மிக உயர்ந்தவனாவான்".(அல்முஃமினூன் : 12- 14).

கனேடிய விஞ்ஞானி, கீத் மூர், உலகின் மிக முக்கியமான உடற்கூறியல் மற்றும் கருவியல் வல்லுநர்களில் ஒருவர், அவர் பல பல்கலைக்கழகங்களில்

உயர் பதவிகளை வகித்தவர், அத்துடன்; கனடா மற்றும் அமெரிக்காவில் உள்ள உடற்கூறியல், கருவியல் நிபுணர் சங்கம் மேலும் உயிரியல் விஞ்ஞான ஒன்றியம் (கவுன்சில்) போன்ற பல சர்வதேச அறிவியல் சங்கங்களுக்குத் தலைவராகவும் இருந்துள்ளார், அதே போல் 1980 இல் கனடாவின் ரோயல் மெடிக்கல் சொசைட்டி, இன்டர்நேஷனல் அகாடமி ஆ∴ப் சைட்டாலஜி, அமெரிக்கன் ∴பெடரேஷன் ஆ∴ப் அனாடமிகல் பிசிஷியன்ஸ் மற்றும் அசோசியேஷன் ஆ∴ப் தி அனாடமி ஆகியவற்றின் உறுப்பினராகவும் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1980 ஆம் ஆண்டில்,கீத் மூர்' புனித குர்ஆனையும், கரு உருவாவது தொடர்பான வசனங்களையும் படித்த பிறகு இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார்.

அந்த வசனங்கள் நவீன அறிவியலுக்கு முன்னே கரு வளர்ச்சி தொடர்பான விடயங்களை துல்லியமாக குறிப்பிட்டிருந்தன. இதுவே அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்கான பிரதான காரணமாக அமைந்தது. அவர் இஸ்லாத்திற்கு மாறிய கதையை பின்வருமாறு விவரிக்கிறார்ஃ நான் எழுபதுகளின் பிற்பகுதியில் மொஸ்கோவில் நடைபெற்ற அறிவியல் அற்புதங்கள் பற்றிய சர்வதேச மாநாட்டில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டேன். அந்த மாநாட்டில் சில இஸ்லாமிய அறிஞர்கள் பிரபஞ்ச அற்புதம் குறித்த வசனங்களை எடுத்துக்காட்டினர். குறிப்பாக ஸூறா ஸஜ்தாவின் பின்வரும் இறை வசனத்தைக் குறிப்பிட்னர். "வானத்திலிருந்து பூமி வரை காரியங்களை அவனே நிர்வகிக்கின்றான். பின்னர், நீங்கள் கணிக்கின்ற ஆயிரம் வருடங்களுக்கு சமமான ஒரு நாளில் அவனின்பால் அது உயர்ந்து செல்லும்". (ஸூறதுஸ்ஸஜ்தாஃவசனம் ஃ05). தொடர்ந்தும் இஸ்லாமிய அறிஞர்கள் கருவின் உருவாக்கம் மற்றும் மனித உருவாக்கம் பற்றிப் பேசும் வேறு பல வசனங்களை தொடர்ந்தும் விவரித்தனர். அல் குர்ஆனின் மற்ற வசனங்களை விரிவாக அறிந்து கொள்வதில் எனக்கு இருந்த ஆர்வத்தின் காரணமாக, நான் தொடர்ந்து கேட்டேன். இந்த வசனங்கள் அனைவருக்கும் தக்க பதிலை கொடுத்தது. அந்த வசனங்கள் எனக்குள் ஒரு சிறப்பான தாக்கத்தை ஏற்படுத்தியது. நான் அறிய விரும்பிய விடயமல்லவா இது என உணரலானேன். இதையல்லவா நான் பல ஆண்டுகளாக ஆய்வகங்கள் மற்றும் ஆராய்ச்சிகள் ஊடாகவும் நவீன தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தியும் தேடிக் கொண்டிருக்கிறேன்!. ஆனால் தொழில்நுட்பம் மற்றும் அறிவியலுக்கு முன் அல் குர்ஆன் விவரித்த கருவளச்சி தொடர்பான விடயங்கள் விரிவானதாகவும்

முழுமையானதாகவும் இருந்தது என்கிறார். "மனிதர்களே! (மரணித்த பின்) மீண்டும் எழுப்பப்படுவது பற்றி சந்தேகத்தில் இருந்தீர்களானால், (அறிந்து கொள்ளுங்கள்;) நிச்சயமாக நாம்தான் உங்களை (முதலில்) மண்ணிலிருந்தும், பின்னர் இந்திரியத்திலிருந்தும், பின்பு கருவரைச்சுவரில் ஒட்டிக் கொள்ளக் கூடியதிலிருந்தும் பின்னர் வடிவமைக்கப்பட்டதும்; வடிவமைக்கப்படாததுமான சதைப் பிண்டத்திலிருந்தும் படைத்தோம். உங்களுக்கு தெளிவுபடுத்துவதற்காகவே (இதனை விவரிக்கிறோம்). மேலும், நாம் நாடியவற்றை ஒரு குறிப்பிட்ட காலம் வரை கருப்பையில் தரிபடுத்துகிறோம். பின்பு உங்களை சிசுவாக வெளியேற்றுகின்றோம். பின்பு நீங்கள் உங்கள் வாலிபத்தை அடையும்படிச் செய்கிறோம். அன்றியும், (இதனிடையில்) உங்களில் சிலர் மரிப்பவர்களும் இருக்கிறார்கள். அறிந்த பின் ஒன்றுமே அறியாதவர்களைப் போல் ஆகிவிடக்கூடிய தளர்ந்த வயது வரை விட்டுவைக்கப்படுபவர்களும் இருக்கிறார்கள், இன்னும், நீங்கள (தரிசாய்க் கிடக்கும்) வரண்ட பூமியைப் பார்க்கின்றீர்கள்; அதன் மீது நாம் (மழை) நீரைப் பொழியச்செய்தால் அது அதிர்வுற்று வளமாகி அழகான பல்வகைப் புற்பூண்டுகளை முளைப்பிக்கிறது". (அல் ஹஜ்: 5). நவீன அறிவியல் கண்டுபிடித்தது போல் கரு வளர்ச்சியின் துள்ளியமான சுழற்சி இதுதான்.

(هذا الكلام يوضع عقب كلام كيث مور ، وقبل موضوع النبي الخاتم

# இறுதி நபி :

*நபி முஹம்மத் யார்? அவரின் தூது உண்மை என்பதற்கான ஆதாரம் என்ன?*

நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அப்துல்லாஹ்வின் மகனாவார். அப்துல்லாஹ் அப்துல் முத்தலிபின் மகனாவார், அப்துல் முத்தலிப் ஹாஷிமின் மகனாவார். மக்காவில் வசித்துக்கொண்டிருந்த அறபிக்கோத்திரமான குறைஷிக்குலத்தை சார்ந்தவர் இவர். இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மகனான இஸ்மாஈல் அவர்களின் வழித்தோன்றலுமாவார்.

பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்று இஸ்மாஈல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹ் அருள்புரிவதாகவும், அவரின் வழித்தோன்றில் மிகப்பெரும் சமூகத்தை உருவாக்குவான் எனவும் உறுதியளித்தான்.

'இஸ்மவேலைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன், இதோ, நான் அவரை ஆ^+ர்வதித்து, அவரைப் பலுகச் செய்து, அவரை மிக அதிகமாகப்பெருகச் செய்வேன், அவர் பன்னிரண்டு இளவரசர்களைப் பெற்றெடுப்பார், அவரைப் பெரிய தேசமாக்குவேன் (பழைய ஏற்பாடு, ஆதியாகமம் (17:20)). இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சட்டபூர்வமான மகனாக இஸ்மாஈல் இருந்தார் என்பதற்கு இது மிகப்பெரும் சான்றாக உள்ளது. கர்த்தருடைய தூதன் அவளிடம், 'இதோ, நீ கர்ப்பவதியாக இருக்கிறாய், ஒரு குமாரனைப் பெற்றெடுப்பாய், கர்த்தர் உன் உபத்திரவத்தைக் கேட்டபடியினால் அவனுக்கு இஸ்மவேல் என்று பேரிடுவாய்' என்றார் (பழைய ஏற்பாடு, ஆதியாகமம் (11:16)).

ஆகவே, ஆபிரஹாமின் மனைவியாகிய சாரா தன்னிடம் பத்து வருடங்களாக, இருந்த தனது அடிமையான எகிப்தைச் சேர்ந்த ஹாஜரை கன்ஆன் பிரதேசத்தில் வசிப்பதற்காக ஆபிரஹாமிற்கு மனைவியாகக் கொடுத்தார்.'(பழைய

ஏற்பாடு, ஆதியாகமம் 3:16)).

நபி முஹம்மத் மக்காவில் பிறந்தார். அவர் பிறப்பதற்கு முன்பே அவரது தந்தை மரணித்திருந்தார். பின்னர் அவர்களின் தாயாரும் சிறுவயதிலேயே மரணித்தார், பின் அவரின் பாட்டனார் பொறுப்பில் வளர்ந்தார். பின் அவரின் பாட்டனாரும் மரணிக்க, நபியவர்களின் பெரிய தந்தை அபூதாலிப் அவரைப் பொறுப்பேற்றார். உண்மை, நம்பிக்கை போன்ற நற்பண்புகளால் பிரபல்யமானவர்களாகத் திகழ்ந்தார்கள். ஜாஹிலிய்யாக் கால மக்களுடன் வீண்விளையாட்டு, கேளிக்கை அல்லது நடனம் இசை, மது அருந்துதல் போன்ற விடயங்களில் கலந்து கொள்ளாதவர்களாகவும், அவற்றை அங்கீகரிக்காதவர்களாகவும் திகழ்ந்தார்கள். பின் நபியவர்கள் மக்காவிற்கு சமீபமாக காணப்படும் ஹிராக் குகைக்கு தியானத்திற்காக செல்லலானார்கள். அதனைத் தொடர்ந்து அந்த இடத்தில் இறைவெளிப்பாடு (வஹி) அவர்களுக்கு இறங்கியது. அல்லாஹ்விடமிருந்து திடீரென ஒரு வானவர் வந்து ஓதுவீராக! ஓதுவீராக என்று கூறினார். நபியவர்களோ எழுத படிக்கத் தெரியாதவர்களாக இருந்தார்கள். அதனால் தன்னிடம் ஓதுமாறு வேண்டிக்கொண்ட வானவரிடம் தான் ஓதத் தெரிந்தவனல்ல என்று முதல் தடவையாக பதிலளித்தார்கள். பின்னர் வானவர் மீண்டும் இரண்டாவது தடவையாகவும் ஓதுமாறு வேண்ட நபியவர்கள் தான் ஓதத்தெரிந்தவனல்ல என்று வானவரிடம் கூறினார். பின்னர் வானவர் நபியவர்களை சிரமப்படும் அளவிற்கு இறுகக் கட்டியணைத்து ஓதுமாறு வேண்டிக்கொண்டார்கள். அப்போதும் நபியவர்கள் தான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்று மூன்றாம் தடவையாகவும் பதிலளிக்க வானவர் நபியவர்களிடம் : “இக்ரஃ பிஸ்மிரப்பிகல்லதீ கலக” என ஆரம்பிக்கும் பின்வரும் ஐந்து வசனங்களை ஓதிக் காண்பித்தார்கள். “படைத்த உமதிரட்சகனின் பெயரால் ஓதுவீராக. மனிதனை அவன் கருவறைச் சுவரில் ஒட்டிக்கொள்ளக்கூடியதிலிருந்து படைத்தான். ஓதுவீராக! உனது இரட்சகன் மிக கண்ணியமானவன். அவன்தான் எழுதுகோலைக் கொண்டு (எழுதக்) கற்றுக் கொடுத்தான். (அதன் மூலம்) மனிதன் அறியாதவற்றை அவன் அவனுக்குக் கற்றுக் கொடுத்தான்”. (ஸூறத்துல் அலக் 1-5).

**முஹம்மத் நபியவர்களின் நபித்துவம் உண்மை என்பதற்கான சான்று :**

இந்த விடயத்தை நாம் அவரின் வாழ்க்கை வரலாற்றின் ஊடாகக் கண்டுகொள்கிறோம். அவர் உண்மை பேசுபவர், நம்பிக்கையாளார் என

எல்லோராலும் போற்றப்பட்டவராக பிரபல்பயம் பெற்றிருந்தார் அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான் :
"(நபியே!) நீர் இதற்கு முன்னர் ஒரு வேதத்தை ஓதி அறிந்தவருமல்ல; உமது கையால் நீர் அதை எழுதி(ப் பழகி)யவருமல்ல. அவ்வாறு இருந்திருக்குமாயின், நிராகரிப்பவர்கள் (அசத்தியவாதிகள்) (இதை நீர் தாமாகவே கற்பனை செய்து கொண்டீரே தவிர இறைவனால் அருளப்பட்டதல்ல என்று) சந்தேகம் கொள்ளலாம்". (அல் அன்கபூத் : 48). நபியவர்கள் மக்களை எதன் பால் அழைக்கிறார்களோ அவற்றை முதலாவதாக செய்பவர்களாக இருந்தார்கள் அவர்களின் வார்த்தைகளை செயல்களால் உண்மைப்படுத்துவார்கள். (சொல்லும் செயலும் ஒன்றாக இருந்தது), தனது பிரச்சாரத்திற்கு உலகியல் வெகுமதியை வேண்டுபவராக அவர்கள் இருக்கவில்லை. அவர்கள் ஒரு ஏழையாகவும், தயாள குணமுடையவர் களாகவும், கருணையும், பணிவு மிக்கவர்களாகவும் வாழ்ந்தார்கள். தமது சமூதாயத்தில் அதிகம் அர்ப்பணிப்புடன் நடந்து கொள்பவர்களாகவும், மக்களிடத்தில் இருக்கும் விடயங்களில் சுயகௌரவம் பேணி நடப்பவர்களாகவும் காணப்பட்டார்கள். இது குறித்து அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான் : "அல்லாஹ் நேர்வழியில் செலுத்தியோர் இவர்கள்தாம். எனவே, இவர்களின் வழியை நீர் பின்பற்றுவீராக. இதற்காக நான் எந்தக் கூலியையும் கேட்கமாட்டேன். இது அகிலத்தாருக்கான உபதேசமேயன்றி வேறில்லை என்று (நபியே) நீர் கூறுவீராக". (அல் அன்ஆம்: 90).

அல்லாஹ் அறபுகளின் மொழியான அறபியில் அருளிய குர்ஆன் வசனங்களிலிருந்து தமது நபித்துவத்திற்கான சான்றுகளை அவர்கள் முன்வைத்தார்கள். அத்திருவசனங்கள் உயர் இலக்கிய நயம் கொண்டமைந்ததினால் மனிதர்களின் கூற்றுக்களை விட மிகவும் உன்னதமானதாக அமைந்திருந்தது. இது குறித்து அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகிறான் :

"இந்த குர்ஆனை அவர்கள் சிந்தித்துணர வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்திருந்தால் இதில் பல (தவறுகளையும்) முரண்பாடுகளை(யும்) அவர்கள் கண்டிருப்பார்கள்". (நிஸா : 82). (நிஸா : 82). "இதனை இவரே இட்டுக் கட்டினார் என அவர்கள் கூறுகின்றனரா? நீங்கள்

உண்மையாளர்களாக இருந்தால் இட்டுக்கட்டப்பட்ட இது போன்ற பத்து அத்தியாயங்களைக் கொண்டுவாருங்கள். (இதற்காக) அல்லாஹ்வையன்றி உங்களால் முடிந்தவர்களை எல்லாம் அழைத்துக் கொள்ளுங்கள் என்று (நபியே) நீர் கூறுவீராக!". (ஹூத் : 13). "உமக்கு அவர்கள் பதில் சொல்லாவிடில், நிச்சயமாக அவர்கள் தங்கள் மனோஇச்சையையே பின்பற்றுகிறார்கள் என்று உறுதியாக நீர் அறிந்து கொள்வீராக. அல்லாஹ்வுடைய நேரான வழியை தவிர்த்து விட்டுத் தன் மனோஇச்சையைப் பின்பற்றுபவனை விட வழிகெட்டவன் எவனுமுண்டோ! நிச்சயமாக அல்லாஹ் (இத்தகைய) அநியாயக்கார மக்களை நேரான வழியில் செலுத்துவதில்லை". (அல் கஸஸ்: 50).

மதீனாவில் உள்ளவர்களில் சிலர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மகன் இப்ராஹீம் அவர்களின் மறைவால் சூரிய கிரகணம் ஏற்பட்டதாக வதந்தி பரப்பிய போது, கிரகணம் பற்றிய எண்ணற்ற மூட நம்பிக்கைகளும் கட்டுக் கதைகளும் இன்றுவரையில் இருக்கும் நிலையில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த பிழையான நம்பிக்கைளை தகர்த்தெரியும் விதத்தில் அனைவருக்கும் ஒரு முக்கிய செய்தியை பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பே மிகத்தெளிவாக கூறினார்கள். இது குறித்து அவர்கள் குறிப்பிடுகையில் :

'நிச்சயமாக சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரு சான்றுகளாகும். எவரது இறப்புக்காகவும் பிறப்புக்காகவும் கிரகணம் ஏற்படுவதில்லை. எனவே, அவற்றை நீங்கள் கண்டால் (பிரகாசம் வரும்வரை) அல்லாஹ்வை நினைவு கூறுதவதின் பாலும் தொழுகையின் பாலும் விரையுங்கள்' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புஹாரி).

ஆகவே அவர்கள் ஒரு பொய் நபியாக இருந்திருந்தால் தனது நபித்துவத்தை மக்கள் ஏற்கச்செய்வதற்கான சந்தர்ப்பமாக இதனைப் பயன்படுத்தியிருப்பார்கள்! மேலும், நபிகள் நாயகம் பற்றிய வர்ணனைகளும் அவர்களின் பெயரும் பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டிருப்பதானது அவர்கள் ஒரு நபி என்பதற்கான சான்றுகளின் ஒன்றாகும்.

'படிக்கத் தெரியாத ஒருவருக்கு புத்தகம் கொடுக்கப்பட்டு அவரிடம் இதைப் படியுங்கள் எனக் கூறப்படும் அதற்கு அவர் எனக்கு படிக்கத் தெரியாது' எனக் கூறுவார் (பழைய ஏற்பாடு, ஏசாயா 29:12)). தற்போதுள்ள பழைய மற்றும் புதிய ஏற்பாடுகளின் நூல்களில், திரிபுகளும், மனிதக் கையாடல்களும் இருப்பதால் அல்லாஹ்விடமிருந்து வந்தவை என முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால் அவை இரண்டிற்கும் ஒரு சரியான மூலஆதாரம் உள்ளது என்பதை அவர்கள் நம்புகிறார்கள். அதுவே அல்லாஹ் தனது தீர்கதரிசிகளான மூஸா மற்றும் ஈஸாவிற்கு அருளிய தவ்ராத்தும் இன்ஜீலுமாகும். இந்த வகையில் தற்போதுள்ள புதிய மற்றும் பழைய ஏற்பாடுகளில் அல்லாஹ்விடமிருந்து இறக்கப்பட்ட சில விடயங்கள் இருக்க முடியும் !. இவ்வேதங்களில் வந்துள்ள நபித்துவம் தொடர்பாக வந்த (தீரக்கதரிசனம்) உண்மையாக இருந்தால் அது நபி முஹம்மத் அவர்களைப்பற்றியே பேசிகிறது எனவும், அது உண்மை தவ்ராத் வேதத்தின் எச்சங்களில் உள்ளவை எனவும் முஸ்லிம்கள் நம்புகின்றனர்.

நபி முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் அழைப்பு விடுத்த தூதுச்செய்தி தூய்மையான அகீதாவாகும். அது ஓரிறைவனை விசுவாசித்து, வணக்க வழிபாடுகளில் அவனை ஒருவனாகவே ஏற்று வழிபடுதலைக் குறிக்கும். அல்குர்ஆன் குறிப்பிடுவது போல், இதுவே நபியவர்களுக்கு முன் வந்த அனைத்து நபிமார்களும் மக்களுக்கு முன்வைத்த தூதாக காணப்படுகிறது. இந்தப் பேருண்மையை அல்குர்ஆன் பின்வருமாறு விவரிக்கிறது :

"மனிதர்களே! நிச்சயமாக நான் உங்கள் அனைவருக்குமான அல்லாஹ்வின் தூதராவேன். வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி அவனுக்கே உரியன. உண்மையாக வணங்கப்படத்தகுதியானவன் அவனைத்தவிர வேறு யாரும் இல்லை. அவனே உயிர்பிக்கிறான் இன்னும் மரணிக்கவும் செய்கிறான் என்று (நபியே) நீர் கூறுவீராக! ஆகவே நீங்கள் அல்லாஹ்வையும், எழுத்தறிவற்ற உம்மி நபியாகிய அவனது தூதரையும் நம்பிக்கை கொள்ளுங்கள். அவரும், அல்லாஹ்வையும் அவனது வார்த்தைகளையும் நம்பிக்கை கொள்கிறார். நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு அவரையே பின்பற்றுங்கள்". (அல் அஃராப் : 158).

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மகிமைப் படுத்தியது போன்று ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை இப்பூமியில் எவரும் மகிமைப்படுத்தவில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள் : 'நான் மர்யமின் மகன் ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு உலகிலும் மறுமையிலும் மக்களிலேயே மிகவும் நெருக்கமானவன். ஆவேன்' என்று கூறிய போது அல்லாஹ்வின் தூதரே அது எப்படி? என ஸஹாபாக்கள் கேட்டார்கள். அதற்கு : 'இறைத் தூதர்கள் ஒரே தந்தையின் பிள்ளைகள் ஆவர். அவர்களின் தாய்மார்கள் பலராவர். அவர்களின் மார்க்கம் ஒன்றே. எனக்கும் அவருக்கும் இடையே (ஈஸாவிற்கும் எனக்கும் இடையில்) இறைத்தூதர் எவருமில்லை'. (ஆதாரம் : முஸ்லிம் (1218)).

ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பெயர் நபி முஹம்மதின் பெயரைவிட அதிக தடவைகள் அல் குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது ஈஸாவின் பெயர் 25 தடவைகளும் முஹம்மத் நபியின் பெயர் 4 தடவைகளும் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல்குர்ஆனில் வந்துள்ளதிற்கினங்க உலகப்பெண்கள் அனைவரையும் பார்க்க ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தாயார் மர்யம் அவர்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளார்கள்.

அதே போன்று அல்குர்ஆனில் பெயர்குறிப்பிடப்பட்ட ஒரே பெண்ணாக மர்யம் அலைஹஸ்ஸலாம் அவர்கள் மாத்திரமே உள்ளார்.

அது மாத்திரமின்றி அல்குர்ஆனில் ஒரு முழு அத்தியாயத்தின் பெயர் மர்யம் என்றுள்ளது. (வெப் முகவரி :www.fatensabri.com புத்தகம் அய்னுன் அலல் ஹகீகா : ஆசிரியர் பாதின் ஸப்ரி).

இவையனைத்தும் நபியவர்களின் உண்மைக்கு மிகப்பெறும் சான்றாக

உள்ளன. அவர் ஒரு பொய்பேசும் தீர்க்கதரிசியாக இருந்திருந்தால் தனது மனைவிகள் அல்லது பெற்றோர் அல்லது பெண்பிள்ளைகளின் பெயர்களை குறிப்பிட்டிருப்பார்கள். மேலும் அவர்கள் ஒரு பொய்பேசும் நபியாக இருந்திருந்தால் அவர்கள் ஈஸாவை மகிமைப்படுத்தி பேசியிருக்கவுமாட்டார்கள். அத்துடன் ஒரு முஸ்லிம் விசுவாசம் கொள்ளவேண்டிய அடிப்படையான விடயங்களில் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஈமான் கொள்வது அவசியம் என்பதை கூறியிருக்கவும் மாட்டார்கள்.

முஹம்மது நபிக்கும் இன்றுள்ள எந்த ஒரு மத போதகருக்கும் இடையே ஒரு எளிமையான ஒப்பீட்டை செய்வதன் மூலம் நபியவர்களுடைய நேர்மையை எம்மால் உணர முடியும். செல்வம், கௌரவம் அல்லது மதரீதியான பதவிகள் அவருக்கு வழங்கப்பட்டும் கூட அந்த அனைத்து சலுகைகளையும் அவர்கள் நிராகரித்தார்கள். எனவே விசுவாசிகளின் பாவங்களை ஒப்புக்கொள்ளவோ அல்லது மன்னிக்கவோ அவர்கள் முற்பட வில்லை. மாறாக, படைப்பாளனிடம் நேரடியாக முறையிடும் படியே தம்மைப் பின்பற்றுபவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

நபியவர்களின் நபித்துவம் உண்மை என்பதற்கான மிகப்பெரும் சான்றாக அவர்களின் பிரச்சாரம் பரவி மக்கள் அதனை அங்கீகரித்ததுடன் அதற்கு அல்லாஹ் அருள் புரிந்ததையும் குறிப்பிட முடியும். ஆகவேதான் மனித வரலாற்றில் நபித்துவம் கிடைத்ததாக வாதிட்ட பொய் நபிகளின் பிரச்சாரத்தை அல்லாஹ் வெற்றிபெறச்செய்யவில்லை.

ஆங்கிலேய தத்துவஞானி தோமஸ் கார்லைல் (1795-1881) பின்வருமாறு குறிப்பிடுகிறார். 'இஸ்லாமிய மார்க்கம் பொய்யானது, முகம்மத் ஒரு ஏமாற்றுகாரர் போன்ற ஊகங்களுக்கு செவிசாய்ப்பது இந்த யுகத்தில் வாழும் நாகரீகமுள்ள எந்தவொரு மனிதருக்கும் மிகப்பெரிய அவமானமாகும். இதுபோன்ற கேலிக்குரிய, வெட்கக்கேடான வாசகங்களுக்கு எதிராக நாம் போராட வேண்டும். ஏனென்றால், அந்தத் தூதர் கூறிய செய்தி, இறைவன் படைத்த நம்மைப் போன்ற சுமார் இருநூறு மில்லியன் மக்களுக்கு, பன்னிரெண்டு நூற்றாண்டு காலமாக, இன்னும் ஒளிரும் கலங்கரை விளக்காக இருக்கிறது. சகோதரர்களே! ஒரு பொய் மனிதன்

(பொய்யர்) ஒரு மதத்தை உருவாக்கி அதை பிரச்சாரம் செய்ய முடியும் என்பதை எப்போதாவது பார்த்ததுண்டா? இது ஓர் அதிசயமான விடயம். அல்லாஹ்வின் மீது ஆணையாக இது நிகழ முடியாத விடயமாகும். போலி மேசனால் வெறும் செங்கற்கள் கொண்டு வீட்டைக் கட்ட முடியாது. மாறாக அவன் சுண்ணாம்பு, ஜிப்சம், மண் போன்றவற்றின் தன்மைகளை அறிந்திருக்க வேண்டும். அவ்வாறு அறியவில்லை என்றால், அவன் வீட்டைக் கட்டுவது எவ்வாறு? இவ்வாறு ஒன்றும் அறியாது இக்கலவைகையக் கொண்டு கட்டும் கட்டடம் வெறும் இடிபாட்டு குவியல், அல்லது பொருட்களின் கலவைக் குவியலாகத்தான் காணப்படும். இவ்வாறான கட்டடம் இடிந்து அழிந்து போய்விடும் என்பதே யதார்த்தமாகும். அந்த வகையில் பன்னிரண்டு நூற்றாண்டுகளாக நம்மைப் போன்ற இருநூறு மில்லியன் மக்கள் விசுவாசிக்கும் ஒரு மதத்தின் அஸ்திவாரம் பொய்யான அடிப்படையில் கட்டமைக்கப்பட்டிருக்கலாம் என்பது ஏற்றுக் கொள்ள முடியாத விடயமாகும். அவ்வாறான மதம் முழுமையாக அழிந்து விடுவதுதான் யதார்த்தமாகும்'. (நூல் 'அப்தால்').

### *நபி முஹம்மத் அவர்கள் பைதுல் மக்திஸுக்கு சென்று, அங்கிருந்து விண்ணுலகம் சென்று அதே இரவில் எவ்வாறு திரும்பிவந்தார்கள்?*

நவீன தொழில்நுட்பமானது மனித குரல்களையும், படங்களையும் ஒரு நொடியில் கடத்தி இன்னொருவருக்கு சென்றடையச் செய்கிறது.1400 ஆண்டுகளுக்கு முன்பு மனிதகுலத்தை உருவாக்கிய இறைவன் தனது நபியை, உடல் மற்றும் ஆன்மாவுடன் வானத்திற்கு உயர்த்தியிருக்க முடியாதா? புராக் என்ற பெயரால் அழைக்கப்படும் ஒரு வாகனத்தின் மீது ஏறிச்சென்றார்கள். புராக் என்பது ஒரு வெள்ளை நிறமான பிராணி கழுதையை விட சற்று உயரமான கோவேரிக் கழுதையை விட உயரம் குறைந்த ஒரு வாகனமாகும்.(பிராணியாகும்;) அந்தப் பிராணி தன் பார்வை எட்டிய தூரம் வரை தனது கால்களை எடுத்து வைக்கும் அந்த அளவுக்கு வேகமாக பிரயாணம் செய்யும்! அதற்கு கடிவாளமும் விளக்கும் உண்டு அதில் நபிமார்கள் பிரயாணம் செய்துள்ளனர்.

இஸ்ரா மிஃராஜ் விண்ணுலகப்பயணமானது முழுமையாக இறைவல்லமை மற்றும் இறைநாட்டத்தின் அடிப்படையில் இடம்பெற்ற அதிசய

நிகழ்வாகும். அது எமது சிந்தனைக்கு அப்பாற்பட்ட நிகழ்வு என்பதுடன் நாம் அறிந்து வைத்துள்ள அனைத்து பிரபஞ்ச விதிகளிலிருந்து வித்தியாசப்படும் ஒரு நிகழ்வு. இப்பிரபஞ்ச விதிகளை இயற்றியவன் இறைவன் என்றவகையில் அகிலங்களின் இரட்சகனின் அத்தாட்சிகளில் ஒன்றாகவும் சான்றாதாரமாகவும் இது காணப்படுகிறது.

## *நபி முஹம்மத் அவர்கள் ஆயிஷாவை (ரழியல்லாஹு அன்ஹா) அவர்களை சிறுவயதில் திருமணம் செய்தது ஏன்?*

ஆயிஷா அம்மையார் நபியவர்களை மிகவும் விரும்பினார்கள் என்றும் அவர்கள் இந்த திருமணத்தினால் எந்தப் பிரச்சினையும் கொள்ளவில்லை என்பது குறித்து பேசும் ஹதீஸ்களை ஹதீஸ் கிரந்தங்களில் மிகவும் தரம் வாய்ந்த ஹதீஸ்களை கொண்ட ஸஹீஹ் அல் புஹாரி கிரந்தத்தில் எம்மால் கண்டு கொள்ள முடிகிறது.

இதில் விசித்திரமான விஷயம் என்னவென்றால், நபியவர்களின் காலத்தில் இருந்த எதிரிகள் முஹம்மது நபியை மிக அசிங்கமான முறையில் அவர் ஒரு கவிஞர் மற்றும் பைத்தியக்காரர் என்றெல்லாம் அவரை விமர்சித்தனர். ஆனால் ஒரு போதும் இந்த திருமண நிகழ்வு குறித்து அவரை யாரும் குறை கூறவில்லை, எவரும் இது குறித்து பேசவுமில்லை. ஆனால் தற்காலத்தில் இருக்கும் சில உள்நோக்கம் கொண்ட சில அற்பர்கள்தான் இஸ்லாத்தை விமர்சிப்பதற்காக இதனைக் குறித்துப் பேசுகிறார்கள். இவ்வாறான நிகழ்வுகளை மக்கள் அக்கால வழமை சார்ந்த பொதுவான நிகழ்வாகவே கருதினர். பல அரசர்கள் மிகச்சிறிய வயதினரை திருமணம் செய்துள்ளனர் என்ற விவரங்கள் வரலாற்றில் காணப்படுகிறது. ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை பெற்றெடுக்க முன் மர்யம் அலைஹஸ்ஸலாம் அவர்களை ஒரு தொன்னூறு வயது நிரம்பிய மனிதருக்கு திருமணம் பேசியதான தகவல் கிறிஸ்துவ நம்பிக்கையில் காணப்படுகிறது. இதனடிப்படையில் ஆயிஷா (ரழியல்லாஹு அன்ஹா) அவர்களின் வயது நபியவர்களை திருமணம் முடிக்கையில் மேற்குறித்த வயதிற்கு நெருக்கமாக இருந்ததை அவதானிக்க முடிகிறது. அல்லது பதினோராம் நூற்றாண்டில் இங்கிலாந்து மகாராணியான எஸ்போலா தனது எட்டாம் வயதில்

திருமணம் முடித்த நிகழ்வு வரலாற்றில் பதிவாகியுள்ளது. (http://muslimvilla.smfforfree.com/index.php...https://liguopedia.wordpress.com/.../19/agnes-de-france/...). ஆனால் இவர்கள் கற்பனை செய்வது போன்று நபியவர்களின் திருமண நிகழ்வு நடைபெறவில்லை என்தே யதார்த்தமாகும்!

## *யூத சமூகத்தினரான பனு குறைழா படுகொலையும், பலப்பிரயோகமும் மனிதாபிமானமற்ற செயலாக கருதப்படவில்லையா?*

யூத சமூகத்தினரான பனு குரைழா, உடன்படிக்கையை மீறி, இணைவைப்பாளர்களுடன் இணைந்து முஸ்லிம்களை அழிப்பதற்கு கூட்டுச்சேர்ந்தார்கள். இந்த தூரோகச் செயல் அவர்களுக்குப் பாதகமாக அமைந்துவிட்டது. எனவே அவர்களின் ஷரீஆவின் -மத சட்டதிட்டத்தின்- அடிப்படையில் துரோகம் மற்றும் உடன்படிக்கை மீறலுக்கான தண்டணை அமுல்படுத்தப்பட்டது. இதனை நபியவர்கள் அவர்களின் உடன்பாட்டின் அடிப்படையில் நிறைவேற்றினார்கள். அதாவது அவர்களிடமே இந்த விவகாரம் குறித்து தீர்ப்பு வழங்குவதற்கு ஒருவரை நியமிக்குமாறு வேண்டிக் கொண்டதற்கிணங்க அவர்கள் நபித்தோழர் ஒருவரை நியமித்தார்கள். அவர் இந்த விவகாரத்தில் அவர்களின் மதச்சட்டம் குறிப்பிடும் தீர்ப்பை நடைமுறைப்படுத்துமாறு வேண்டிக் கொண்டார். அதனடிப்படையிலேதான் இத்தண்டனை அவர்களுக்கு வழங்கப்பட்டது. (தாரீகுல் இஸ்லாம் : (2:307-318)). இன்றைய ஐக்கிய நாட்டுச்சபையின் சட்டவிதிகளில் துரோகிகள், உடன்படிக்கை மீறுவோருக்கான தண்டனை என்ன? ஒரு குழு உம்மையும், உமது குடும்பத்தினர் அனைவரையும் கொலை செய்து உமது செல்வத்தை அபகரிப்பதற்கு திட்டம் தீட்டியுள்ளனர் என வைத்துக்கொண்டால் நீ அவர்களுக்கு என்ன செய்வாய்? பனு குரைழா யூதர்கள் உடன்படிக்கை முறித்து, முஸ்லிம்களை துவம்சம் செய்ய இணைவைப்பாளர்களுடன் கூட்டுச்சேர்ந்தனர். இந்நிலையில் தம்மை பாதுகாத்துக்கொள்ள முஸ்லிம்கள் எதை செய்ய வேண்டியிருக்கும்? இவ்விவகாரம் தொடர்பாக முஸ்லிம்கள் செய்தவை சாதாரண மனிதப்புத்தியும் ஏற்கக்கூடிய தமது உயிர்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கான தற்காப்பு நடவடிக்கையாகும்.

### *மார்க்கத்தை தழுவுவதில் எவ்வித நிர்ப்பந்தமும் கிடையாது. அவ்வாறாயின் அல்லாஹ்வை விசுவாசிக்காதவர்களுடன் போரிடுமாறு அல்லாஹ் கூறுவது ஏன்?*

முதலாம் வசனம்: "இம்மார்க்கத்(தைத் தழுவுவ)தில் எவ்வித நிர்ப்பந்தமும் இல்லை. வழிகேட்டிலிருந்து நேர்வழி தெளிவாகிவிட்டது". (அல் பகரா :256). - இந்த வசனமானது மார்க்கத்தை ஏற்றுக்கொள்ள செய்வதில் நிர்ப்பந்தத்தை (வற்புருத்தலை) பிரயோகித்தலை தடை செய்தல் எனும் மார்க்கத்தின் மிகப்பெரும் இஸ்லாமிய அடிப்படையொன்றை நிறுவுகிறது. அதே வேளை இரண்டாவது வசனமானது : "அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொள்ளாமல் இருப்பவர்களோடு போராடுங்குள்" என்று குறிப்பிடுகிறது. (அத்தவ்பா : 29). குறிப்பு: 'இந்த வசனத்தை முழுமையாக படிப்பதன் மூலம் இந்த வசனம் குறிப்பிட வந்த விடயத்தை புரிந்து கொள்ளலாம்' இந்த வசனம் குறிப்பிடும் கருத்து பிரத்தியேகமானதே தவிர பொதுவானதல்ல. அதாவது இஸ்லாத்தை எதிர்த்து, இஸ்லாமிய பிரச்சாரத்தை பிறர் ஏற்றுக்கொள்வதை தடுப்பவர்களுடன் சம்பந்தப்பட்டது. ஆகவே இந்த வகையில் இரண்டு வசனங்களுக்குமிடையில் உண்மையில் எவ்வித முரண்பாடுமில்லை.

### *இஸ்லாத்தில், மதம் மாறியவரை ஏன் கொல்லவேண்டும்?*

ஈமான் (இறைவிசுவாசம்) என்பது அடியானுக்கும் அவனின் இரட்சகனுக்குமிடையிலான தொடர்பாகும். எப்போது இத்தொடர்பை ஒருவர் முறித்துக்கொள்ள விரும்புகிறாரோ அவரின் முடிவு அல்லாஹ்விடமே உள்ளது. ஆனால் யார் இதனை பகிரங்கப் படுத்தி இஸ்லாத்தை எதிர்ப்பதற்கும் அதன் தோற்றத்தை சிதைத்து கொச்சைப்படுத்தவும் (மத நிந்தனை செயற்பாட்டில்) அதற்கு துரோகம் இழைப்பதற்கும் நாடுகிறாரோ மனிதனால் இயற்றப்பட்ட சாதாரண போர்விதிகள் மற்றும் சட்டங்களின் அடிப்படையில் அவன் கொல்லப்படவேண்டும் என்பதே தீர்ப்பாகும். இதில் யாரும் மாற்றுக்கருத்துக் கொள்ளமாட்டர்கள் என்பதே அடிப்படையாகும்.

மதமாற்றத்திற்கான தண்டனை பற்றிய குற்றச்சாட்டு தொடர்பான பிரச்சினையின் அடிப்படை விடயம் என்னவென்றால் இக்குற்றச்சாட்டை சுமத்துவோர் அனைவரும் எல்லா மதங்களும் உண்மையானவை, ஒரே தரமானவை என்று யூகிப்பதாகும். மேலும், படைப்பாளனை நம்பி, அவனுக்கே வணக்கத்தை செலுத்தி அனைத்து வகையான குறைகளை விட்டும் தூய்மைப்படுத்துவதும், அவன் இருப்பை நம்ப மறுப்பதும், அல்லது அவன் ஒரு மனித மற்றும் கல்லின் வடிவத்தில் பிரதிபலிக்கிறான், அவனுக்கு சந்ததி உண்டு என நம்புவதும் ஒன்றே என்று கருதியதினால் ஏற்பட்ட விளைவாகும். இவ்வாறான கற்பிதங்களிலிருந்தும், மாயைகளிலிருந்தும் அல்லாஹ் மிகத்தூயவானாக உள்ளான். இந்த மாயைக்கு இன்னொரு காரணம் மத சார்பியம் அல்லது எம்மதமும் சம்மதம் என்ற நிலைப்பாடாகும். அதாவது, எல்லா மதங்களும் சரியாக இருக்க முடியும் என்ற நம்பிக்கை. இந்த நம்பிக்கையானது தர்க்கத்தின் சாதாரண அடிப்படைகளை அறிந்தவர் கூட ஏற்காத அல்லது இக்கருத்துடன் ஒத்துப்போகாத விடயமாகும். ஈமானானது -இறைவனை நம்புதல்- நாஸ்திகம் மற்றும் இறைமறுப்புடன் முரண்படுகிறது என்பது மிகத்தெளிவான விடயமாகும். இதனால் ^+ரிய நம்பிக்கையை ஏற்ற ஒருவர் -இறைவன் ஒருவன் என ஏற்றவன்- உண்மை சார்பியம் -ஒப்பீட்டு உண்மை- குறித்த கூற்றை ஒரு தர்கரீதியான தவறும் மடமைத்தனமுமாகும் என்றே கருதுவார். இதன் அடிப்படையில், இரண்டு முரண்பட்டட நம்பிக்கைகள் ஒரே நேரத்தில் சத்தியத்தில் உள்ளது எனக் குறிப்பிடுவதில் எந்த உண்மையும் கிடையாது.

சத்தியத்தை ஏற்றதன் பின் மார்க்கத்தை விட்டுவிலகிச் சென்றோர் யாவரும், தமது மதமாற்றத்தை பிரகடனப்படுத்தும் வரையில் இத்தண்டனைக்கு உட்படுவோர் அல்லர். இதனை அவர்கள் நன்கு தெரிந்து வைத்துள்ளார்கள். என்றாலும் அவர்கள் தங்களை இம்மார்க்கத்திலிருந்து வெளியேறிய சுதந்திரபுருஷர்களாக தன்னைக் காட்டிக்கொண்டு அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஏளனம் செய்து பரப்புரை செய்வதற்கு முஸ்லிம் சமூகம் வழி திறக்க வேண்டும் என்று அவர்கள் கோருவதுடன் மற்றவர்களை இறைமறுப்பு மற்றும் ஒழுக்கமின்மை போன்றவற்றிற்கு தூண்டுகிறார்கள். இவர்களின் இச்செயற்பாட்டிற்கு பின்வரும் உதாரணத்தைக் குறிப்பிடமுடியும். பூமியில் உள்ள

எந்த அரசனும் -ஆட்சியாளரும்- தனது இராட்சியத்தில், ஒரு அரசன் இருப்பதை ஏற்றுக்கொள்ளாதிருத்தல் அல்லது அவரை அல்லது அவரது பரிவாரங்களை கேலி செய்வது அல்லது அரசனின் பதவிக்கு பொருந்தாத ஒன்றை அவருக்கு கூறுவது போன்ற விடயங்களை எந்த அரசனாலும் ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு சாதாரண விடயமாகும். இது இவ்வாறிருக்க அரசர்களுக்கெல்லாம் அரசனும் யாவற்றையும் படைத்தவனுமாகிய இறைவனுக்கு எவ்வாறு பொருந்தும்

ஒரு முஸ்லிம் இறைநிராகரிப்புக்குரிய விடயங்களை செய்தால் அவருக்கு உடனே ரித்தத் மதமாற்றத்திற்கான தண்டனை அமுல் படுத்தப்படும் என்று சிலர் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அடிப்படையில் அவரை காபிராக (இஸ்லாத்தை விட்டு வெளியேறிவராக) கருதுவதற்கு அறியாமை, வியாக்கியானம், பலவந்தம், தவறு போன்ற பல நியாயமான காரணங்கள் தடையாக இருக்கலாம் என்பதே இது குறித்த சரியான கருத்தாகும். இந்த வகையில், பெரும்பாலான அறிஞர்கள் ஒரு முர்தத்திற்கு சத்தியத்தை அறிவதில் குழப்பம் ஏற்பட வாய்ப்பிருப்பதால் அவருக்கு தவ்பா செய்யுமாறு வலியுறுத்து கின்றனர். ஆனால் இத்தீர்ப்பிலிருந்து போராளியாக செயற்படும் முர்தத் விதிவிலக்களிக்கப் படுகிறார். அதாவது அவர் கொலை செய்யப்பட வேண்டும் என்பது முடிவாகும். (இப்னு குதாமா ரஹிமஹுல்லா தனது முஃனி என்ற நூலில் இதனை குறிப்பிட்டுள்ளார்). -முஸ்லிம்கள் நயவஞ்சகர்களை சக முஸ்லிம்களை நடத்துவது போல் நடாத்தினர், நபியவர்கள் அவர்களைப்பற்றி அறிந்திருந்தும் அவர்களுக்கு முஸ்லிம்களுக்கான அனைத்து உரிமைகளையும் வழங்கினார்கள். அவர்களின் பெயர்களை ஸஹாபி ஹுதைபாவுக்கு நபியவர்கள் தெரிவித்திருந்தார்கள். இருப்பினும், நயவஞ்சகர்கள் தங்கள் இறைநிராகரிப்பை பகிரங்கப்படுத்த வில்லை. இந்த நடை முறை இஸ்லாத்தை பகிரங்கமாக விமர்சிக்காது இருந்தால் அவர்களுக்கான உயிர் உத்தரவாதத்தை இஸ்லாம் வழங்குகிறது என்பது பொருளாகும்.

### *ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தனது எதிரிகளை எதிர்த்துப்ப போராடவில்லை. ஆக நபி முஹம்மத் அவர்கள் ஒரு போராளியாக இருந்தது ஏன்?*

மூஸா மற்றும் தாவூத் அலைஹிமஸ்ஸலாம் இருவரும் போராளிகளாக

இருந்தனர். மூஸாவும் முஹம்மதும் (அலைஹிமஸ்ஸலாம்) அரசியல் மற்றும் உலக விவகாரங்களில் பல பதவிகளை பொறுப்பேற்றிருந்தனர். இருவரும் சிலைவணக்கம் நிறைந்த சமூகத்தை விட்டு பாதுகாப்பான இடங்களுக்கு புலம் பெயர்ந்து சென்றனர். மூஸா நபி தனது சமூகத்தாருடன் எகிப்தைவிட்டு வெளியேறினார். தனது சொந்த தேசத்தின் அரசியல் மற்றும் இராணுவ ஆதிக்கத்தலிருந்து விடுபட்டு தனது மார்க்கத்தை பாதுகாக்க முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் யத்ரிபுக்கு -மதீனாவுக்குச்- சென்றார்கள். அதற்கு முன் தனது தோழர்கள் அபீஸீனியாவிற்கு ஹிஜ்ரத் செய்திருந்தனர். மூஸா மற்றும் முஹம்மத் ஆகியோரின் பிரச்சாரங்கள் எகிப்திலும் அரபு நாட்டிலும் காணப்பட்டன. அவ்விரண்டு சூழல்களும் விக்கிரக வழிபாட்டு சார்ந்த சூழலாகும். ஆனால் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரச்சாரம் சிலை வணங்கிகள் அல்லாத யூத சமூகத்திற்கானதாக இருந்தது. இதுவே ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரச்சாரம் சற்று வித்தியசப்படக் காரணம். அத்துடன் அவர் இருந்த சூழ்நிலையும் மிகக் கடினமானதாகக் காணப்பட்டது. மூஸா மற்றும் முஹம்மத் அலைஹிமஸ்ஸலாம் ஆகியோரின் பிரச்சாரப் பொறுப்பானது சிலை வணக்கத்திலிருந்து ஏகத்துவத்தின் பால் மாற்றுகின்ற மிகப்பாரியதும் அடிப்படையுமான ஒன்றாகக் காணப்பட்டது.

அத்துடன் இறைத்தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் காலத்தில் நடைபெற்ற போர்களில் பலியானோரின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டவில்லை. அக்காலத்தில் நடைபெற்ற போர்கள் யாவும் தற்காப்பு, அத்துமீறலைத் தடுத்தல் அல்லது மதத்தைப் பாதுகாத்தல் போன்றவற்றை நோக்காகக் கொண்டிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. அதே வேளை ஏனைய மதங்களில் மதத்தின் பெயரால் நடைபெற்ற போர்களில் பலியானோர் எண்ணிக்கை பல மில்லியன்களாகும்!

இறைத்தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கருணை மக்காவின் அதிகாரம் கிடைத்த அந்நாளில் வெளிப்பட்டது. அவ்வேளை அவர்கள் இன்றைய தினம் கருணையின் தினமாகும் எனக் கூறி முஸ்லிம்களுக்கு நோவினையும் தொல்லையும் கொடுப்பதில் அயராது ஈடுபாடுட்ட குறைஷியருக்கு பொது மன்னிப்பபை பிரகடனப்படுத்தி கௌரவப்படுத்தினார்கள். இதன் மூலம் உபத்திரத்திற்கு பதிலாக உபகாகரத்தையும்; கொடுமை செய்வதற்குப் பதிலாக

நல்ல முறையில் நடந்துகொள்வதையும் சன்மானமாக வழங்கினார்கள்.
அல்லாஹ் கூறுகிறான் :
"நன்மையும் தீமையும் சமமாக மாட்டா, நீங்கள் (தீமையை) நன்மையைக் கொண்டே தடுத்துக் கொள்வீராக! அப்பொழுது, யாருக்கும் உமக்கிடையே, பகைமை இருந்ததோ, அவர் உற்ற நண்பரே போல் ஆகிவிடுவார்". (புஸ்ஸிலத் : 34).

இறையச்சமுடையோரின் பண்புகளில் சிலவை குறித்து அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான் :

"கோபத்தை மென்று, மனிதர்களை மன்னிப்பவர்களாகவும் இருப்பார்கள். நன்மை செய்வோரை அல்லாஹ் நேசிக்கின்றான்". (ஆல இம்ரான் : 134).

## சரியான மார்க்கத்தை எத்தி வைத்தல்

### *ஜிஹாத் என்றால் என்ன?*

ஜிஹாத் என்பது பாவங்களை தவிர்ப்பதில் ஆன்மாவுடன் போராடுதலைக் குறிக்கும் மேலும் ஒரு தாய் தனது பிள்ளையை சுமக்கும் வேளை வலிகளை தாங்கிக் கொள்வது தாயின் ஜிஹாதாகும் ஒரு மாணவன் தனது கற்றலின் போது அயராது உழைப்பதும் ஜிஹாதாகும் தனது செல்வம் மானம் மார்க்கத்தை பாதுகாப்பதற்காக போராடுவதும் ஜிஹாதாகும். இவைகள் மாத்திரமின்றி தொழுகை நோன்பு போன்ற ஈபாதத்துகளில் -வணக்க வழிபாடுகளில்- அதற்குரிய நேரத்தில் தன்னை அயராது ஈடுபடுத்திக்கொள்வது ஜிஹாதின் வகைகளில் ஒன்றாக கருதப்படுகிறது.

ஆகவே ஜிஹாத் என்பதன் அர்த்தம் சிலர் விளங்கியிருப்பது போன்று முஸ்லிம் அல்லாத அப்பாவிகளையும், இணக்கப்பாட்டுடனும் சமாதானமாகவும் வாழுவோரையும் கொலை செய்தல் என்பதல்ல என்பதை நாம் புரிந்து கொள்கிறோம்.

இஸ்லாம் உயிரை மதிக்கும் மார்க்கமாகும். இதன் அடிப்படையில் சமாதானமாக வாழுவோர் மற்றும் சிவிலியன்களை கொலை செய்வதை தடை செய்வதுடன், போரின்போது கூட இவ்வாறானோரின் உடமைகளையும், குழந்தைகள் மற்றும் பெண்களையும் பாதுகாக்க வேண்டும் என வலியுறுத்துகிறது. அது மட்டுமல்லாது போரில் கொலைசெய்யப்பட்ட எதிரிகளின் உடல்களை சிதைத்தல் மற்றும் சித்திரவதை செய்தல் போன்றவற்றை கண்டிப்பதுடன் அவை இஸ்லாமியப் பண்பாடுகள் அல்ல என்பதை வலியுறுத்தி குறிப்பிடுகிறது.
அல்லாஹ் கூறுகிறான் :

"எவர்கள் மார்க்கவிடயத்தில் உங்களுடன் போரிடவில்லையோ அவர்களுக்கும் மேலும் உங்களை உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்ற வில்லையோ அவர்களுக்கும் நீங்கள் நன்மை செய்வதையும் அவர்களுடன்

நீங்கள் நீதியாக நடப்பதையும் அல்லாஹ் உங்களுக்கு தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதியாக நடப்பவர்களை நேசிக்கிறான். எவர்கள் மார்க்க விடயத்தில் உங்களுடன் போரிட்டு உங்களை உங்களது இல்லங்களை விட்டும் வெளியேற்றினார்களோ அவர்களையும் மேலும் உங்களை வெளியேற்றிட உதவி செய்தார் களோ அவர்களையும் நேசத்திற்குரியவர்களாக எடுத்துக் கொள்வதையே அல்லாஹ் உங்களுக்கு தடுக்கின்றான். அவர்களை யார் நேசர்களாக எடுத்துக்கொள்கிறார்களோ அவர்கள்தாம் அநியாயக்காரர்கள்". (அல் மும்தஹினா :8-9). "இதன் காரணமாகவே நிச்சயமாக எவன் கொலைக்குப் பகரமாகவோ அல்லத பூமியில் குழப்பம் விளைவிப்பதற்காகவோ அன்றி மற்றொரு ஆன்மாவை கொலை செய்கின்றானோ அவன் மனிதர்கள் அனைவரையும் கொலை செய்தவன் போன்றாவான். என்றும் எவன் ஒருவன் அதனை வாழ வைக்கின்றானோ அவன் மனிதர்கள் அனைவரையும் வாழ வைத்தவன் போலாவான் என்றும் இஸ்ராஈலின் சந்ததிகள் மீது நாம் விதித்தோம். நிச்சயமாக அவர்களிடம் நமது தூதர்கள் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தனர். பின்னர் நிச்சயமாக அவர்களில் அதிகமானோர் இதன் பின்பும் பூமியில் வரம்புமீறுவோராகவே இருந்தனர்". (மாஇதா : 32).

முஸ்லிம் அல்லாதோர் பின்வரும் நால்வரில் ஒருவராக இருப்பார் :

முஸ்தஃமன் : பாதுகாப்பு அளிக்கப்பட்டவர்.

அல்லாஹ் கூறுகிறான் :

"(நபியே!) இணைவைத்து வணங்குபவர்களில் எவனும் உம்மிடம் பாதுகாப்பைக் கோரினால், அல்லாஹ்வுடைய வசனங்களை அவன் செவியுறும்வரை அவனுக்கு பாதுகாப்பு அளிப்பீராக. (அவன் அதை செவியுற்றும் நம்பிக்கை கொள்ளாவிட்டால்) அவனை அவனுக்கு பாதுகாப்புள்ள (வேறு) இடத்திற்கு அனுப்பிவிடுவீராக! ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அறிவில்லாத மக்கள் ஆவர்". (அத்தவ்பா: 6).

முஆஹத் : முஸ்லிம்ளுடன் போர்செய்வதில்லை என உடன் படிக்கை செய்தவன்.

அல்லாஹ் கூறுகிறான் :

"(சத்தியம் செய்து) உடன்படிக்கை செய்து கொண்டதன் பின்னரும், அவர்கள் தங்கள் சத்தியங்களை முறித்து உங்கள் மார்க்கத்தைப் பற்றியும் தவறான

குற்றங்குறைகள் கூறிக்கொண்டிருந்தால், நிச்சயமாக நிராகரிக்கும் (இத்தகைய) மக்களின் வாக்குறுதிகள் முறிந்துவிட்டன. ஆகவே, (இத்தகைய விஷமத்திலிருந்து) அவர்கள் விலகிக்கொள்வதற்காக நீங்கள் நிராகரிப்பை உடைய (அந்த) தலைவர்களிடம் போர் புரியுங்கள். (அத்தவ்பா :12). திம்மீ அல்லது அஹ்லுத் திம்மா என்போர் : முஸ்லிம்களுக்கு வரி செலுத்துவதாக உடன்படிக்கை செய்தோர் ஆவர். அத்துடன் இவர்கள் தமது மார்க்கத்தை கடைப்பிடிப்பதற்கும் பாதுகாப்பை பெற்றுக் கொள்ளவதற்கும் ஈடாக சில நிபந்தனைகளை கடைபிடிக்க வேண்டும். இந்த வரியானது சாதாரண ஒரு தொகையாகும். அவர்களின் சக்திக்கேட்ப செலுத்துவர். அத்துடன் இத்தொகையானது இயலுமானோரிடம் மாத்திரமே பெறப்படும். போர் புரிவதற்கு இயலுமான பருவவயதை அடைந்த சுதந்திர ஆண்கள் மாத்திரம் தகுதி பெறுவர் மாறாக பெண்கள் பிள்ளைகள் புத்தி சுவாதீனமற்றவர்கள் இவ்வரிசெலுத்தலுக்குள் உட்படமாட்டார்கள். (ஸாகிரூன் என்பது இறைசட்டத்திற்கு கட்டுப்பட்டோர் என்ற கருத்தை தரும்). அதே வேளை இன்றைய நாளில் பல மில்லியன் கணக்கானோர் செலுத்தும் வரியானது அனைத்து தனிமனிதர்களையும் உள்ளடக்குவதோடு தங்களது விவகாரங்களை அரசு பராமறிக்கிறது என்பதற்காக மிகப்பெரும் தொகையை செலுத்துகின்றனர் அவர்கள் இந்த மனித சட்டங்களுக்கு உட்பட்டவர்களாக உள்ளனர்.
அல்லாஹ் கூறுகிறான் :

"(நம்பிக்கையாளர்களே!) வேதம் அருளப்பட்டவர்களில் எவர்கள் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் நம்பிக்கை கொள்ளாமல், அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் தடுத்தவற்றை தடுத்துக் கொள்ளாமலும், உண்மை மார்க்கத்தை தமது மார்க்கமாகக் கொள்ளாமலும் இருக்கின்றனரோ அவர்கள் சிறுமையடைந்தோராக (ஆள் வரி ) எனும் ஜிஸ்யாவை தமது கையால் வழங்கும் வரை அவர்களுடன் போராடுங்கள்". (அத்தவ்பா:29).

முஹாரிப் : அதாவது முஸ்லிம்களுக்கெதிராக போர்பிரகடனம் செய்தவன். இவனுக்கு எந்த உத்தரவாதமோ பாதுகாப்போ பொறுப்போ கிடையாது இவர்கள் குறித்து அல்லாஹ் பின்வரும் வசனத்தில் பிரஸ்தாபிக்கிறான் :

"(நம்பிக்கையாளர்களே! இந்நிராகரிப்பவர்களின்) குழப்பம் முற்றிலும்

நீங்கி, அல்லாஹ்வுடைய மார்க்கம் முழுமையாக நிலைபெறும் வரை (மக்காவாசிகளாகிய நிராகரிக்கும்) இவர்களுடன் போர் புரியுங்கள். (குழப்பம் செய்வதிலிருந்து) அவர்கள் விலகிக்கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குகிறான்". (அல் அன்பால் : 39). போர்பிரகடனம் செய்த பிரிவினர் என்பது எமக்கெதிராக போரடுவோரை மாத்திரமே குறிக்கும். ஆனால் இவர்களை கொலைசெய்யுமாறு அல்லாஹ் கட்டளை பிரப்பிக்கவில்லை. மாறாக போராடுமாறே பணித்துள்ளான். இரண்டிற்கும் மத்தியில் அதாவது கொலை செய்தல் போராடுதல் என்பதிற்கிடையில் மிகப்பெரிய வேறுபாடு உண்டு. போர் அல்லது சண்டை என்பது ஒரு போரளிக்கும் தனது உயிரைப் பாதுகாப்பதற்காக போரிடுபவருக்கு மத்தியில் நிகழும் சண்டையாகும். இதனை மனித சட்டங்கள் அனைத்தும் குறிப்பிடுகின்றன.

அல்லாஹ் கூறுகிறான் :
"உங்களை எதிர்த்து போர் புரிய முற்பட்டோரை அல்லாஹ்வுடைய பாதையில் நீங்களும் எதிர்த்து போர் புரியுங்கள். ஆனால், நீங்கள் அத்துமீறாதீர்கள். ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் அத்துமீறுபவர்களை நேசிப்பதில்லை" (அல்பகரா:190).

இந்தப் பூமியில் அல்லாஹ்வைத்தவிர வேறு இறைவன் கிடையாது என்று முழங்கும் ஓரிறைக்கொள்கை காணப்படவில்லை என்ற கூற்றை முஸ்லிம் அல்லாதவர்களிடமிருந்து நாம் அதிகம் செவிமடுக்கிறோம். இவ்வாறானோர் முஸ்லிம்கள் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிஸ்ஸலாம் அவர்களை வணங்குவதாகவும், கிறிஸ்துவர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை வணங்குவதாகவும், பௌத்தர்கள் கௌதம புத்தரை வணங்குவதாகவும் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். இந்த உலகத்தில் காணும் மதங்கள் யாவும் அவர்களின் உள்ளத்தில் காணப்படும் எண்ணங்களுடன் பொருந்தவில்லை.

இஸ்லாமிய வரலாற்றில் இடம் பெற்ற வெற்றிகளின் முக்கியத்துவம் பற்றி அறிவதற்கு பலரும் ஆவலுடன் எதிர்பார்த்திருப்பர். இந்த வெற்றிகள் யாவும் மார்க்த்தில் நிர்ப்பந்தம் கிடையாது எனும் வரையறைக்குள் ஏகதெய்வக் கொள்ளை பற்றிய தூதை மக்களுக்கு கொண்டு சேர்ப்பதை இலக்காக கொண்டிருந்தது.

அதே வேளை முஸ்லிம் அல்லாதோரின் கௌரவத்தை, புனிதங்களை மதித்து, அவர்கள் தங்கள் மதத்தை தொடர்ந்து கடைப்பிடித்தொழுகவும், பாதுகாப்பை வழங்குவதற்கும் ஈடாக அரசுக்கு அவர்களின் கடமைகளை நிறைவேற்ற அவர்களுக்கு வகை செய்வதினூடாக இது நிகழ்ந்தது. இவ்வாறான நிகழ்வுகள் வரலாற்றில் எகிப்து மற்றும் அந்தலுஸ் போன்ற தேசங்களிலும் மேலும் பல வெற்றிகளின் போதும் இடம்பெற்றது.

## *இஸ்லாம் தற்கொலை நடவடிக்கைளை அனுமதித்து அதற்காக அவர்களுக்கு சுவர்க்கத்தில் ஹூருல் ஈன் பெண்களை பரிசாக வழங்குகிறதா?*

உயிரை கொடையாய் அளித்தவன், உயிரைப்பெற்றவனிடம் அதனை அழித்துக்கொள்ளவும் எந்தக்குற்றமுமின்றி உள்ள அப்பாவிகளின் உயிர்களை துவம்சம் செய்யவும் உத்தரவு பிரப்பிப்பது தர்க்கரீதியாக ஏற்றுக்கொள்ள முடியாத விடயமாகும். உயிரை கொடையாய் அளித்த வல்லோன் இவ்வாறு கூறுகிறான்: "உங்களின் உயிர்களை நீங்களே மாய்த்துக்கொள்ள வேண்டாம்". (அந்நிஸா:29). - இவ்வசனமும் இதுபோன்ற அதிகமான வசனங்களும் மதத்திற்கோ அதன் நோக்கங்களுக்கோ தொடர்பில்லாத குழுக்களின் நலனுக்காக, புனிதங்களை மீறாமல், ஒருவரின் உயிரைப் பணயம் வைக்காமல் அல்லது அழிவுக்கு உட்படுத்திக் கொள்ளாமல், பழிவாங்குதல் அல்லது அத்துமீறலைத் தடுத்தல் போன்ற நியாயமான காரணங்களுக்காக அன்றி ஒரு உயிரைக் கொல்வதை தடைசெய்கிறது. இதுவே இந்த மகத்தான மார்க்கத்தின் உயரிய நெறிமுறையாகும். ஹூருல்ஈன் பெண்களை அடைந்துகௌ்ளல் எனும் குறுகிய நோக்கத்திற்காக மாத்திரம் சுவர்க்கம் நிறுவப்பட வில்லை. சுவர்க்க இன்பம் என்பது கண்கள் காணாத, காதுகள் கேட்டிராத, எந்த மனிதனின் உள்ளத்திலும் உதித்திராத பேரின்பமாகும்.

பொருளாதார சூழ்நிலைகள், திருமணம் முடிப்பதற்கு தேவையான பொருட்களை பெற்றுக்கொள்ள முடியாமை போன்ற நெருக்கடிக்குள் சிக்கித்தவிக்கும் இன்றைய இளைஞர்களே இச்சிந்தனையை ஊக்குவிப்போரின் பசப்பு வார்த்தையில் மயங்கி இவ்வாறான ஈனத்தனமான செயற்பாடுகளில் ஈடுபடுவதற்கு முன்செல்கிறார்கள். குறிப்பாக போதைப்பொருளுக்கு

அடிமையானோர் மற்றும் மனக்குழப்பத்திற்கு ஆற்பட்டோர் இதில் அடங்குவர். ஆக,இவ்வாறான கருத்தை ஊக்குவிப்போர் உண்மையாளர்களாக இருந்தால் இப்பணிக்காக இளைஞர்களை அனுப்பமுன் தாங்களே இதனை செய்வதற்கு முன்வர வேண்மல்லவா.!

### *இஸ்லாம் வாளால் பரவியதா?*

முதலாவது வாள் என்ற வார்த்தை அல்குர்ஆனில் ஒரு தடவையேனும் குறிப்பிடப்படவில்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இஸ்லாமிய வரலாற்றில் போரே நிகழாத நாடுகளில்தான் உலக முஸ்லிம்களின் பெருந்தொகையினர் வசித்து வருகின்றனர். இதற்கு இன்துநேஷியா, இந்தியா, ^+னா போன்ற நாடுகள் சிறந்த உதாரணமாகும். முஸ்லிம்கள் வெற்றிகொண்ட தேசங்களில் இன்றுவரையில் கிறிஸ்தவர்களும் இந்துக்களும் ஏனையோரும் வாழ்ந்து வருவது, இஸ்லாம் வாளால் பரப்பபடவில்லை என்பதற்கான சான்றாகும். அதே வேளை முஸ்லிம் அல்லாதோரால் காலணித்துவத்திற்கு உட்பட்ட நாடுகளில் முஸ்லிம்கள் சிறு தொகையினரே உள்ளனர். கூட்டுப் படுகொலையும், சிறியோர் முதல் பெரியோர் வரை அனைவரையும் தமது மதத்தை ஏற்குமாறு பலவந்தப் படுத்தியமையும் இதற்குக் காரணமாகும். சிலுவைப்போர் இதற்கு சிறந்த உதாரணமாக காணப்படுகிறது. ஜெனீவா பல்கலைக்கழகத்தின் இயக்குனர் எட்வார்ட் மான்டெட் தமது விரிவுரையொன்றில் இவ்வாறு கூறினார்: ‘இஸ்லாம் ஒரு வேகமாக பரவி வரும் மதம், இது நிறுவனமயப்படுத்தப்பட்ட அமைப்புகளின் எந்த ஊக்குவிப்பு ஏதுமின்றி தானாகவே பரவுகிறது. ஏனென்றால், ஒவ்வொரு முஸ்லிமும் இயல்பிலேயே மதப்பிரச்சாரகர்களாவர். முஸ்லிமைப் பொருத்தவரை அவர்; இறைவிசுவாசத்தில் மிகவும் உறுதியானவர். அவருடைய இறைவிசுவாசத்தின் பலமானது அவரது இதயத்தையும் பகுத்தறிவையும் ஆகர்சித்துள்ளது. இது ஏனைய மதத்தில் உள்ள ஒருவருக்கு இல்லாத இஸ்லாத்திற்கேயுரிய ஒரு தனித்துவமாகும். இதன் காரணமாக இறைவிசுவாசத்தால் ஆகர்ஷிக்கப்பட்டு ஈமான் நிரம்பிய ஒரு முஸ்லிம் எங்கு சென்றாலும், எங்கு தங்கினாலும் தனது மதத்தைப் பிரச்சாரம் செய்பவராகவே திகழ்வார். அத்துடன் இவ்வாறான பலமான இறைவிசுவாசமிக்க முஸ்லிமுடன் தொடர்பு கொள்ளும் பலதெய்வ விசுவாசிகளிடத்திலும் இந்த நம்பிக்கை

சென்றடையும். இறைநம்பிக்கையுடன் சேர்த்து, இஸ்லாம் சமூக மற்றும் பொருளாதார நிலைமைகளுடன் இணைந்து செல்வதுடன், இந்த பலமான மார்க்கம் வேண்டிநிற்கும் சூழலுக்கு ஏற்ப தன்னை அனுசரித்து, இம்மார்க்கம் வாழும் சூழலை மாற்றியமைக்கும் அற்புதமான திறனையும் கொண்டுள்ளது'. (நூல் ஹதீகா ஆசிரியர் :ஸுலைமான இப்னு ஸாலிஹ் அல் கராஷி).

## இஸ்லாமிய கருத்தியல் (சித்தாந்தம்) :

### *இஸ்லாத்தில் புனிதர்கள் மற்றும் சான்றோர் என விசேடமான ஆன்மீக வாதிகள் உள்ளனரா? முஹம்மது நபியின் தோழர்களை ஒரு முஸ்லிம் புனிதப்படுத்துவாரா?*

ஒரு முஸ்லிம் சான்றோரினதும், இறைதூதரின் தோழர் வழியையும் பின்பற்றி நடப்பதுடன், இவ்வாறான புனிதர்களை நேசித்து, இவர்களைப் போன்று நல்லவராக இருக்க வேண்டு என முயற்சி செய்து அவர்கள் நடந்து கொண்டது போல் அல்லாஹ்வை மாத்திரம் வணங்க வேண்டும். ஆனால் அவர்களை கடவுளின் நிலைமையில் வைத்து புனிதப்படுத்துவதோ, அல்லாஹ்வுக்கும் அவருக்கும் இடையில் ஒரு இடைத்த தரகராக வைத்துக் கொள்வதோ கூடாது.
அல்லாஹ் கூறுகிறான் :

“அல்லாஹ்வையன்றி எங்களில் சிலர் சிலரை கடவுளர்களாக எடுத்துக் கொள்ளவும்மாட்டோம்”. (ஆல இம்ரான் : 64).

### *ஷீஆக்கள் மற்றும் ஸுன்னிகளுக்கிடையிலான வித்தியாசம் என்ன?*

முஹம்மத் நபி அவர்கள் ஸுன்னியாகவோ ஷீஆவாகவோ இருக்கவில்லை. மாறாக சத்தியமார்க்கத்தைப் பின்பற்றி நடக்கும் ஒரு உண்மை முஸ்லிமாகவே இருந்தார். ஈஸா அவர்கள் ஒரு கத்தோலிக்கராகவே, அல்லது வேறு எந்தவொன்றின் அங்கத்தவராவோ இருக்கவில்லை. இவர்கள் இருவரும் எந்த தரகரும் இல்லாது இறைவனை (அல்லாஹ்வை) மாத்திரம் வணங்கும் உண்மை முஸ்லிம்களாகவே இருந்தனர். ஈஸா (அலை) அவர்கள் தன்னையோ தனது தாயையோ வணங்குபவராக இருக்கவில்லை. அதே போன்று முஹம்மத் நபியும் தன்னையோ தனது பெண்பிள்ளையையோ, அல்லது தனது மகளின் கணவரையோ வணங்குபவராக இருக்கவில்லை. அரசியல் பிரச்சினைகளும், சரியான மார்க்க வழிமுறைகளை விட்டு நெறிபிரழ்ந்து சென்றமையும், மற்றும் வேறு பல காரணங்களின் விளைவாக இஸ்லாமிய வரலாற்றில் வழிகெட்ட

பிரிவினர் தோன்றத்தான் செய்தன. இப்பிரிவுகளுக்கும், தெளிவான மற்றும் மிகவும் எளிய மார்க்கமாகிய உண்மை மார்க்கத்திற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. பொதுவாக எல்லா சந்தர்ப்பத்திலும் 'ஸுன்னா' எனும் வார்த்தையானது நபியவர்களின் வழிமுறையை முழுமையாக பின்பற்றுதல் என்ற கருத்தையே குறித்து நிற்கிறது. 'ஷீஆ' எனும் வார்த்தை பொது முஸ்லிம்கள் பின்பற்றி நடக்கும் வழிமுறைகளிலிருந்து பிரிந்து சென்ற மக்கள் குழுவைக் குறிக்கும். அத்துடன், 'ஸுன்னி முஸ்லிம்கள்' தூதரின் வழிமுறையைப் பின்பற்றுவோராகவும், பொதுவாக அனைத்து விவகாரங்களிலும் இஸ்லாத்தின் சரியான அணுகுமுறையைப் பின்பற்றிச் செல்வோராகவும் உள்ளனர். ஆனால் ஷியாக்களோ இஸ்லாத்தின் சரியான அணுகுமுறையிலிருந்து விலகிய ஒரு பிரிவினர்.

அல்லாஹ் கூறுகிறான் :

"எவர்கள் தனது மார்க்கத்தைப் பிரித்து பல பிரிவினர்களாக ஆனார்களோ அவர்களின் எவரிடத்திலும் நீர் இல்லை. அவர்களின் விடயம் அல்லாஹ்விடமே உள்ளது. பின்னர் அவர்கள் செய்து கொண்டிருந்தவை பற்றி அவர்களுக்கு அவன் அறிவிப்பான்". (அல் அன்ஆம்: 159).

### *இஸ்லாத்தில் இமாம் என்பவர் கிறிஸ்துவ மதத்தில் பாதிரியைப் போன்றவரா?*

இமாம் என்ற வார்த்தையின் அர்த்தம், மக்களுக்கு தொழுகை வழிபாட்டை முன்னின்று நடத்துபர் அல்லது அவர்களின் விவகாரங்களில் தலைமை தாங்கி வழி நடத்துபவரையும் குறிக்கும் ஒரு சொல்லாகும். இது குறிப்பிட்ட நபர்களுக்கு மாத்திரம் வரையறுக்கப்பட்ட, அல்லது மட்டுப்படுத்தப்பட்ட மத அந்தஸ்த்து -தகுதி- கிடையாது. மார்க்கம் அனைவருக்குமானது என்ற வகையில் இஸ்லாத்தில் வர்க்கமோ அல்லது புரோகிதமோ (சமயகுருப்பதவியோ) இல்லை. குறிப்பு : பொதுவாக இது பள்ளிவாசலில் வழிபாடு நேரத்தில் வழிபாட்டை தலைமை ஏற்று நடத்துபவரையும் நாட்டுத் தலைமையையும் குறிக்கும் ஒரு சொல்லாகும். மேலும் இமாம் என்பவர் தொழுகையை நடத்துபவர் மட்டுமல்லாமல் மதத் தலைவராகவும், மதம் தொடர்பான விடயங்களை ஆளமாக கற்று மக்களுக்கு அவற்றை கற்றுக்கொடுப்பவராகவும் இருப்பார். இஸ்லாத்தில் மனிதர்கள் யாவரும் அல்லாஹ்வின் முன் ^+ப்பின் பற்களைப்போல் சமமானவர்கள்.

ஆகையால் இறையச்சம் நற்செயல் ஆகியவைகளின் மூலமேயன்றி, அரபி,அரபி அல்லாதவர் என்ற வேறுபாடுகிடையாது. மக்களுக்கு தொழுகை நடாத்துவதற்கு மிகவும் தகுதியானவர் அல்குர்ஆனில் பெரும் பகுதியை மனனம் செய்தவரும், தொழுகை வழிபாட்டுடன் தொடர்பான சட்டதிட்டங்களில் கட்டாயம் அறிந்திருக்க வேண்டியவற்றை கற்றறிந்தவருமாவார். முஸ்லிம்களிடத்தில் ஒரு இமாம் எவ்வளவு மதிப்புக்குரியவராக இருந்தாலும் பாதிரியாரைப் போன்று அவரால் பாவ ஒப்புதல் வாக்குமூலத்தை ஏற்கவோ பாவங்களை மன்னிக்கவோ முடியாது. அல்லாஹ் கூறுகிறான் :

"இவர்கள் அல்லாஹ்வைத் தவிர்த்து தங்கள் பாதிரிகளையும், சந்நியாசிகளையும், மர்யமுடைய மகன் மஸீஹையும், (தங்கள்) கடவுள்களாக எடுத்துக் கொண்டிருக்கின்றனர். எனினும், வணக்கத்திற்குரிய ஒரே ஓர் இறைவனைத் தவிர மற்றெவரையும் வணங்கக் கூடாதென்றே இவர்கள் அனைவரும் ஏவப்பட்டு இருக்கின்றனர். வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர (வேறெவனும்) இல்லை. அவர்கள் இணைவைக்கும் இவற்றைவிட்டு அவன் மிகவும் பரிசுத்தமானவன்". (அத்தவ்பா : 31). நபிமார்கள் தங்களுக்கு அல்லாஹ்விடமிருந்து எத்திவைக்கப்பட்ட விடயங்களில் தவறுசெய்வதிலிருந்து பாதுகாக்கப்பட்டவர்கள் என இஸ்லாம் வலியுறுத்துவதுடன், மதப்புனிதருக்கோ அல்லது பாதிரிக்கோ இறைவெளிப்பாடு –வஹ்யு- மற்றும் தவறுகளிருந்து பாதுகாப்பு என்ற நிலை கிடையாது என்றும் குறிப்பிடுகிறது. உதவிதேடுதல், கோரிக்கை ஒன்றை முன்வைத்தல் போன்ற விடயங்களில், குறித்த வேண்டுதல் நபிமார்களிடத்திலாயினும் அல்லாஹ் அல்லாதோரை நாடுதல் இஸ்லாத்தில் முற்றாக தடை செய்யப்பட்ட விடயமாகும். ஏனெனில் தன்னிடம் இல்லாத ஒன்றை எவருக்கும் கொடுக்கமுடியாது அல்லவா!. தனக்கே உதவிக்கொள்ள இயலாத நிலையில், ஒரு மனிதன் பிறரிடம் உதவியை தனக்கென எவ்வாறு கோர முடியும்? இறைவனிடம் உதவி கோரல் உயர்வாகும். அவன் அல்லாதோரிடத்தில் உதவி கோருவது இழிவாகும். ஒரு வேண்டுதலை அரசனிடத்தில் முன்வைப்பதும், சாமான்ய மக்களிடத்தில் முன்வைப்பதும் சமமானது என்பது பகுத்தறிவுக்குட்பட்ட ஒரு விடயமாகுமா? ஆக இந்த கருத்தை பகுத்தறிவும் தர்கவியலும் முற்றாக நிராகரிக்குமல்லவா!? அல்லாஹ்வி (கடவுளி) ன் இருப்பை விசுவாசித்து அவன் அனைத்து விடயங்களிலும் வல்லமை படைத்தவன் என்ற கோட்பாட்டுன் அவன்

அல்லாதோரிடம் வேண்டுதலை முன்வைப்பது ஒரு வகை சிறுமைத்தனமாகும். இது இஸ்லாத்திற்கு முரணான இணைவைத்தல் எனும் மிகப்பெரும் குற்றமாகும். அல்லாஹ் தனது தூதரின் வார்த்தையின் மூலம் இவ்வாறு பிரஸ்தாபிக்கிறான் :

"(மேலும், நபியே) நீர் கூறுவீராகஃ "அல்லாஹ் நாடினாலே தவிர நான் எனக்கு ஒரு நன்மையையோ தீமையையோ செய்து கொள்ள சக்தி பெறமாட்டேன். நான் மறைவானவற்றை நான் அறிந்தவனாக இருந்திருந்தால், நன்மைகளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன், தீமை என்னைத் தொட்டிருக்காது, நான் விசுவாசங்கொண்ட சமுதாயத்தினருக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், நன்மாராயங் கூறுபவனுமேயன்றி வேறில்லை".(அல்அஃராப் : 188).

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :

"நான் உங்ளைப் போன்ற மனிதன்தான், (உண்மையாகவே) வணங்கப்படத்தகுதியான உங்கள் இரட்சகன் ஒருவனே என்று எனக்கு வஹி அறிவிக்கப்படுகிறது. என நபியே கூறுவீராக. எவர் தனது இரட்சகனை சந்திப்பதை ஆதரவு வைக்கிறாரோ அவர் நல்லறம் செய்யட்டும், மேலும் தனது இரட்சகனின் வணக்கத்தில் எவரையும் இணையாக்காதிருக்கட்டும்". (கஹ்ஃப் : 110). "நிச்சயமாக பள்ளிவாசல் (மஸ்ஜிது) களெல்லாம், அல்லாஹ்வை வணங்குவதற்காக உள்ளன. ஆகவே, (அவற்றில்) அல்லாஹ்வுடன் மற்றெவரையும் (பெயர் கூறி) அழைக்காதீர்கள்". (ஜின் : 18).

## *நபி மற்றும் ரஸூலுக்கிடையிலான வித்தியாசம் யாது?*

நபி என்பவர் இறைவெளிப்பாட்டை (வஹியை) பெற்றவர், புதிய ஒரு தூதுத்துவத்தையோ அல்லது வழிமுறையையோ கொண்டுவரவில்லை அர்ரசூல் என்ற இறைத்தூதர் தமது சமூகத்தாருக்கு பொருத்தமான வழிமுறை மற்றும் சட்டதிட்டங்களுடன் அல்லாஹ்வால் அனுப்பட்டவரைக் குறிக்கும். குறிப்பு: மேற்குறிப்பிட்ட இரு சொற்களும் இறை ஆணையை –தூதை- இவ்வுலகில் மக்களுக்கு எத்திவைப்பதற்காக அனுப்பபட்ட இறைவனால் தெரிவு செய்யப்பட்ட மனிதப் பிரதிநிதிகளைக் குறிக்கும். நபி மூஸாவிற்கு தவ்ராதும், நபி ஈஸாவிற்கு இன்ஜீலும், நபி முஹம்மதிற்கு அல்குர்ஆனும், நபி இப்ராஹிமிற்கு ஸுஹுபுகளும், நபி தாவுதிற்கு ஸபூர் வேதமும் இறக்கியருளப்பட்டதை இதற்கு உதாரணமாக்

கூறலாம்.

***அல்லாஹ், மனிதர்களுக்கு வானவரை தூதராக அனுப்பாது மனிதர்களிலிருந்தே தூதுவர்களை தேர்வு செய்து அனுப்பியது ஏன்?***

மனிதர்களுக்கு பொருத்தமானவர் அவர்களைப்போன்று தங்களுடன் அவரவர் மொழியில் பேசி அவர்களுக்கு முன்மாதிரியாக இருப்பவராவார். மனித இயல்பிற்கு அப்பாற்பட்ட வானவரை ஒரு தூதராக அவர்களுக்கு அனுப்பி, அவர்களுக்கு சிரமமான காரியங்களை செய்திருந்தால் வானவர் செய்யும் காரியத்தை தங்களால் செய்ய முடியாது என நியாயம் கூறி அவர் கொண்டு வந்த தூதை நிராகரித்து விடுவர்.

அல்லாஹ் கூறுகிறான் :
"(அதற்கு) நீர் கூறுவீராகஃ பூமியில் (மனிதர்களுக்குப் பதிலாக) வானவர்களே வசித்திருந்து, அதில் அவர்கள் நிம்மதியாக நடந்து திரிந்து கொண்டுமிருந்தால் நாமும் வானத்திலிருந்து (அவர்கள் இனத்தைச் சார்ந்த) ஒரு வானவரையே (நம்) தூதராக அவர்களிடம் அனுப்பியிருப்போம். (ஆகவே, மனிதர்களாகிய அவர்களிடம் மனிதராகிய உம்மை நம் தூதராக அனுப்பியதில் தவறொன்றுமில்லை.)". (அல் இஸ்ராஃஃ 95). "(அல்லது நம்) தூதரை ஒரு மலக்காகவே அனுப்புவதாயினும் (அவர்களுக்கு வானவர்களைக் காணும் சக்தி இல்லாததனால்) அவரையும் ஒரு மனிதனுடைய ரூபத்தில்தான் நாம் அனுப்புவோம். இன்னும் அவர்கள் குழம்பிக் கொள்ளும் விடயத்தில் அப்பொழுதும் அவர்களுக்கு நாம் குழப்பத்தை ஏற்படுத்தியிருப்போம்". (அல்அன்ஆம் :9). -

வஹியின் (இறைச்செய்தியின்) ஊடாக தனது படைப்புகளுடன் படைப்பாளான அல்லாஹ் தொடர்புகொள்வதற்கான ஆதாரம் என்ன?

வஹியின் மூலம் தனது படைப்புகளுடன் அல்லாஹ் தொடர்பு கொள்கிறான் என்பதற்கான சில சான்றுகள் :

1. 1- ஞானம்ஃ அறிவு : உதாரணத்திற்கு ஒரு மனிதன் வீடோன்றை கட்டி தானோ அல்லது பிறரோ அல்லது தனது பிள்ளைகள் கூட பயன் பெறாது அதனை

விட்டுவிட்டால், இயல்பாகவே நாம் அவரைப் பார்த்து அறிவில்லாதவர் அல்லது நல்லவர் அல்லர் எனக் தீர்ப்பளித்து விடுவோம். ஆனால் அல்லாஹ் மிக உயர்வானவன். எல்லோருக்கும் முன்மாதிரிமிக்கவன். அந்தவகையில் இந்தப் பிரபஞ்சத்தை படைத்து, வானங்கள் மற்றும் பூமியில் உள்ளவற்றை மனிதனுக்கு வசப்படுத்திக் கொடுத்ததில் அவனின் நுட்பத்தையும் மிகப்பெரும் ஞானத்தையும் மிகத் தெளிவாக அறியமுடியுமாக உள்ளது.

2. இயல்பூக்கம் : தனது அடிப்படையையும், இருப்பின் மூலத்தையும், நோக்கத்தையும் அறிவதற்கான ஒரு வலுவான உள்ளார்ந்த தூண்டுதல் மனித ஆன்மாவினுள்ளே காணப்படுகிறது. அதையே நாம் பித்ரா என்று குறிப்பிடுகிறோம். மனித (ஃபித்ரா) இயல்பூக்கமானது எப்போதும் அவனது இருப்புக்கான காரணத்தைத் தேடத் தூண்டுகிறது. என்றாலும், ஒரு மறைமுக சக்தியின் தலையீடு இல்லாது மனிதனால் மாத்திரம் தனது படைப்பாளனின் பண்புகளையும், தனது இருப்பின் நோக்கத்தையும், இறுதி முடிவையும் அறிந்து கொள்ள முடியாது. இதனை தூதர்களை அனுப்புவதினூடகவே தெளிவுபடுத்த முடியும்.

மக்களில் அதிகமானோர் தூதுத்துவங்களில் -இறை வேதங்களிலிருந்து- தமது கொள்கைக்கான பாதையை தேடிக் கொள்வதை நாம் காணுகிறோம். அதே வேளை ஏனைய மக்கள் வழிகேட்டிலிருந்து கொண்டு சத்தியத்தை தேடிக்கொண்டிருக்கின்றனர். இவ்வாறானோரின் சிந்தனை சடரீதியிலான உலகியல் சார் அடயாளங்ளுடன் நின்று விடுகின்றன.

3. பண்பாடுகள் : எமக்கு நீர் குடிக்க வேண்டும் என்ற தாக உணர்வானது நாம் அது இருப்பதை தெரிந்து கொள்ள முன் அது இருப்பதாக ஏற்றுக்கொள்ளும் போது, அதே போன்றுதான் நீதிக்கும் நேர்மைக்குமான எமது அவாவானது, நீதியாளன் ஒருவன் இருக்கிறான் என்பதற்கான சான்றாகும்.

மனிதன் இவ்வுலக வாழ்வில், மனிதர்களில் சிலர் சிலருக்கு அநியாயம் இழைக்கும் ஈனச்செயல்களை கண்கூடாக காண்கிறான். ஆனால் இவ்வாறு காணும் அவன் அநியாயம் இழைப்பவன் தப்பித்து, அநியாயத்திற்குட்பட்டவனின்

உரிமை பரிக்கப்பட்ட நிலையில் அவனின் வாழ்வு முடிந்து விடும் என்று அவன் ஒரு போதும் ஏற்றுக்கொள்வதில்லை. அதாவது அநியாயக்காரன் தண்டிக்கப்பட வேண்டும், அநியாயத்திற்கு உட்பட்டவனுக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்றே விரும்புவான். இது ஒரு சாதாரண சாமானியனின் விருப்பமாகும். இவ்வாறான நிலையில், மரணத்தின் பின் மீண்டும் மனிதன் உயிர்த்ததெழுதல், மரணத்திற்கு பிந்திய மறுமை வாழ்வு, பழிதீர்த்தல் போன்றவை இருக்கிறது என்ற ஒரு சிந்தனை ஒருவனுக்கு முன்வைக்கப்படுமாயின் அவன் மனநிம்மதியையும், மனஅமைதியையும் உணர்வான். மனிதன் தனது வினைக்காக –செயல்களுக்காக நிச்சயம் விசாரிக்கப்படுவான். ஆகையால் அவன் எந்த வழிகாட்டலோ, அறிவுறுத்தலோ, அல்லது ஆர்வமூட்டல் மற்றும் அச்சமூட்டலோ இன்றி அவனை விட்டுவிட முடியாது. இதுவே மனித குலத்திற்கான மதத்தின் பங்களிப்பாகும். அதே போன்று தற்போது காணப்படும் விண்லோக இறை மார்க்கங்களின் இருப்பானது, அதனை பின்பற்றுவோர் அதன் மூலம் தெய்வீகத்தன்மை வாய்ந்தது என உறுதியாக நம்புகின்றனர். இதுவும் படைப்பாளன் மனிதனுடன் தொடர்பு கொள்வதற்கான நேரடி ஆதாரமாகக் கருதப்படுகிறது. இறைவேதங்களையும், இறைவனால் மக்களுக்கு வழிகாட்ட தூதுவர்கள் அனுப்பப்படுதலையும் நாத்திகர்கள் மறுத்தாலும் கூட, அவர்களின் இருப்பும், உயிர்வாழ்வும் ஒரு பேருண்மைக்கான சான்றாக அமையப்போதுமானது. அதாவது மனிதன் இறைவனுடன் தொடர்போடு இருத்தல், இயல்பூக்கத்தின்-ஆன்மீகத்- தேவையை நிறைவேற்றுவது போன்ற அவனின் கட்டற்ற விருப்பமாகும்.

## இஸ்லாமும் கிறிஸ்தவமும் :

### *முதல் தவறு குறித்த இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

தடை செய்யப்பட்ட மரத்தின் கணியை சாப்பிட்டதின் காரணமாக மனித குலத் தந்தை ஆதத்தின் தவ்பாவை ஏற்றுக்கொண்டதன் மூலம் மனிதனுக்கு மிகப்பெரும் பாடத்தைக் கற்றுத்தருகிறான். அதுதான் மனித குலத்தின் இரட்சகன் அல்லாஹ் மனிதர்களுக்கு வழங்கிய முதல் மன்னிப்பாகும். ஒருவரின் பாவத்தை -குற்றத்தை- இன்னொருவர் சுமக்க மாட்டார் என்ற அடிப்படையில் கிறிஸ்துவர்கள் நம்பிக்கொண்டிருக்கும் ஆதமிடமிருந்து அனந்தரமாக பெற்ற பாவம் என்ற நம்பிக்கைக்கு எந்த அர்த்தமும் கிடையாது. ஆகவே ஒவ்வொரு மனிதரும் அவரவர் பாவத்தையே சுமக்கிறார். இது இறைவன் எம்மீது செய்த கருணையாகும். அதாவது மனிதன் எவ்விதக்குற்றமும் பாவமுமின்றி தூய்மையாகவே பிறக்கிறான். அவன் பருவ வயதை அடைந்ததிலிருந்தே அவனின் செயலுக்கு வகைகூறுபவனாக மாறுகிறான். ஒரு மனிதன் அவன் செய்யாத குற்றத்திற்கு விசாரிக்கப்படவும் மாட்டான். அதே போல் இறைவிசுவாசம் மற்றும் நற்செயல் இன்றி ஒரு போதும் வெற்றியடையவும் முடியாது. அல்லாஹ் மனிதனுக்கு உயிரை -வாழ்க்கை- கொடுத்து, அவனை சோதிப்பதற்காகவும், பரீட்சிக்கவும் வேண்டி விருப்பத்தை- நாட்டத்தை வழங்கினான். எனவே அவனின் நடவடிக்கைகளுக்கு அவன் மாத்திரமே பொறுப்புக்கூறக் கூற வேண்டியவனாக உள்ளான்.
அல்லாஹ் கூறுகிறான் :

"எந்த ஒர் ஆன்மாவும் மற்றதன் பாவச் சுமையை சுமக்காது, பின்னர் உங்கள் மீளுதல் உங்கள் இரட்சகனிடமே உள்ளது. அப்போது நீங்கள் முரண்பட்டுக் கொண்டிருந்தவைப் பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான். (அஸ்ஸுமர்:7).
மேலும் பழைய ஏற்பாட்டில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது :

"குழந்தைகளுக்காக பெற்றோர் கொல்லப்படமாட்டார்கள், பெற்றோர்களுக்காக குழந்தைகள் கொல்லப்படமாட்டார்கள், ஒவ்வொருவரும் அவரவர் பாவத்திற்காக -குற்றத்திற்காக- வே கொல்லப்படுவார்". (உபாகமம் :

24:16).
மன்னிப்பு நீதியுடன் முரண்படமாட்டாது. அதே போல் நீதியானது மன்னிப்பையும் கருணையையும் தடுத்திடவுமாட்டாது.

## *ஏசு சிலுவையில் அறையப்பட்ட நிகழ்வு பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

சிருஷ்டிகர்த்தாவான இறைவன் நித்திய ஜீவன், எல்லாவற்றையும் நிர்வகிப்பவன், எவ்விதத் தேவையுமற்றவன், சக்கியுள்ளவன். இவ்வாறான பண்புகளைப் பெற்றவனுக்கு, கிறிஸ்தவர்கள் நம்பிக் கொண்டிருப்பது போல் மனிதர்களுக்காக இயசுவின் தோற்றத்தில் ஒருவரை பிரதிபலிக்கச் செய்து அவரை சிலுவையில் அறைந்து மரணிக்கச் செய்யவேண்டும் என்ற எந்தத் தேவையும் அவனுக்குக் கிடையாது. அவனே உயிரைக் கொடுக்கிறான், மேலும் அதனை பரிக்கவும் செய்கிறான், இதனால் அவன் ஒரு போதும் மரணிப்பதில்லை. அதே போன்று மீண்டும் உயிர்த்தெழுவதுமில்லை. அவனின் தூரதர்களான இப்ராஹீமை நெருப்புக் குண்டத்திலிருந்தும், மூஸாவை பிர்அவ்ன் மற்றும் அவனின் படைகளிடமிருந்து காப்பாற்றியது போல் அவனின் தூதரான இயேசுவையும் கொலை மற்றும் சிலுவையில் அறையப் படுவதிலிருந்து அவனே காப்பாற்றினான். இவ்வாறே அல்லாஹ் தனது நல்லடியார்களை எப்போதும் பாதுகாத்த வண்ணம் உள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“மேலும், ‘‘அல்லாஹ்வுடைய தூதர், மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை நிச்சயமாக நாம் (சிலுவையில் அறைந்து) கொலை செய்துவிட்டோம்’’ என்று அவர்கள் கூறியதனாலும், (அவர்களைச் சபித்தோம்). அவரை அவர்கள் கொலை செய்யவும் இல்லை. அவரை அவர்கள் சிலுவையில் அறையவும் இல்லை. (அவர் இருந்த அறைக்குள் அவரைத் தேடிச் சென்றவன் அவரைப்போல் ஆக்கப்பட்டு விட்டான். தேடிச்சென்ற மற்றவர்கள் அவனையே சிலுவையில் அறைந்தனர். இதனால்) அவர்கள் சந்தேகத்திற்கு உள்ளாக்கப்பட்டு விட்டனர். ஆகவே, எவர்கள் இதற்கு மாறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களோ அவர்கள் வீண் சந்தேகத்திலேயே ஆழ்ந்துவிட்டனர். வீண் சந்தேகத்தைப் பின்பற்றுவதைத்

தவிர அதில் அவர்களுக்கு உண்மையான ஞான (ஆதார)ம் கிடையாது. நிச்சயமாக அவர்கள் அவரைக் கொலை செய்யவே இல்லை". எனினும், அல்லாஹ் அவரைத் தன் அளவில் உயர்த்திக்கொண்டான். அல்லாஹ் (அனைவரையும்) மிகைத்தவனாக, ஞானமுடையவனாக இருக்கிறான்". (அந்நிஸா : 157-158) .

### *முஸ்லிம் தனது பெண்பிள்ளையை யூதருக்கோ, அல்லது கிறிஸ்தவருக்கோ திருமணம் முடித்துக்கொடுக்காதது ஏன்?*

ஒரு முஸ்லிம் கணவர் தனது கிறிஸ்தவ அல்லது யூத மனைவியையும் அவளின் வேதத்தையும், அவளின் தூதரையும் மதித்து நடப்பார். இதன் மூலமே அவரின் இறைவிசுவாசம் உறுதிப் படுத்தப்படுகிறது. மேலும் தனது மனைவி மார்க்கக்கிரிகைகளை செய்வதற்கான சுதந்திரத்தையும் வழங்குவார். ஆனால் இதற்கு மாற்றமாக ஒரு முஸ்லிம் பெண் இவ்வாறு நடந்து கொள்வது இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்டதல்ல. மாறாக எப்போது ஒரு கிறிஸ்தவர் அல்லது யூதர் அல்லாஹ்வைத் தவிர உண்மையாக வணங்கப்படக்கூடியவன் வேறுயாறும் கிடையாது என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என்றும் நம்பி ஏற்றுக் கொள்கிறாரோ அவருக்கு நாம் எமது பெண்மக்களை திருமணம் முடித்துக் கொடுப்போம். இஸ்லாம் என்பது நம்பிக்கைக் கோட்பாட்டிற்கான மேலதிக அம்சமும், முழுமை பெறுவதற்கான ஒரு அடிப்படையாகும். உதாரணமாக, ஒரு முஸ்லிம் கிறிஸ்தவத்தைத் தழுவ விரும்பினால், அவர் முஹம்மது மற்றும் அல் குர்ஆன் மீதான நம்பிக்கையைத் துறக்க வேண்டும். மேலும் அவர் திரித்துவத்தை நம்பி, பாதிரியார்கள் மற்றும் மதகுருமார்கள் இவர்கள் அல்லாதோரை நாடுவதன் மூலம் பிரபஞ்சத்தின் இறைவனுடனான நேரடி உறவை இழந்து விடுகிறார். அவர் யூத மதத்தைத் தழுவ விரும்பினால், இயேசுவின் மீதும் சரியான இன்ஜீலின் மீதான தனது நம்பிக்கையைத் துறக்க வேண்டும். இருப்பினும் யூத மதத்திற்கு மாறுவது அவ்வளவு சுலபமான காரியமல்ல, காரணம் அது ஒரு தேசிய தனி மதமாகும், உலகலாவிய மதம் அல்ல என்பது அதன் தேசிய அடிப்படைவாதத்தின் மூலம் மிகத் தெளிவாகத் தெரிகிறது.

# இஸ்லாமிய நாகரீகத்தின் தனித்துவம் :

*இஸ்லாமிய நாகரீகம் எவ்வாறு தனித்துவம் பெற்றுள்ளது?*

உண்மையில் இஸ்லாமிய நாகரீகமானது படைப்பாளனுடனான உறவை மிகச் சிறப்பான முறையில் பேணுவதுடன், படைப்பாளனுக்கும் படைப்பினங்களுக்கும் இடையிலான உறவையும்; மிகச்சரியான இடத்தில் வைத்துள்ளது. அதே வேளை ஏனைய மனித நாகரீகங்கள் அல்லாஹ்வை நிராகரித்து, நம்பிக்கை மற்றும் வணக்க வழிபாடுகளில் இறைவனின் படைப்பினங்களை அவனுக்கு நிகராக ஆக்கி, இறைவனின் கண்ணியம் மற்றும் புகழுக்கு எவ்விதத்திலும் பொருந்தாத விதத்தில் அவனுடைய அந்தஸ்தை குறைத்து அவனுடன் உறவு பேணுவதில் தவறாக நடந்து கொண்டுள்ளது.
உண்மையான முஸ்லிம் நாகரீகம் மற்றும் நகரமாயக்கல் விஷயங்களுக்கு மத்தியில் குழப்பமடைய மாட்டான். சிந்தனைகள் மற்றும் அறிவியலை கையாளும் முறையை வரையறுப்பதில் நடுநிலை கோட்பாட்டை பின்பற்றுவார். நாகரீகம் மற்றும் பண்பாடு (குடிமை) ஆகியவற்றிற்கிடையில் பின்வருமாறு வேறுபடுத்துவார் :

நாகரீகக் காரணி (கூறு) : இது மத மற்றும் அறிவு, சிந்தனை நடத்தை மற்றும் பண்பாட்டியல் பெருமானங்களை உள்ளடக்கியது.

நகரமயமாக்கள் கூறா (காரணி)னது, அறிவியல் சாதனைகள், பெருட் கண்டுபிடிப்புகள் மற்றும் கைத்தொழில் கண்டுபிடிப்புகள் போன்றவற்றை உள்ளடக்கியது.

ஆகவே ஒரு முஸ்லிம் இந்த அறிவியல் மற்றும் கண்டு பிடிப்புகளிலிந்து அவனின் நம்பிக்கை மற்றும் நடத்தை சார் புரிதல்களின் வரையறைகளுக்கு உட்பட்டு எடுத்துக் கொள்வான்.

கிரேக்க நாகரீகமானது இறையிருப்பை நம்பி ஏற்றுக்கொண்டது. ஆனால் அந்த இறைவனின் ஏகத்துவப் பண்பை ஏற்றுக்கொள்ளாது அந்தக்

கடவுளால் எந்தப் பயனோ தீங்கோ கிடையாது என விவரித்தது.
ரோம நாகீகமானது ஆரம்பத்தில் படைப்பாளனை மறுத்து, அது கிறிஸ்துவத்திற்கு மாறியபோது அந்த இறைவனுக்கு இணை கற்பித்து அதன் நம்பிக்கை கோட்பாடுகளினுள் பல தெய்வ வணக்கம் மற்றும் சக்தியின் வெளிப்பாடுகள் போன்ற பிற மதக் கலாச்சாரங்கள் உட்புகுந்தன.

இஸ்லாத்திற்கு முன் பார^+க நாகரீமானது அல்லாஹ்வை மறுத்து அவனைத் தவிர்த்து சூரியனை வணங்கி நெருப்புக்கு சாஸ்டாங்கம் செய்து அதனை புனிதப்படுத்தும் நிலை காணப்பட்டது.

இந்து நாகரீமானது படைப்பாளனை வணங்குவதை விட்டு படைப்பினங்களை கடவுளாகக் கொண்டு வழிப்பட்டது. இவ்வாறு வழிப்பட்ட கடவுள்கள் பரிசுத்த திரித்துவத்தில் உருவான மூன்று கடவுள்களாகும். அவைகளாவன : சிருஷ்டி கர்த்தாவின் வடிவில் பிரம்மா எனும் கடவுள், காப்பவர் என்ற வடிவில் விஷ்னுக் கடவுளும் அழிப்பவர் என்ற வடிவில் சிவாவும் காணப்படுகின்றனர்.

பௌத்த நாகரீமானது படைப்பாளனான கடவுளை நிராகரித்து, படைப்பான கௌம புத்தரை கடவுளாக மாற்றியது.

ஸாபிஊன் நாகரீகம் இவர்கள் வேதம் கொடுக்கப்பட்டோர், தங்களது இரட்சகனை மறுத்து விட்டு கோல்களையும், நட்சத்திரங்களையும் வணங்கினர். அல் குர்ஆன் குறிப்பிடும் ஓரிறைக் கொள்கையை ஏற்ற முஸ்லிம்களான சில பிரிவினர் இதில் விதிவிலக்கானோர் ஆகும்.

பிர்அவ்னிய நாகரிகமானது, அகெனாட்டனின் ஆட்சியில் ஏகத்துவவம், இறைபரிசுத்தம் போன்றவற்றில் உயரிய நிலையை அடைந்திருந்தது. என்றாலும் கடவுளை சூரியன் மற்றும் ஏனைய உயிரினங்களுக்கு ஒப்பாக்குதல்; மற்றும் உருவகப்படுத்தல் போன்றவற்றை அது கைவிடவில்லை. அவை கடவுளின் அடையாளமாகவும் மாறிவிட்டன. மூஸா நபியின் காலத்தில் பிர்அவன் தனக்கு தெய்வீகத்தன்மை உள்ளதாகவும் தானே சட்டங்களை உருவாக்கும்

முதல் அதிகாரம் பெற்றவன் என வாதிட்ட போது இறை நிராகரிப்பு அதன் உச்சக்கட்டத்தை அடைந்தது.
அரேபிய நாகரீமானது படைத்தவனை வழிபடுவதை விட்டு விட்டு சிலைகளை வணங்கியது.

கிறிஸ்தவ நாகரீகமானது இறை ஏகத்துவத்தை முற்றாக மறுத்து கடவுளை இயேசு கிறிஸ்துவுக்கும் மற்றும் அவரின் தாயாருக்கும் நிகராக இணையாக்கி, திரித்துவக் கோட்பாட்டை கட்டமைத்தது. அதாவது மூவரில் பிரதிபலிக்கும் பிதா, குமாரன் பரிசுத்த ஆவி போன்றோர் உள்ளடங்கியுள்ள ஓரிறைக் கொள்கையாகும். யூத நாகரிகமானது தனது படைப்பாளனை மறுத்து, தனக்கென தனித்துவமான கடவுளொன்றை தேர்வு செய்து அதனை தமது சமூகத்திற்கு மாத்திரமான ஒரு கடவுளாக மாற்றியது. இந்நாகரீகமானது காளைமாட்டை வணங்கி வழிப்பட்டது. இவர்கள் கடவுளை பொருத்தமற்ற மனிதப்பண்புகளால் தமது நூல்களில் விவரித்துமுள்ளனர்.

முன்னைய நாகரிகங்கள் அழிந்து, யூத மற்றும் கிறிஸ்தவ நாகரீகமானது முதலாலித்துவம் சோஸலிசம் எனும் பெயர்களால் மதமற்ற நாகரீகங்களாக மாறின. கொள்கை ரீதியாகவும், சிந்தனா ரீதியாகவும் கடவுள் மற்றும் வாழ்வு குறித்த இரு நாகரிகங்களினதும் அனுகுமுறைகளுக்கேட்ப, அவை இரண்டும் வளர்ச்சியடையாது பின்தங்கிய நிலையில் உள்ளதுடன், சிவில் மற்றும் அறிவியல் தொழிற்துறை போன்றவற்றில் முன்னேற்றத்தின் உச்சத்தை அவைகள் அடைந்திருப்பினும் மிருகத்தனமும் ஒழுக்கேடும் நிறைந்ததாகவும்; காணப்படுகிறன. நாகரீக முன்னேற்றங்கள் இதனை அளவுகோளாகக் கொண்டு அமைவதில்லை!. உண்மையில் சிறந்த நாகரீக முன்னேற்றத்தின் அளவுகோலானது, பகுத்தறிவு சான்றுகள் மற்றும் கடவுள், மனிதன், பிரபஞ்சம் மற்றும் வாழ்க்கை பற்றிய சரியான சிந்தனையை அடிப்படையாகக் கொண்டது. ^+ரிய உயர் நிலை நாகரீகமயமாவது என்பது கடவுள் (அல்லாஹ்) பற்றியும் தனது படைப்பினங்களுடனான அவனது தொடர்பு மற்றும் அவனின் இருப்பிற்கான ஆதாரத்தையும் முடிவையும் அறிந்து கொள்ளவும் சரியான கருத்துக்களின் பால் வழிகாட்டும். மேலும் இந்த உறவை அதற்கே உரிய சரியான இடத்தில் வைக்கும். இந்த வகையில் இந்த நாகரிகங்களுக்கு மத்தியில் தேவையான

சமநிலையை இஸ்லாமிய நாகரிகம் மாத்திரம் அடைந்துள்ளதால் அதுவொன்றே முன்னேற்றமடைந்த நாகரிகமாக காணப்படுகிறது என்ற முடிவுக்கு வரமுடிகிறது. (நூல்:அல்லாஹ் குறித்த முதலாளித்துவம் மற்றும் கம்யூனிஸத்தின் தவறான கற்பிதம் : பேராசியர் கலாநிதி காஸி இனாயா).

### *இஸ்லாமிய மார்க்கமானது இவ்வுயர் நிலையில் இருக்கையில் முஸ்லிம்களின் நிலை குழப்பகரமானதாகவும், தெளிவற்றதாகவும் இருப்பது ஒரு வகை முரண்பாடல்லவா?*

இஸ்லாமிய மார்க்கம் சிறந்த பண்பாடுகளை கடைப்பிடித்து, தீய செயற்பாடுகளை விட்டும் விலகி நடக்குமாறு அழைப்பு விடுக்கிறது. அத்துடன் சில முஸ்லிம்களிடத்தில் காணப்படுகின்ற தவறான நடத்தையானது, அவை அவர்களின் கலாச்சார பழக்கவழக்கங்கள்; அல்லது மார்க்கம் குறித்த அவர்களின் அறியாமை, சரியான மார்க்த்தை விட்டு விலகியிருத்தல் போன்றவைகளால் ஏற்படுகின்றன.

மேற்குறிப்பிட்ட விடயத்தில் எவ்வித முரண்பாடுமில்லை என்பதற்கு பின்வரும் உதாரணத்தை குறிப்பிட முடியும். ஆடம்பரமான உயர்ரக கார் ஒட்னர் ஒருவர் அதனை செலுத்துவதற்கான அடிப்படைகளை கற்காது, அதனை ஒட்டியதானல் மிகப் பயங்கரமான விபத்திற்கு உட்பட்டார் எனில் அது உயர்ரக காரின் தவறு என்று ஒரு போதும் கூறுவதில்லை. அதை முறையாக செலுத்தத் தவறியவரையல்லவா நாம் குற்றம் சுமத்துகிறோம். ஆகவே இதே கண்ணோட்டத்தில் இஸ்லாத்தையும் சில முஸ்லிம்களின் நடத்தையும் நாம் அனுகினால் அது முரண்பாடாக அமையமாட்டாது!

அரசிலிருந்து மதம் பிரிக்கப்பட்டு, மேற்கத்திய நாடுகளில் போன்று அதிகாரபீடங்கள் மனித சிந்தனைக்கு அமைவாக ஏன் இருக்கக்கூடாது?

மேற்கத்திய அனுபவமானது, மத்திய காலத்தில் தேவாலயமும் அரசும் சேர்ந்து மக்களின் வளங்களை சுரண்டி அவர்களின் அறிவியலுக்கு எதிராக செயற்பட்டபோது அதற்கு எதிர்வினையாகும் முகமாக வெளிப்பட்ட ஒரு நிகழ்வாக

உள்ளது. இஸ்லாமிய கோட்பாட்டின் நடைமுறையும் ^+ரிய தன்மையும் காரணமாக இஸ்லாமிய உலகானது இவ்வாறான சிக்கலை ஒரு போதும் எதிர்கொள்ளவில்லை. உண்மையில் எமக்கு மனித வாழ்வின் எல்லா நிலைகளுடனும் பொருந்திப்போகும் உறுதியான இறை சட்டத்தின் தேவையே காணப்படுகிறது. வட்டி, ஓரினச்சேர்க்கை போன்றவற்றை ஹலாலாக்கும் நிலையிலுள்ள மனித இச்சைககள், அவனின் விருப்பு வெறுப்புகளையும் எதிர்பார்ப்புகளையும் அடிப்படையாகக் கொண்ட அதிகார சட்டபீடங்களின் தேவை எமக்கில்லை. அதே போல் முதலாளித்துவக் கோட்பாட்டில் காணப்படுவது போல் பெரும் பலசாலிகள் மூலம் பலவீனர்களுக்கு சுமையை ஏற்படுத்தும் விதத்தில் எழுதப்பட்ட சட்ட ஏற்பாடுகளிலோ, தனிமனித சொத்துரிமையை தடுத்து, மனித இயல்பூக்கத்துடன் முரண்படும் விதத்தில் அமைந்த பொதுவுடமை கோட்பாடுகளிலோ எந்தத் தேவையும் கிடையாது.

### *இஸ்லாம் ஜனநாயகத்தை அங்கீகரிக்கிறதா?*

ஒரு முஸ்லிமிடம் ஜனநாயகத்தைவிடவும் அதி சிறந்த ஷூரா அமைப்பொன்றுள்ளது.

ஜனநாயகம் என்பது உமது குடும்பம் தொடர்பான தீர்க்கமான முடிவொன்றை எட்டுவதற்கு குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களில் முன்பள்ளி குழந்தை முதல் அனுபவசாலியான தாத்தாவரை அவர்களின் அனுபவம் வயது, அறிவு ஆகியவற்றை கருத்திற் கொள்ளாது அவர்களின் கருத்தைப் பெறுவதைக் குறிக்கும். அதாவது முடிவெடுப்பதில் அவர்களின் கருத்துக்களை சரிசமமாக கருத்திற் கொள்வதைக் குறிக்கும்.

ஷூரா என்பது குறித்த விடயம் பொருத்தமானதா இல்லையா என்பதை தீர்மானிக்க வயதிலும், அந்தஸ்திலும் உயர்ந்தவர்களிடமும் அனுபவ சாலிகளிடத்திலும் ஆலோசனை பெறுதலைக் குறிக்கும்.

மேற்குறிப்பிட்ட இரண்டு கோட்பாடுகளுக்கிடையிலான வேறுபாடு மிகவும் தெளிவானதாகும். ஜனநாயகத்தில் காணப்படும் மிகப்பெரும் கோளாறுகளில் ஒன்றாக, உள்ளுணர்வு, மதம், பழக்க வழக்கங்கள் மற்றும்

மரபுகளுக்கு முரணாகக் காணப்படும ஓரினச்சேர்க்கை, வட்டி மற்றும் ஏனைய அருவருப்பான செயற்பாடுகளுக்கு நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை ஆதரவு கிடைக்கப்பெற்றமையினால் சில நாடுகள் இவைகளுக்கு சட்டபூர்வ அங்கீகாரம் அளித்துள்ளதை குறிப்பிட முடியும். இந்த வகையில் பெரும்பான்மை வாக்குகள் மூலம் ஒழுக்கச் ^+ர்கேட்டிற்கு அழைப்புவிடுக்கும் ஜனநாயகம் ஒழுக்கக்கேடான சமூக அமைப்பை உருவாக்க பெரிதும் பங்களித்துள்ளது. இஸ்லாமிய ஷூராவிற்கும் மேற்கத்திய ஜனநாயகத்திற்குமிடையிலான வேறுபாடு, அடிப்படையில் சட்டமியற்றும் அதிகாரத்துடன் தொடர்பான விடயமாகும். ஜனநாயகம் சட்டமியற்றும் அதிகாரத்தை (சட்ட இறையாண்மையை) குடிமக்களுக்கும் சமூகத்திற்கும் உரியதானதாக ஆக்கியுள்ளது. ஆனால் இஸ்லாமிய ஷூராவானது சட்டமியற்றும் அதிகாரத்தை முதலில் இறைசட்டத்திற்கே வழங்கியுள்ளது, ஆகவே இதுவே ஷரீஆ சட்டமாக இருப்பதால் மனிதனால் உருவாக்கப்பட்ட சட்டங்களுக்கு அங்கு இடமில்லை. ஆக சட்டம் இயற்றுவதில் இறைசட்டத்தின் மீது அதனை அடிப்படையாக் கொண்டு கட்டமைக்கும் அதிகாரத்தை தவிர வேறு எந்த அதிகாரமும் வழங்கப்படுவதில்லை. அதே போல் இறைசட்டத்தில் தெளிவாக குறிப்பிடப்படாத விடயங்களில் -இஜ்திஹாத்- செய்யும் அதிகாரத்தை வழங்கியுள்ளது. இவையெல்லாம் மனித அதிகாரமானது ஹலால் மற்றும் ஹராம் என்ற வட்டவரைக்குள் இருந்து செயற்படுவதற்காகும். (-இஜ்திஹாத்- என்பது : அல் குர்ஆன், ஸுன்னாவில் நேரடியாகத் தீர்வு காணப்படாத ஒரு பிரச்சினைக்கு ஓர் இஸ்லாமிய சட்டவறிஞர் ஷரீஆ மூலாதாரங்களையும், சட்டவாக்க வழிமுறைகளையும் பின்பற்றி தீர்வு காண முற்படுதல் இஜ்திஹாத் எனப்படும்).

### *இஸ்லாமிய சட்டமானது பகுத்தறிவிற்கு முரண்படாத மிகவும் தனித்துவமான ஒரு சட்ட ஏற்படாகும். அவ்வாறாயின் குற்றவியல் சட்டங்கள் ஏன்? அவற்றிற்கான தேவை என்ன?*

குற்றவியல் தண்டனையானது இந்தப்பூமியில் குழப்பம் விளைவிக்க நாடி அட்டகாசங்கள் புரிவோரைத் தண்டித்து அவர்களின் செயற்பாடுகளை கட்டுப்படுத்தவே இயற்றப் பட்டுள்ளது. ஆனால் இந்தத் தண்டனைகள் பல்வேறு சூழ்நிலைகளின் போது ரத்துச் செய்யப்பட்டதாக மாறிவிடுகிறது. தவறாக ஒருவரைக் கொல்லுதல், பசி மற்றும் பட்டினியின் காரணமாக களவெடுத்தல்

போன்றன தண்டனை ரத்துச் செய்யப்பட்டதாக மாறும் சில நிலைகளாகும். அதே போன்று குழந்தை, புத்திபேதலித்தோர், மனநோயினால் பாதிக்கப்பட்ட நோயாளிக்கும் தண்டனைகள் அமுல்படுத்தப் படமாட்டாது. இக்குற்றவியல் தண்டனைகள் யாவும் அடிப்படையில் சமூகத்தை பாதுகாப்பதற்கேயாகும். இத்தண்டனைகள் மிகவும் கடுமையானதாக இருப்பது சமூகத்தைப் பாதுகாக்கும் உண்ணத நலனோடு தொடர்பானதாகும். எனவே இஸ்லாமிய சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பினர்களும் இதுகுறித்து மகிழ்ச்சியடைய வேண்டும். இவ்வாறான தண்டனைகள் இருப்பது மனிதர்களுக்கான மிகப்பெரும் அருளாகும். இதன் மூலமே அவர்களுக்கு பாதுகாப்புக் கிடைக்கிறது. இந்த குற்றவியல் தண்டனைகளை தங்களது உயிர்களுக்குப் ஆபத்து வந்து விடும் என்ற பயத்தில் குற்றவாளிகளும், கொள்ளையர்களும், குழப்பக்காரர்களுமே குறுக்கீடு செய்து எதிர்க்கின்றனர். மரண தண்டனை போன்ற இஸ்லாமிய தண்டனைகளுள் பல மனிதனால் இயற்றப்பட்ட சட்டங்களிலும் காண்படுகின்றன.

இந்தத் தண்டனைகளைக் குறைகூறுவோர் குற்றவாளியின் நலனைக் கருத்திற்கொண்டு சமூக நலனை மறந்துவிடுகின்றனர். குற்றவாளியின் மீது அனுதாபப்படும் அவர்கள் பாதிக்கப்பட்டவரை மறந்து விடுகின்றனர். தண்டனை அதிகம் எனக்கருதுகின்றனர். குற்றச்செயலின் கொடூரம் குறித்து அலட்சியமாக இருந்து விடுகின்றனர்.

உண்மையில் அவர்கள் தண்டனையை குற்றத்துடன் ஒப்பிடுசெய்து பார்ப்பார்களேயானால் இஸ்லாமிய தண்டணைகளின் நீதியையும் அவை குற்றச்செயல்களுக்கு சமாந்திரமாக இருப்பதையும் அவர்கள் ஏற்றுக்கொள்வர். இதனை மேலும் தெளிவு படுத்திட ஒரு கள்வனின் செயலை உதாரணமாகக் கொள்வோம். அவன் மாறுவேடம் பூண்டு இருளில் சென்று, பூட்டை உடைத்து, ஆயுதத்தைக் காட்டி மிரட்டி, வீட்டிலிருக்கும் அப்பாவிகளை பயமுறுத்தி, வீடுகளின் புனிதத்தை மீறி, உள்ளே நுழைந்து தன்னை எதிர்ப்பவர்களை கொன்று விடுவதாகவும் கூறுகின்றான். இவ்வாறான ஒரு கள்வனின் நிலையை சற்று மனக்கண்முன் கொண்டுவந்தால் இதன் அபாயத்தை சற்று புரிந்து கொள்ள முடியும். அதிகமான சந்தர்ப்பங்களில் திருடன் தனது திருட்டை முடிக்கவும் அல்லது அதன் விளைவுகளிலிருந்து தப்பித்துக் கொள்ளவும்

பயன்படுத்தும் ஒரு வழிமுறையாகவே கொலை அடிக்கடி நிகழ்கிறது. இவ்வாறான சந்தர்ப்பத்தில் எவ்வித வேறுபாடுமின்றி தனக்கு முன்னிருப்பவர்களை கொலை செய்துவிடுகிறான். இந்தத் திருடனின் செயலை சிந்திக்கும் போது இஸ்லாம் விதித்திருக்கும் கடுமையான தண்டனைகளின் உயர் நோக்கத்தை எம்மால் உணர முடிகிறது.

ஏனைய இஸ்லாமிய தண்டனைகளின் நிலையும் இவ்வாறே காணப்படுகிறது. ஆகவே நாம் குறிப்பிட்ட குற்றங்கள் குறித்தும் அதில் காணப்படுகின்ற அபாயங்கள், தீங்குகள், அநியாயம் அத்துமீறல் போன்றவற்றை நாம் எமது மனக்கண்முன் கொண்டு வரல் வேண்டும். அவ்வாறு நாம் சிந்திக்கும் போது அல்லாஹ் ஒவ்வொரு குற்றத்திற்குமுரிய பொருத்தமான தண்டனைகளை விதித்துள்ளதை உறுதியாக ஏற்றுக்கொள்ள முடியும். அத்துடன் அவன் ஒவ்வொரு வினைக்கும் அதற்குரிய வெகுமதியை வழங்கியுள்ளான். செயலுக்கேற்ற கூலியையே வைத்துள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“உமது இரட்சகன் எவருக்கும் அநியாயம் இழைக்கமாட்டான்” (ஸூறதுல் கஹ்ப் : 49). இஸ்லாம், கடுமையான தண்டனைகளை விதிப்பதற்கு அல்லது- தீர்மானிக்க முன், குற்றவாளிகளை அவர்கள் செய்த குற்றத்திலிருந்து விலக்கி வைக்க, போதிய பயிற்சிகளையும் மற்றும் பாதுகாப்பு வழிமுறைகளையும் முன்வைத்துள்ளது. இவ்வாறான பயிற்சிகளையும் பாதுகாப்பு வழிமுறைகளையும் பின்பற்றுவது அவரவர் உள்ளத்தைப் பொருத்ததாகும். குற்றம் செய்த நபர் எவ்வித நியாயமான காரணமோ, எவ்வித நிர்ப்பந்தத்திற்கு உட்படாத வகையில் சந்தேகமின்றி அக்குற்றத்தை செய்தார் என அவர் உத்தரவாதமளிக்கும் வரையில் இஸ்லாம் எந்தத் தண்டனையையும் அவருக்கு விதிக்க மாட்டாது. இவ்வாறான நியாமான காரணங்களுக்கு அப்பால் குறித்த நபர் குற்றம் செய்தால் அது அவரது ஒழுங்கீனம் மற்றும் முறைகேடான செயற்பாட்டடிற்கு சான்றாக அமைந்து விடுவதால் கடுமையான தண்டனைக்கு உரித்தவராக மாறிவிடுகிறார். இஸ்லாம் செல்வத்தை நியாயமாகப் பகிர்ந்தளிப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. அந்த வகையில் பணக்காரர்களின் செல்வங்களில் ஏழைகளுக்கு என குறிப்பிட்ட ஒரு பகுதியை ஒதுக்கியுள்ளது.

மேலும் மனைவி மற்றும் நெருங்கிய உறவுகளுக்காக செலவு செய்வதை வலியுறுத்தியுள்ளதுடன் அது ஒரு கடமை என்று குறிப்பிட்டுள்ளதுடன், விருந்தாளியை கௌரப்படுத்தி உபசரிக்குமாறும், அண்டைவீட்டாருக்கு உபகாரம் செய்யுமாறும் உத்தரவு பிறப்பித்துள்ளது. குடிமக்கள் கௌரமாகவும் சிறப்பகாவும் வாழ்வதற்கு தேவையான அத்தியவசியமான உணவு, உடை, உறையுள் மற்றும் பிற தேவைகளை குடிமக்களில் ஒவ்வொரு தனிமனிதனும் பெற்றுக்கொள்ள கூடிய வகையில் முழுமையான முன்னேற்பாடுகளை செய்து அவர்களின் கண்ணியமான வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிக்கும் பொறுப்பை இஸ்லாம் அரசுக்குரிய கடமையாக ஆக்கியுள்ளது. மேலும், குடிமக்களில் திறமையானதோர் சிறப்பான வேலை வாய்ப்புகளை பெற்றுக்கொள்வதற்கும், ஒவ்வொரு தனிநபரும் தங்கள் திறமைக்கு ஏற்றவாறு வேலை செய்வதற்குமான சம வாய்ப்புக்களை அனைவருக்கும் பெற்றுக்கொள்வதற்கான உத்தரவாதத்தை அளிக்கிறது.

ஒரு நபர் வீடு திரும்பியதும், கொள்ளை அல்லது பழிவாங்கும் நோக்கத்துடன் யாரோ ஒருவரால் அவரது குடும்ப உறுப்பினர்கள் கொல்லப்பட்டதைக் காண்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அதிகாரிகள் வந்து குற்றவாளியை கைது செய்து, குற்றவாளிக்கு ஒரு குறிப்பிட்ட காலம் சிறைத்தண்டனை விதிக்கப்படுகிறது. விதிக்கப்பட்ட சிறை தண்டனைகக் காலம் நீண்டதாகவோ, குறுகியதாக இருப்பினும் அக்காலப்பகுதியில் குற்றவாளி உணவை உட்கொள்வதோடு, சிறையில் வழங்கப்படும் சேவைகளிலிருந்து பயனடைவார், இவ்வாறான சேவைகளை குற்றவாளி பெறுவதற்கான நிதிகளை பாதிக்கப்பட்ட அந்நபரும் வரி செலுத்தலின் மூலம் இதற்கு பங்களிப்புச் செய்கிறார் என்றால்,

குற்றவாளி பாதுகாப்பாக இவ்வாறு இருக்கும் நிலையில் இத்தருணத்தில் பாதிக்கப்பட்டவனின் எதிர்வினை எவ்வாறு இருக்கும்? அவன் இந்தத் துன்பத்தினால் பைத்தியம் போன்ற நிலைக்கோ அல்லது இந்த கோர சம்பவத்தினால் ஏற்பட்ட வலிகளை மறக்க போதைக்கு அடிமையாகி தனது உயிரை துறக்கும் நிலைக்கு கொண்டு போய்சேர்த்துவிடலாம்!. ஆனால் இதே நிலை இஸ்லாமிய ஷரீஆ அமுல்படுத்தப்படும் ஒரு இஸ்லாமிய நாடாக இருப்பின் அரச அதிகாரிகளின் நடவடிக்கை வித்தியாசமாக அமையும். அவர்கள் கைது செய்த அக்குற்றவாளிக்கான தண்டனையை தீர்மானிப்பதற்காக அவனை பாதிக்கப்பட்ட குடும்பத்தின் முன் நிறுத்தி, உண்மையில் நீதி என்ற அடிப்படையில்

அவனைப் பலிதீர்க்கவோ, அல்லது உயிருக்குப் பதிலீடாக இழப்பீடு தீர்மானம் மேற்கொள்வதற்கு அவர்களுக்கு சந்தர்ப்பம் அளிக்கப்படும், அல்லது மன்னிப்பே மிகவும் சிறப்பானது என்ற அடிப்படையில் அவனை மன்னிப்பதற்கான கோரிக்கை முன்வைக்கப்படும். இவ்வாறான நடவடிக்கைளால் பாதிப்புக்குள்ளானவன் தனக்கு நீதி கிடைத்து அவன் மன நிம்மதி பெற வேண்டும் என்று இஸ்லாம் விரும்புகிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
"நீங்கள் சகித்து பொருட்படுத்தாது மன்னித்தும் விட்டால் நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவன் நிகரற்ற அன்புடையவன்". (அத்தகாபுன்: வசனம் : 14).

இஸ்லாமிய சட்டத்தை ஆய்வு செய்யும் ஒவ்வொருவரும் இஸ்லாமிய குற்றவியல் தண்டனைகள் (ஹுதூத்) வெறுமனே பழிவாங்கும் நடவடிக்கையாக இருப்பதை விடவும் அல்லது குற்றம் நிகழ்ந்தவுடன் ஆர்வக்கோளாரினால் உடனே இந்தத் தண்டனைகளைச் அமுல்ப்படுத்த வேண்டும் என்பதை விடவும் தற்காப்பு –தடுப்பு- மற்றும் சமூகத்தை ஒழுங்குபடுத்தி பயிற்விப்பதற்கான அடிப்படையாக இத்தண்டனைகள் அமைந்திருப்பதை புரிந்து கொள்வர். உதாரணத்திற்கு தண்டனைகளை நிறைவேற்ற முன் குறித்த குற்றத்தை உறுதிப்படுத்தும் விடயத்தில் நிதானத்துடனும், மிக எச்சரிக்கையுடனும் நடந்து கொள்வதுடன் சந்தேகங்களை தவிர்ப்பதற்கு நியாயமான காரணங்களை தேடுவதும் அவசியமாகும். இது குறித்து அல்லாஹ்வின் தூதர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள் : 'தண்டனைகளில் சந்தேகங்களை தவிர்ந்து கொள்ளுங்கள்' குறிப்பு : அதவாது தண்டிக்க முன் குற்றம் எவ்வித சந்தேகத்திற்கிடமின்றி தெளிவாக உறுதிப்படுத்திட வேண்டும் என்று வழிகாட்டுவது நிரபராதி ஒருபோதும் தண்டனைக்குள்ளாகி விடலாகாது என்று இதன் மூலம் வழிகாட்டுகிறார்கள். உதாரணத்திற்கு:

யாரேனும் ஒரு தவறைச் செய்து, அதை அல்லாஹ் மறைத்து, அவர்கள் தங்கள் பாவத்தை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தாமல் இருந்தால், அவருக்கு தண்டனை நிறைவேற்றப் படமாட்டாது. இஸ்லாம் மக்களின் குறைகளை தேடுவதையோ, அவர்களின் தனிப்பட்ட விடயங்களை உளவு பார்ப்பதையோ ஊக்குவிக்கவில்லை.

பாதிக்கப்பட்டவரின் மன்னிப்பு தண்டனையை தடுத்து விடும். இது குறித்து அல்குர் ஆன் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"கொலை செய்தவனுக்கு கொல்லப்பட்டவனின் வாரிசாகிய அவனின் இஸ்லாமியச் சகோதரன் மூலம் அவனுக்கு ஏதேனும் மன்னிப்பு வழங்கப்பட்டால் நல்ல முறையாக நடந்து கொள்ளல் வேண்டும். கொலையாளி நஷ்டஈட்டை அழகிய முறையில் அவனிடம் ஒப்படைக்க வேண்டும். இது உங்கள் இரட்சகனிடமிருந்து வழங்கப்பட்ட சலுகைய்யும் அருளுமாகும்". (அல் பகரா:178).

தண்டனையை பெருவதற்கான நிபந்தனைகளில் ஒன்றாக குற்றவாளி அக்குற்றத்தை நிர்ப்பந்தத்தில் அல்லாது சுயவிருப்பத்துடன் செய்திருத்தல் வேண்டும். நிர்ப்பந்தத்தில் குற்றம் புரிந்தோனுக்கு தண்டனை விதிக்கப்படமாட்டாது. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்:

'தவறு, மறதி மற்றும் நிர்ப்பந்தம் போன்றவைகளினால் நிகழும் குற்றங்கள் யாவும் எனது சமூகத்தினருக்கு மன்னிக்கப்படும்'. (ஆதாரபூர்வமான ஹதீஸ்).
கொலைக்கான மரண தண்டனை, (திருமனமானபின்னரான) விபச்சாரறிக்கு கல்லெறிதல், திருட்டுக்கு கை துண்டித்தல் மற்றும் பிற தண்டணைகள் யாவும் கொடூரமான அல்லது காட்டுமிராண்டித்தனமானது என (சிலர் நம்பிக்கொண்டிருப்பது போல்) சிலரால் வர்ணிக்கப்படுகிறது. ஆனால் இஸ்லாமிய சட்டத்தில் பரிந்துரைக்கப்பட்ட தண்டனைகளின் தீவிரத்தன்மையின் பின்னணியில் உள்ள உயர்ந்த ஞானம் -நோக்கம் யாதெனில் மேற்குறிப்பிடப்பட்ட இந்தக் குற்றங்கள் யாவும் இஸ்லாத்தில் மிக அடிப்படையான மற்றும் கொடூரமான குற்றங்களாகக் கருதப்படுகிறது. இவைகள் ஒவ்வொன்றும் ஐந்து முக்கிய மனித அடிப்படை நலன்களான (மதம், உயிர், பரம்பரை, செல்வம் மற்றும் அறிவு) ஆகியவற்றிற்கு எதிரான அத்துமீரலாகும். இந்த அடிப்படை நலன்கள் இல்லாது வாழ்க்கை ^+ராக முடியாது என்பதால், வரலாற்றில் உள்ள அனைத்து சட்ட அமைப்புகளும், சட்டங்களும் ஒருமித்து இந்த நலன்களைப் பாதுகாத்தல் மற்றும் பாதுகாப்பதன் அவசியத்தை ஏற்றுக் கொண்டுள்ளன.

இதன் காரணமாவே மேற்குறிப்பிட்ட நலன்களுக்கு எதிராக அத்துமீறுவோருக்கு கடுமையான தண்டனை விதிக்கப்படுகிறது. ஆக இவ்வாறான தண்டனைகள்தான் குற்றவாளியையும் பிறரையும் இவ்வாறான குற்றங்களிலிருந்து தடுக்கும்.

ஆகவே இவ்வாறான தண்டனைச் சட்டங்கள் அமுல்படுத்தப்பட இஸ்லாமிய கோட்பாடு முழுமையாக கடைப் பிடிக்கப்படுதல் அவசியம். பொருளாதாரம் மற்றும் சமூகவியல் தொடர்பான இஸ்லாமிய போதனைகளை கருத்திற்கொள்ளாது இஸ்லாமிய தண்டனைகளை அமுல்படுத்திட முடியாது. மார்க்கத்தின் உண்மையான போதனைகளிருந்து விலகி நடப்பதானது சிலரை இவ்வாறான மாபாதகக் குற்றச்செயல்களை செய்வதற்கு தூண்டுகிறது. இஸ்லாமிய ஷரீஆ சட்டங்கள் அமுல்படுத்தப்படாத அதிகமான நாடுகளில் மிகப்பெரும் இக்குற்றச்செயல்கள் புயல் போன்று எல்லா இடங்களிலும் பரவிச்சென்றுகொண்டிருக்கிறது. இந்த நாடுகள் விஞ்ஞான மற்றும் தொழிநுட்பத்தில் உச்ச நிலை அடைந்து, நிறைவான வளங்கள் மற்றும் திறன்களை பெற்றிருந்தும் இந்நிலை காணப்படுகிறது. அல்குர்ஆன் 6348 வசனங்களை கொண்டுள்ளது. இவற்றுள் குற்றவியல் தண்டனைகள் தொடர்பான வசனங்கள் (10)பத்தை விடக் குறைவானது. இவ்வசனங்கள் யாவும் நுணுக்கமானவனும், ஞானமிக்கோனுமாகிய அல்லாஹ்வினால் மிக உயரிய நோக்கத்துடன் குறிப்பிடப்பட்டுள்ளன. முஸ்லிமல்லாத பலர் இந்த தனித்துவமான வழிமுறையைப் படித்து மகிழும் வாய்ப்பை, பத்து வசனங்களுக்குப் பின்னால் உள்ள ஞானத்தையும் உயரிய நோக்கத்தையும் அறியாத காரணத்தால் இழக்கின்றனரா?!

# இஸ்லாத்தின் நடு நிலைப் பண்பு :

### *இஸ்லாம் சமூக சமநிலையை எவ்வாறு உறுதிப்பத்தியது?*

செல்வம் அல்லாஹ்வுக்குரியது, அதன் பிரதிநிதிகளாகவே மக்கள் உள்ளனர் என்பது இஸ்லாத்தில் பொது விதிகளில் -கோட்பாடுகளில் ஒன்றாகும். அதே போன்று செல்வமானது பணம் படைத்தவர்களிடம் மாத்திரம் சுழன்றுகொண்டிருப்பதும் கூடாது. ஸகாத்தின் மூலம் ஏழை எளியவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட சாதாரன விகிதத்தை செலவு செய்யாது செல்வத்தை சேமிப்பதை இஸ்லாம் தடுத்துள்ளது. ஸகாத் என்பது ஒரு வணக்கமாகும். அது கஞ்சத்தனம், உலோபித்தனம் ஆகிய குணங்களை களைந்து ஈதல் மற்றும் கொடை கொடுத்தல் போன்ற உயரிய பண்புகள் குடிகொள்ள வகைசெய்கிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
“இவ்வூராரிடம் இருந்தவற்றில் அல்லாஹ் தன் தூதருக்குக் கொடுத்தவை அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும், அவருடைய உறவினர்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் உரித்தானதாகும். செல்வம் உங்களிலுள்ள பணக்காரர்களுக்கிடையில் மட்டுமே சுற்றிக் கொண்டிருக்காமல் (மற்றவர்களுக்கும் கிடைக்கும் பொருட்டு, இவ்வாறு பொருளைப் பங்கிடும்படி கட்டளையிடுகிறான்.) ஆகவே, நம் தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் (மனமுவந்து) எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதை விட்டும் உங்களைத் தடுத்தாரோ, அதைவிட்டு நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். (இவ்விஷயத்தில்) நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் கடும் தண்டனை தருபவனாவான்”. (அல் ஹஷ்ர் : 07). “ஆகவே, (மனிதர்களே! நீங்கள்) அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும் நம்பிக்கைகொள்ளுங்கள். இன்னும், அல்லாஹ் உங்களுக்கு முன் சென்றவர்களின் எப்பொருள்களுக்கு உங்களைப் பிரதிநிதிகளாக ஆக்கினானோ அப்பொருள்களிலிருந்து நீங்கள் தானம் செய்யுங்கள். உங்களில் எவர்கள் நம்பிக்கைகொண்டு தானம் செய்கிறார்களோ, அவர்களுக்குப் பெரியதொரு கூலி உண்டு. (அல் ஹதீத்: 7). “எவர்கள் தங்கம் வெள்ளியை சேமித்து அவற்றை

அல்லாஹ்வின் பாதையில் செலவழிக்க வில்லையோ அவர்களுக்கு நோவினை தரும் வேதனை கொண்டு (நபியே) நன்மாறாயம் கூறுவீராக". (அத்தவ்பா : 34) .
அதே போல் இஸ்லாம் சக்தியுள்ள ஒவ்வொருவரும் தொழில் செய்யுமாறும் தூண்டுகிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
"அவன்தான் உங்களுக்குப் பூமியை (நீங்கள் வசிப்பதற்கு) வசதியாக ஆக்கி வைத்தான். ஆகவே, அதன் பல கோணங்களிலும் சென்று, அவன் (உங்களுக்கு) அளித்திருப்பவற்றைப் புசித்துக் கொண்டிருங்கள். (மறுமையில்) அவனிடமே (அனைவரும்) செல்ல வேண்டியதிருக்கிறது". (அல்முல்க் : 15).

நடை முறையில் இஸ்லாம் செயல்ரீதியான ஒரு மார்க்கமாகும். அல்லாஹ் எமக்கு தவக்குலை (அல்லாஹ்வை சார்ந்து இருத்தல்) வலியுறுத்தி அதனைக் கைக்கொள்ளுமாறும் 'தவாகுல்' எனும் செயற்படாது இருத்தலை விட்டு விலகியிருக்குமாறும் உத்தரவிட்டுள்ளான். 'தவக்குல்' என்பது ஒரு காரியம் தொடர்பாக மனஉறுதி, அதற்காக இயலுமான முயற்சிகளை மேற்கொள்ளல், காரணகாரியங்களை பின்பற்றுதல் போன்ற விடயங்களை கைக்கொண்டு பின் அல்லாஹ்வின் தீர்ப்பு மற்றும் முடிவை எதிர்பார்த்து அவனிடமே ஒப்படைப்பதைக் குறிக்கும்', அல்லது செய்ய வேண்டிய அனைத்து முயற்சிகளையும் செய்து விட்டு அல்லாஹ்விடம் பொறுப்புச்சாட்டுதல்' என்பதைக் குறிக்கும்.

ஒரு மனிதர் தனது ஒட்டகத்தை அல்லாஹ்வின் மீது பொறுப்புச் சாட்டிவிட்டு கட்டாது விட்டுவிட நாடினார். அப்போது நபியவர்கள் அந்த மனிதரைப்பார்த்து இவ்வாறு கூறினார்கள் :
'

ஒட்டகத்தை கட்டிவிட்டு அல்லாஹ்விடம் பொறுப்பபுச்சாட்டு' என்றார்கள். (ஸஹீஹுத் திர்மிதி). -

இதன் மூலம் ஒரு முஸ்லிம் தேவையான சமநிலையை அடைந்து கொள்கிறான்.

இஸ்லாம் வீண்விரயத்தை -ஆடம்பரத்தை- தடுத்து, வாழ்க்கைத் தரத்தை கட்டுப்படுத்துவதன் மூலம் தனிநபர்களின் தரத்தை உயர்த்துகிறது. அதாவது இஸ்லாத்தில் செல்வம் என்பதன் கருத்து மனிதனின் அத்தியவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்வது மட்டுமல்ல. மாறாக ஒரு மனிதன் உண்ணவும் உடுக்கவும் வசிக்கவும் திருமனம் முடிக்கவும் ஹஜ் செய்யவும் தர்மம் வழங்கவும் தேவையானவற்றை அவன் பெற்றிருக்க வேண்டும் என்பதாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
“அவர்கள் தானம் கொடுத்தால் அளவு கடந்தும் கொடுத்துவிட மாட்டார்கள். கஞ்சத்தனமும் செய்யமாட்டார்கள். இதற்கு மத்திய தரத்தில் கொடுப்பார்கள்”. (புர்கான் : 67). இஸ்லாமிய கண்ணோட்டத்தில் ஏழை என்பவர் தான் வாழும் நாட்டின் வாழ்க்கைத்தரத்திற்கேட்ப அத்தியவசியத் தேவைகைள பூர்த்தி செய்வதற்கான வாழ்க்கைத் தரத்தை பெற்றுக் கொள்ளாதவராவார். வாழ்க்கைத் தரம் விரிவடைவதற்கேட்ப வறுமைக்கான உண்மை அர்த்தமும் விரிவடைகிறது. உதாரணத்திற்கு ஒரு சமூகத்தில் உள்ள ஒவ்வொரு குடும்பமும் தனியான வீடொன்றை பெற்றிருப்பது வழக்கம் என்றிருப்பின், அவ்வாறு குறிப்பிட்ட ஒரு குடும்பம் சொந்த வீடொன்றை பெற்றிருக்க வில்லையெனில் அதுவும் வறுமையின் ஒரு வடிவமாகவே கருதப்படும். இதன் அடிப்படையில், சமநிலை என்பது ஒவ்வொரு தனிமனிதனையும் (முஸ்லிமாக இருந்தாலும் சரி அல்லது திம்மியாக இருந்தாலும் சரி) அந்த நேரத்தில் சமுதாயத்தின் தகுதிக்கும் திறன்களுக்கும் பொருத்தமான விதத்தில் வளப்படுத்துவதைக் குறிக்கும். சமூகத்தின் அனைத்து உறுப்பினர்களின் தேவைகளும் பூர்த்தி செய்யப்படுவதை இஸ்லாம் உத்தரவாதப்படுத்துகிறது, இதனை அரச பொதுக்காப்பீட்டின் -சமூக உத்தரவாதம்- மூலம் நிறைவேற்றுகிறது. அதாவது இஸ்லாத்தைப்பொருத்தவரை ஒரு முஸ்லிம் மற்ற முஸ்லிமின் சகோதரனாவான், ஆகவே அவனது சக முஸ்லிமுக்கு ஆதரவளிப்பதும், உதவி செய்வதும் அவன் மீது கடமையாகும். இந்த வகையில் முஸ்லிம்கள் தங்களுக்குள் எந்த ஒரு ஏழையும் உருவாகமல் இருப்பதை உறுதி செய்ய பாடுபடுவது அவர்களின் மீதுள்ள பொறுப்பாகும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள் :
‘ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு

அநீதியிழைக்கவும் மாட்டான், அவனை (பிறரது அநீதிக்கு ஆளாகும்படி) கைவிட்டு விடவும் மாட்டான். எவர் தன் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடுபட்டிருக்கின்றாரோ அவரது தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபட்டிருக்கின்றான். எவர் ஒரு முஸ்லிமின் ஒரு துன்பத்தை நீக்குகின்றாரோ அவரை விட்டு அல்லாஹ்வும் மறுமை நாளின் துன்பங்களில் ஒரு துன்பத்தை நீக்குகின்றான். எவர் ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கின்றாரோ அவரது குறைகளை மறுமை நாளில் அல்லாஹ்வும் மறைக்கின்றான்'. (ஸஹீஹுல் புஹாரி).

### *பொருளாதார சமநிலையை இஸ்லாம் ஏற்படுத்தியது எவ்வாறு?*

உதாரணமாக இஸ்லாம், முதலாளித்துவம் மற்றும் சோசலிசத்தில் உள்ள பொருளாதார முறைகளை –கோட்பாடுகளை- ஒரு எளிமையான ஒப்பீடொன்றின் மூலம், இஸ்லாம் இந்த சமநிலையை எவ்வாறு அடைந்தது கொண்டது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

சொத்து உரிமை தொடர்பாக பின்வரும் கருத்துக்களை அவதானிக்கமுடியும் :
முதலாளித்துவத்தில்: தனியார் உடைமை என்பது பொதுவான கொள்கை.
சோசலிசத்தில்: பொது உடைமை என்பது பொதுவான கொள்கை.

இஸ்லாத்தில்: பல்வேறு வகையான உடைமைகள் அனுமதிக்கப்படுகின்றன :
பொது உடமை: மக்கள் வாழும் நிலங்கள் போன்றவை ஒட்டுமொத்த முஸ்லிம் சமூகத்தினருக்கும் சொந்தமானது.
அரச உடமை: காடுகள் மற்றும் கனிமங்கள் போன்ற இயற்கை வளங்கள்.
தனியார் சொத்துரிமை : பொதுவான பொருளாதார கட்டமைப்புக்கு குந்தகம் ஏற்படுத்தாது முறையான முதலீட்டுச் செயற்பாட்டின் மூலம் பெறப்படுவது.
பொருளாதார சுதந்திரம் பற்றி நாம் நோக்கினால் :
முதலாளித்துவத்தில்: பொருளாதார சுதந்திரம் எந்தவித வரையரையின்றி பொதுவாக விடப்பட்டுள்ளது.
சோசலிசத்தில் : பொருளாதார சுதந்திரம் முற்றிலும் பறிக்கப்பட்டுள்ளது.
இஸ்லாத்தில், பொருளாதார சுதந்திரம் ஒரு குறிப்பிட்ட வட்டத்தினுள்

அங்கீகரிக்கப்பட்டுள்ளது, இதில் பின்வருவன அடங்குகின்றன :

1- இஸ்லாமிய பயிற்சி மற்றும் சமூகத்தில் சொத்துரிமை தொடர்பான இஸ்லாமிய கருத்துக்கள் பரவுதல் ஆகியவற்றின் அடிப்படையில் ஒருவரின் உள்ளத்தில் ஆழமாக வேரூன்றிய சுயவரையறை.

2- ஏமாற்றுதல், வட்டி மற்றும் சூதாட்டம் போன்ற சில செயல்களைத் தடைசெய்யும் குறிப்பிட்ட சட்டங்களால் குறிக்கப்படும் நிலையான கோட்பாட்டு ரீதியான வரையறை.

அல்லாஹ் கூறுகிறான் :

"நம்பிக்கை கொண்டோரே! பண்மடங்காகப் பெருகும் வட்டியை நீங்கள் உண்ணாதீர்கள். நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்". (ஆல இம்ரான் : 130). "(மற்ற) மனிதர்களுடைய பொருள்களுடன் சேர்ந்து (உங்கள் பொருளும்) அதிகப்படுவதற்காக வட்டிக்கு நீங்கள் கொடுக்கும் பொருள் அல்லாஹ்விடத்தில் அதிகப்படுவதில்லை. எனினும், அல்லாஹ்வின் முகத்தை நாடி ஸகாத்தாக ஏதும் நீங்கள் கொடுத்தாலோ, கொடுத்தவர்கள் அதை இரட்டிப்பாக்கிக் கொள்கின்றனர்". (அர்ரூம்: 39). "(நபியே!) மதுவைப் பற்றியும் சூதாட்டத்தைப் பற்றியும் உம்மிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீர் கூறுவீராக! "அவ்விரண்டிலும் பெரும் பாவங்களும் இருக்கின்றன; மனிதர்களுக்குச் சில பயன்களும் இருக்கின்றன. ஆனால், அவற்றில் உள்ள பாவம் அவற்றிலுள்ள பயனைவிட மிகப் பெரிது. மேலும், (நபியே! தர்மத்திற்காக) எவ்வளவு செலவு செய்வதென உம்மிடம் கேட்கின்றனர். (அதற்கு "அவசியத்திற்கு வேண்டியது போக) மீதமுள்ளதை(ச் செலவு செய்யுங்கள்)" எனக் கூறுவீராக. (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் இம்மை, மறுமை(யின் நன்மை)களை கவனத்தில் வைத்துக் கொள்வதற்காக உங்களுக்கு அல்லாஹ் தன் வசனங்களை இவ்வாறு விவரிக்கிறான்". (அல்பகரா:219).

முதலாளித்துவம் மனிதனுக்கு சுதந்திரமான வழிமுறையை உருவாக்கி, அதன் வழியில் செல்வதற்கு அவனைத் தூண்டியது மாத்திரமல்லாது, இந்த திறந்த வழிமுறையானது மனிதனை மிகவும் மகிழ்ச்சியான நிலைக்கு கொண்டுபோய் சேர்க்கும் என்று வாதிடுகிறது. இருப்பினும், இறுதியில், இக்கோட்பாடானது மனிதனை ஒரு வர்க்க அடிப்படையிலான சமூகத்தினுள் சிக்கவைத்துவிட்டது.

அதாவது பிறருக்கு அநீதி இழைப்பதினூடாக உழைத்த மிகப்பெரும் செல்வத்தைப் திரட்டிய ஒரு பிரிவினர் என்றும் தார்மீக விழுமியங்களைக் கடைப்பிடித்து ஒழுகும் அடிமட்ட வறுமை நிலையில் உள்ளோர் எனவும் இரு வர்க்கங்களை இது உருவாக்கிவிட்டது.

கம்யூனிசம் தோன்றி, அனைத்து வர்க்கங்களையும் ஒழித்து, கடுமையான கொள்கைகளை நிறுவ முயற்சித்தது. ஆனால் அது மற்ற கொள்கைகளை விடவும் ஏழ்மையும்,துன்பமும் நிறைந்த மிகவும் புரட்சிகரமான சமூகங்களை உருவாக்கியது.

ஆனால் இஸ்லாம் இந்த விவகாரத்தில் நடுநிலையான போக்கை கடைபித்தது. இஸ்லாமிய சமூகமானது ஒரு நடு நிலை சமூகம் என்ற அடிப்படையில் மனித குலத்திற்கு, எதிரிகள் கூட உண்மை என சான்று பகரும் அளவிற்கு மகத்தான ஒரு கோட்பாட்டை முன்வைத்தது. எனினும் முஸ்லிம்களில் பலர் இந்த மகத்தான இஸ்லாமிய நெறிமுறைகளை கடைப்பிடிப்பதில் அலட்சியமாக உள்ளனர் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.!

## *இஸ்லாம் ஒரு தீவிரவாத மார்க்கமா?*

உண்மையில் தீவிரவாதம், கடும்போக்கு, பிடிவாதம் போன்ற பண்புகளை அடிப்படையில் சத்திய மார்க்கமான இஸ்லாம் தடை செய்துள்ளது. அல்குர்ஆனின் அதிகமான வசனங்கள் பிறருடன் உறவாடும் போது மென்மை மற்றும் கருணையை கடைப்பிடிக்குமாறும், மன்னிப்பு, சகிப்புத் தன்மை போன்ற பண்புகளை அணிகலனாகக் கொள்ளுமாறும் தூண்டுகிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
“(நபியே!) அல்லாஹ்வுடைய அருளின் காரணமாகவே நீர் அவர்கள் மீது மென்மையானவராக நடந்து கொண்டீர். நீங்கள் கடுகடுப்பானவராகவும், கடின உள்ளம் கொண்டவராகவும் இருந்திருப்பீரானால் உம்மிடமிருந்து அவர்கள் வெருண்டோடி இருப்பார்கள். ஆகவே, அவர்(களின் குற்றங்)களை நீர் மன்னித்து (இறைவனும்) அவர்களை மன்னிக்கப் பிரார்த்திப்பீராக! மேலும், (யுத்தம்,

சமாதானம் ஆகிய) மற்ற காரியங்களிலும் அவர்களுடன் கலந்து ஆலோசித்தே வருவீராக! (ஒரு விஷயத்தை செய்ய) நீர் முடிவு செய்தால் அல்லாஹ்விடமே பொறுப்பை ஒப்படைப்பீராக. ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் (தன்னிடம்) பொறுப்பு சாட்டுபவர்களை நேசிக்கிறான்". (ஆல இம்ரான் : 159). "(நபியே! மனிதர்களை) மதிநுட்பத்தைக் (விவேகத்தை) கொண்டும், அழகான நல்லுபதேசத்தைக் கொண்டுமே உமது இறைவனுடைய வழியின் பக்கம் அழைப்பீராக! மேலும், அவர்களுடன் (தர்க்கிக்க நேரிட்டால்) (கண்ணியமான) அழகான முறையில் தர்க்கம் செய்வீராக. உமது இறைவனுடைய வழியிலிருந்து வழி தவறியவர்கள் எவர்கள் என்பதை நிச்சயமாக அவன்தான் நன்கறிவான். நேரான வழியிலிருப்பவர்கள் யார் என்பதையும் அவன்தான் நன்கறிவான்". (அந்நஹ்ல் :125).

அல்குர்ஆனில் தெளிவாக ஹராம் என குறிப்பிடப்பட்ட சில விடயங்களைத் தவிர மார்க்கத்தில் அனைத்தும் அனுமதிக்கப் பட்டது என்பதே அடிப்படையாகும. இதில் எவரும் மாற்றுக்கருத்து கொள்ள மாட்டார்கள்.

அல்லாஹ் கூறுகிறான் :
"ஆதமுடைய மக்களே! தொழும்போதெல்லாம் (ஆடைகளினால்) உங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள். (இறைவன் உங்களுக்கு அனுமதித்தவற்றை) நீங்கள் (தாராளமாகப்) புசியுங்கள்; பருகுங்கள். எனினும் (அவற்றில்) அளவு கடந்து (வீண்) செலவு செய்யாதீர்கள். ஏனென்றால், வீண் செலவு செய்பவர்களை நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை. அல்லாஹ் தனது அடியார்களுக்கு வெளிப்படுத்திய அவனது அலங்காரத்தையும் உணவில் பரிசுத்தமானவற்றையும் தடை செய்பவன் யார்? என்று நபியே நீர் கேட்பீராக. இவை நம்பிக்கை கொண்டோருக்கு இவ்வுலக வாழ்வில் மற்றோருடன் அனுமதிக்கப்பட்டதாகும். மறுமையில் அவர்களுக்கு மட்டுமே உரியதுமாகும் என்று நீர் கூறுவீராக. அறிந்து கொள்ளும் கூட்டத்திற்கு வசனங்களை இவ்வாறே நாம் தெளிவு படுத்துகிறோம். (நபியே!) கூறுவீராகः "நிச்சயமாக என் இறைவன் (ஹராம் என்று) தடை செய்திருப்பதெல்லாம்ः பகிரங்கமாகவோ, இரகசியமாகவோ செய்யப்படும் மானக்கேடான காரியங்களையும், மற்ற பாவங்களையும், நியாயமின்றி ஒருவர் மீது (ஒருவர்) கொடுமை செய்வதையும், அல்லாஹ் எதற்கு ஆதாரம் இறக்கவில்லையோ

அதை அல்லாஹ்வுக்கு இணையாக்குவதையும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது (பொய்) கூறுவதையும்தான் (அல்லாஹ் தடுத்திருக்கிறான்)". (அல் அஃராப் : 31-33).

தீவிரவாதம், கடுமை போக்கு அல்லது மார்க்க ஆதாரமேதுமின்றி அனுமதிக்கப்பட்டவற்றை தடைசெய்வது போன்றவற்றின் பால் அழைக்கும் அனைத்து செயற்களையும் ஷைதானிய செயற்பாடுகளாகவே மார்க்கம் கருதுகிறது. உண்மையில் புனிதமான இம்மார்க்கம் அவற்றை விட்டும் தூய்மையானது என்பதை நாம் புரிந்து கொள்ளல் வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"மனிதர்களே! பூமியிலுள்ளவற்றில் (புசிக்க உங்களுக்கு) அனுமதிக்கப்பட்ட நல்லவற்றையே புசியுங்கள். (இதற்கு மாறு செய்யும்படி உங்களைத் தூண்டும்) ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்குப்பகிரங்கமான எதிரியாவான். தீமைகள் மற்றும் மானக்கேடானவற்றை நீங்கள் செய்வதற்கும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது (பொய்யாக) கூறுவதற்கும் ஷைத்தான் உங்களைத் தூண்டுகிறான்". (அல் பகரா:168-169). (அல் பகரா:168-169) "அன்றி "நிச்சயமாக நான் அவர்களை வழிகெடுப்பேன். அவர்களுக்கு வீண் நம்பிக்கைகளை உண்டு பண்ணி (பிசாசுகளுக்காக பிரார்த்தனை செய்துவிடப்பட்ட) ஆடு, மாடுகளின் காதுகளை அறுத்து விடும்படியும் அவர்களை ஏவுவேன். அல்லாஹ்வின் படைப்பினங்(களின் கோலங்)களை மாற்றும் படியாகவும் நிச்சயமாக நான் அவர்களை ஏவுவேன்" (என்று கூறினான்.) ஆகவே, எவன் அல்லாஹ்வையன்றி ஷைத்தானை (தனக்கு) பாதுகாவலனாக எடுத்துக் கொள்கிறானோ அவன் நிச்சயமாக பகிரங்கமான நஷ்டத்தையே அடைந்துவிடுவான்". (அந்நிஸா: 119).

## *இஸ்லாம் ஒரு இலகுவான நடு நிலை மார்க்கமா?*

அடிப்படையில் மார்க்கமானது, மக்கள் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்ட கட்டுப்பாடுகளிலிருந்து விடுவிக்கவே வந்துள்ளது. உதாரணத்திற்கு, இஸ்லாத்திற்கு முன்னுள்ள ஜாஹிலிய்யாக் காலத்தை நாம் அவதானித்தால்

பெண்குழந்தையை உயிரோடு புதைத்தல், உணவுகளில் சில ஆண்களுக்கு அனுமதிக்கப்பட்டதாகவும், பெண்களுக்கு தடுக்கப்பட்டதாகவும் இருந்ததோடு, அனந்தரச் சொத்து பெண்களுக்கு வழங்கப்படாமை, இவைகளுடன் தானாகசெத்த மிருகங்களை சாப்பிடுதல், விபச்சாரம், மது அருந்துதல், அநாதைகளின் செல்வத்தை உண்ணுதல், வட்டி போன்ற மாபாதகமான மோசமான செயல்கள் பரவிக் காணப்பட்டன. மக்கள் சிலரிடம் காணப்படும் மதக்கருத்துக்கள் தொடர்பான முரண்பாடுகளே, மக்கள் மதத்தை வெறுத்து விலகிச் சென்று அறிவியலை மாத்திரம் பிற்பற்றுவுதற்கு தூண்டும் காரணிகளில் ஒன்றாக காணப்படுகிறது. சரியான மதத்தை மக்கள் பின்பற்றத் தூண்டும் மிகப்பிரதான காரணிகளில் ஒன்றாகவும் முக்கிய அடையாளமாகவும் அந்த மதத்தின் மிதமான போக்கும் சமநிலைப்பேணும் பண்பும் காணப்படுகிறது. இதனையே நாம் இஸ்லாமிய மார்க்கத்தில் தெளிவாகக் காண்கிறோம்.

ஏனைய மதங்களில் உள்ள சிக்கல் என்வென்றால் தமது சரியான மார்க்கத்தை திரிவுபடுத்தி,தெளிவான ஆன்மிகம் என்ற நிலைக்கு மாற்றியமையே. அத்துடன் அம்மதங்கள் துறவரம், தனித்திருத்தல் போன்ற செயற்பாடு களுக்கு ஊக்குவிப்பதை அவதானிக்க முடிகிறது.

இது தெளிவான சடம் சார்ந்த விடயம்.

இதுவே தற்போதுள்ள மக்களில் பலரும் மற்றும் முந்தைய மதங்களைச் சேர்ந்தவர்களும் பொதுவாக மதத்திலிருந்து விலகிச் செல்ல காரணமாக அமைந்தன.

மதத்தின் பெயரால் உருவாக்கப்பட்ட பல சட்டங்கள், தீர்ப்புகள் மற்றும் தவறான நடைமுறைகளை பிற சமூகங்களிடையே நாம் காண்கிறோம். இது மக்களை வலுக்கட்டாயமாக பின்பற்ற வைப்பதற்கான ஒரு உத்தியாக அமைவதுடன், அவர்களை சரியான பாதையிலிருந்தும் இயற்கை மார்க்கத்தின் கருத்தாக்கத்திலிருந்தும் வழிதவறச்செய்து விட்டது. அதனையடுத்து, அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட, மனிதர்களின் உள்ளார்ந்த தேவைகளை பூர்த்தி செய்யும், மார்க்கம் குறித்த உண்மையான கருத்திற்கும், மனிதனால் உருவாக்கப்பட்ட சட்டங்கள், மரபுகள், பழக்கவழக்கங்கள் மற்றும் பல்வேறு

கலாச்சாரங்களின் மரபுவழி நடைமுறைகள் ஆகியவற்றிற்கு இடையில் காணப்படும் வேறுபடுத்தும் திறனை இதன் விளைவாக மனிதர்களில் பலர் இழந்துவிட்டனர். இதனால் மார்க்கத்திற்கு பதிலாக நவீன அறிவியலை சார்ந்திருப்பதே தீர்வு என்று அழைப்பு விடுக்கும் அளவுக்கு அவர்களை இது இட்டுச்சென்றுள்ளது.

சரியான –உண்மை- மார்க்கம் மக்களின் சிரமங்களை நீக்குவதோடு, சட்டங்களையும் தீர்ப்புகளையும் வகுக்கும் போது மக்களுக்கு சிரமத்தை தவிர்ப்பதையே முதன்மை இலக்காகக் கொண்டிருக்கும்.
அல்லாஹ் கூறுகிறான் :

"உங்களை நீங்களே மாய்த்துக்கொள்ள வேண்டாம். நிச்சயமாக அல்லாஹ் உங்களுடன் அன்புடையவனாக இருக்கின்றான்". (அந்நிஸா :29). "அழிவின் பக்கம் உங்களை கொண்டு செல்லாதீர்கள். நன்மை செய்யுங்கள். நிச்சயமாக நன்மை செய்வோரை அல்லாஹ் விரும்புகிறான்". (அல்பகரா:195). (அல்பகரா:195) "தூய்மையானவற்றை அவர்களுக்கு ஆகுமாக்கி, தீயவற்றை அவர்களுக்கு தடைசெய்வார். மேலும் அவர்களது சுமையையும் அவர்களின் மீதிருந்த விலங்குகளையும் அவர்களை விட்டும் நீக்குவார்". (அஃராப் : 157).
நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள் :
'இலகுபடுத்துங்கள், கஷ்டப்படுத்தாதீர்கள், நற்சோபனம் சொல்லுங்கள், வெறுப்படையச் செய்யாதீர்கள்'. (ஸஹீஹுல் புஹாரி).

மூன்று நபர்களின் சம்பவத்தை இங்கு ஞாபகப்படுத்துகிறேன். அவர்களில் ஒருவர் இனி நான் இரவு முழுதும் தொழுது நின்று வணங்குவேன் என்றார். அதற்கு மற்றவர் நான் காலம் முழுதும் விடாது நோன்பு நோற்கப்போகிறேன் என்றார். மூன்றாம் நபர் நான் பெண்களை விட்டு ஒதுங்கி, திருமணம் முடிக்காது இருக்கப் போகிறேன் என்றார். இந்த உரையாடலை அறிந்த அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் :

'இப்படி இப்படியெல்லாம் நீங்கள் பேசிக்கொண்டீர்கள் அல்லவா?. அறிந்து கொள்ளுங்கள், அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் உங்களை விட

அல்லாஹ்வை மிகவும் அஞ்சுபவன் ஆவேன். மேலும் அல்லாஹ்வை மிகவும் பயந்து நடப்பவனாகவும் உள்ளேன், ஆனால் நான் உபரியான நோன்பு நோற்கவும செய்கிறேன், நோற்காமலும் இருக்கிறேன். இரவில் உபரியான தொழுகையை தொழவும் செய்கிறேன், உறங்கியும் விடுகிறேன். பெண்களை திருமணமும் முடித்துள்ளேன். ஆகவே யார் எனது வழிமுறையை புறக்கணிக்கிறாரோ அவர் என்னைச் சார்ந்தவர் அல்ல' என்றார்கள். (ஸஹீஹுல் புஹாரி).

நபித்தோழர் அப்துல்லாஹ் இப்னு அம்ரு அவர்கள் இரவு முழுதும் நின்று வணங்குபவராகவும், காலமெல்லாம் நோன்பு நோற்பவராகவும், ஒவ்வொரு இரவும் அல்குர்ஆனை ஓதி முடிப்பவராகவும் இருக்கிறார் என்ற செய்தி அறிந்து நபியவர்கள் இவ்வாறு கூறினார்கள்:

'அவ்வாறு செய்யாதீர். (சிறிது நேரம்) தொழுவீராக, (சிறிது நேரம்) உறங்குவீராக. (சில நாட்கள்) நோன்பு நோற்பீராக, (சில நாட்கள்) நோன்பை விட்டுவிடுவீராக. ஏனெனில் உமது உடம்புக்கு செய்யவேண்டிய கடமையும் உமக்குண்டு. உம்முடைய கண்ணுக்குச் செய்யவேண்டிய கடமையும் உமக்குண்டு, உம் விருந்தினருக்குச் செய்யவேண்டிய கடமையும் உமக்குண்டு. உம்முடைய துணைவிக்குச் செய்யவேண்டிய கடமையும் உமக்குண்டு' என்றார்கள். (ஸஹீஹுல் புஹாரி).

# இஸ்லாத்தில் பெண்கள்

### *ஒரு முஸ்லிம் பெண் ஏன் ஹிஜாப் அணிய வேண்டும்?*

அல்லாஹ் கூறுகிறான் :

"நபியே! நீர் உமது மனைவிகளுக்கும், உமது மகள்களுக்கும், நம்பிக்கையாளர்களின் பெண்களுக்கும், அவர்கள் தங்கள் தலை முந்தானைகளை (தங்கள் முகங்களில் போட்டு) இறக்கிக் கொள்ளும்படி நீர் கூறுவீராக. அதனால், அவர்கள் (கண்ணியமானவர்கள் என) அறியப்பட்டு, எவருடைய துன்பத்திற்கும் அவர்கள் உள்ளாகாதிருப்பதற்கு இது சுலபமான வழியாகும். அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாக, மகா கருணையாளனாக இருக்கிறான்". (அல் அஹ்ஸாப்: 59). முஸ்லிம் பெண்னை பொறுத்தமட்டில் 'தனியுரிமை' privarcy' என்ற சொல்லை நன்றாக புரிந்து கொண்டிருக்கிறாள். தன் தந்தை, சகோதரன், மகன், கணவன் என ஒவ்வொருவரின் அன்புக்கும் தனியுரிமை உண்டு என்பதை அவள் புரிந்துகொண்டுள்ளாள். அவள் தனது கணவன் மீது அன்புகொண்டாலும் தனது தந்தை அல்லது சகோதரன் மீது அன்பு கொண்டாலும் தனக்கு உரிமையுள்ள ஒவ்வொருவருக்கும் அவரவர் உரிமையை வழங்க கடமைப்பட்டுள்ளாள். எனவே தனது தந்தைதைக்கு மரியாதை செய்து அவருக்கு உபகாரம் செய்வது என்பது, தனது மகனை பராமரித்து பயிற்சிளிக்கின்ற கடமை போன்றல்ல. ஒரு முஸ்லிம் பெண் தான் எப்போது? எப்படி? யாருக்கு தனது அலங்காரத்தைக் காட்டவேண்டும் என்பதை நன்கறிவாள்.

தனது நெருங்கிய உறவுகளுடன் இருக்கும் போது அணிவது போல் அந்நிய ஒருவரை சந்திப்பதற்கு அணியமாட்டாள். இவ்வாறு அவளின் தோற்றத்தை அனைவருக்கும் வெளிக்காட்டமாட்டாள். முஸ்லிம் பெண் ஒரு சுதந்திர பெண்ணாவாள். அவள் தன்னை பிறரின் இச்சைக்கும் மற்றும் நவீன நாகரீகத்திற்கும் கைதியாக இருப்பதை புறக்கணிக்கிறாள். தன்னைப் படைத்தவனை திருப்திபடுத்தும் வகையில், தனக்குப் பொருத்தமானதாகவும், பிடித்தமானதாகவும் கருதுவதை அவள் அணிந்துகொள்கிறாள். மேற்கத்திய நாடுகளில் பெண்கள் பெஷன் மற்றும் ஆடையகங்களின் கைதியாக எப்படி

உள்ளாள் என்பதைப் பாருங்கள். உதாரணமாக, இந்த வருட பெஷன் இறுக்கமான, குட்டையான காற்சட்டை அணிவது என்று அவர்களுக்கு சொன்னால், பெண்கள் அணியும்போது அந்த ஆடைகள் பொருத்தமானதா அல்லது வசதியானதா? என்பதையெல்லாம் பொருட்படுத்தாது அவற்றை அணிய முண்டியடிக்கிறார்கள். இன்றைய பெண்கள் பண்டங்களாக மாறிவிட்ட நிலையில், எந்த ஒரு விளம்பரமோ அல்லது பிரசுரமோ நிர்வாணப் பெண்ணின் உருவத்தில் இருந்து விடுபடாத நிலையில், இன்றைய காலத்தில் மேற்கத்தியப் பெண்களின் மதிப்பு மற்றும் கௌரவம் பற்றிய ஒரு மறைமுக செய்தியைக் கொடுக்கிறது என்பது யாருக்கும் இரகசியமல்ல. ஒரு இஸ்லாமியப் பெண் தனது அலங்காரத்தை மறைப்பதன் மூலம் தான் மதிப்புமிக்கவள், இறைவனால் கண்ணியப்படுத்தப்பட்டவள் என்ற ஒரு செய்தியை உலகிற்கு அனுப்புகிறாள்.

அவளுடன் பழகுபவர்- உறவாடுபவர் அவளின் அறிவு, கலாச்சாரம், இணக்கப்பாடுகள் மற்றும் கருத்துக்கள் அடிப்படையில் தீர்ப்பளிக்க வேண்டுமேயன்றி, அவள் உடல் அழகின் அடிப்படையிலல்ல என்பதை புரிய வேண்டும். ஒரு முஸ்லிம் பெண்ணைப்பொருத்தவரை அவளை இறைவன் எவ்வாறான மனித இயல்பூக்கத்துடன் மனிதர்களைப் படைத்துள்ளான் என்பதையும் நன்கு விளங்கிக்கொண்டுள்ளாள். இதனால் தனது சமூகததைப் பாதுகாக்கவும், தனக்கு பிறறால் நோவினை துன்பம் ஏற்படுவதிலிருந்து பாதுகாக்கவும் அந்நிய ஆண்களுககு தனது அழகை காட்டமாட்டாள். தமது அழகை பொதுவெளியில் காட்டி பெருமைப்படும் அழகிய யுவதிகள் ஒவ்வொருவரும் தமது முதுமைப்பருவத்தை அடையும் வேளை உலகில் உள்ள அனைத்து பெண்களும் ஹிஜாப் அணிய வேண்டும் என்று ஆசைப்படுவார்கள் என்ற யதார்த்தை எவரும் மறுக்கமாட்டார்கள் என்றே எண்ணுகிறேன். தற்காலத்தில் அழகியல் சத்திரசிகிச்சையின் விளைவாக ஏற்பட்டுள்ள சிதைவுகள் மற்றும் மரணங்களின் விகிதாசாரத்தை பற்றி மக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும், இவ்வாறான கொடுமைகளை பெண் அனுபவிக்க தூண்டிய விவகாரம்தான் என்ன? பெண் தனது சிந்தனை அழகிற்குப் பதிலாக உடல் அழகு போட்டிகளில் கலந்து கொள்வதற்கு நிர்ப்பந்திக்கப்பட்டதன் காரணமாக அவளின் உண்மையான பெருமானத்தை மட்டுமல்லாது தனது வாழ்க்கையைக் கூட இழப்பதற்கு இது வழிவகுத்துள்ளது எனலாம்.

## *ஒரு பெண் தலையை மறைப்பாதனது பிற்போக்குவாதமா? அது அவளை பின்னோக்கி கொண்டு செல்லுமா?*

தலையை திறப்பதே பிற்போக்காகும். உண்மையில் தலையை மறைத்தல் பிற்போக்குவாதம் என்றிந்தால் முதல் மனிதர் ஆதம் அவர்களின் காலத்தையும் அவ்வாறுதான் குறிப்பிடவேண்டுமல்லவா? காரணம் ஆதமையும் அவரின் மனைவியையும் இறைவன் படைத்து சுவர்க்கத்தில் குடியிருக்க செய்தது முதல் அவர்களுக்கு மறைத்தலையும் ஆடை அணிவதையும் உத்தரவாதப்படுத்தினான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“நிச்சயமாக நீர் இ(ச் சுவர்க்கத்)தில் பசியாகவோ நிர்வாணமாகவோ இருக்கமாட்டீர்". (தாஹா:118). இவ்வாறேஆதமின் சந்ததியினருக்கு தங்களின் மானத்தை-வெட்கத்தளத்தை- மறைப்பதற்கும் அலங்கரித்துக் கொள்வதற்குமென அல்லாஹ் ஆடையை இறக்கினான். அப்போதிருந்தே மனிதகுலம் தங்களுக்கான ஆடை அணிகளன்களை விருத்திசெய்துள்ளது. இந்த அடிப்படையில் சமூகங்களின் வளர்ச்சியானது ஆடை மற்றும் அடக்கத்தின் முன்னேற்றத்தைக் கொண்டே அளவிடப்படுகிறது. சில ஆபிரிக்க பழங்குடியினர் போன்ற நாகரீக வாசனையற்ற சில சமூகங்கள் தங்கள் மானத்தை –வெட்கத்தளத்தை- மறைக்கும் ஆடைகளை மட்டுமே அணிகின்ற வழக்கத்தைக் கொண்டுள்ளனர் என்பது யாவரும் அறிந்த விடயமாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"ஆதமுடைய சந்ததியினரே! உங்கள் வெட்கத்தளங்களை மறைக்கும் ஆடைகளையும் அலங்காரத்தையும் நாம் இறக்கியிருக்கிறோம். எனினும் பயபக்தி இறையச்சம் எனும் ஆடையே மிகவும சிறந்ததாகும். இவை அவர்கள் நல்லுபதேசம் பெறுவதற்கான கூறப்படும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும்". (அல் அஃராப் :26 ). மேற்கு நாட்டவர் ஒருவர் தனது பாட்டி பாடசாலைக்குச் செல்லும் வேளை எவ்வாறான ஆடைகளை அணிந்திருந்தாள் என்பதை பார்க்கட்டும்!. நீச்சலுடைகள் முதன்முதலில் அறிமுகப்படுத்தப்பட்போது, மதக் காரணங்களுக்கல்லாது, இயற்கை மற்றும் பழக்கவழக்கங்களுக்கு எதிரானதாக அது கருதப்பட்டதால், அந்த ஆடைக்கெதிராக ஐரோப்பாவிலும்

அவுஸ்திரேலியாவிலும் பெரும் எதிர்ப்புகள் வெடித்தன. உற்பத்தி நிறுவனங்கள் தங்கள் நீச்சலுடைகளை விளம்பரப்படுத்த ஐந்து வயது சிறுமிகளைப் பயன்படுத்தி தீவிர விளம்பரப் பிரச்சாரங்களை மேற்கொண்டன. அப்போது அந்த விளம்பரத்தில் நீச்சல் உடையை அணிந்து வந்த முதல் குழந்தை மிகவும் வெட்கத்துடனே நடந்து சென்றது, மாத்திரமல்லாமல் தொடர்ந்து அந்த விளம்பரக் காட்சியை நடத்த முடியாமல் போனது. அக்காலத்தில் ஆண் பெண் இருபாலரும் உடல் முழுவதையும் மறைத்து கறுப்பு மற்றும் வெள்ளை நிறங்களிலான நீச்சல் ஆடை அணிந்து நீந்துவோராக இருந்தனர்.

### *இஸ்லாத்தில் ஆண்களும் பெண்களும் தங்கள் உடலை ஒரே மாதிரியாக மறைக்காதது ஏன்?*

ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான உள்ளார்ந்த உடல் வேறுபாடுகளை உலகம் ஏகமனதாக அங்கீகரித்துள்ளது. இந்த அடிப்படையில்தான் ஆண்களுக்கான நீச்சல் உடைகள் மேற்கத்திய பெண்களுக்கான நீச்சலுடைகளிலிருந்து வேறுபடுகின்றன. ஆண்களின் ஈர்ப்பைவிட்டும்-கவர்ச்சிக்குள்ளாகாது- தம்மை தடுத்துக் கொள்ளும் முகமாக பெண்கள் தங்கள் உடலை முழுவதுமாக மறைக்கிறார்கள். ஒரு பெண் ஒரு ஆணை பாலியல் பலாத்காரம் செய்த நிகழ்வொன்றை எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மேற்கத்திய நாடுகளில் பெண்கள் துன்புறுத்தல் மற்றும் கற்பழிப்புக்கு உட்படாது பாதுகாப்பான வாழ்வுக்கான உரிமைகளைக் கோரி போராட்டங்களில் பங்கேற்கின்றனர். ஆனால் இதுபோன்ற போராட்டங்களை ஆண்கள் நடத்தியதாக நாங்கள் கேள்விப்பட்டதில்லையே! ஏன் சிந்திப்போமா?

இஸ்லாம் ஆணுக்கு நிகராக பெண்ணுக்கான சமத்துவத்தை உறுதிப்படுத்தியுள்ளதா?

முஸ்லிம் பெண், சமத்துவத்தை அல்லாது, நீதியையே தேடுகின்றாள்- ஏனெனில் ஆணுடான சமத்துவம் பெரும்பாலும் அவளின் உரிமைகளையும் தனித்துவத்தையும் இழக்கச் செய்து விடுகிறது. ஒருவருக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். ஒருவருக்கு ஐந்து வயது,

மற்றவருக்கு பதினெட்டு வயது. அந்த நபர் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சட்டை வாங்க விரும்புகிறார். இந்த விடயத்தில் சமத்துவம் என்பது இருவருக்கும் ஒரே அளவிலான சட்டையை வாங்குவதைக் குறிக்கும். அவ்வாறு அவர் சமத்துவமாக நடந்து கொள்ள வெண்டும் என்பதற்கு ஒரே அளவிளான சட்டையை வாங்கினால் அவர்களுககு சிரமத்தை ஏற்படுத்தும். இருப்பினும், இங்கே ஒவ்வொருவருக்கும் தகுந்த அளவு சட்டை வாங்கிக் கொடுப்பதே நீதியாகவும் அனைவரினதும் மகிழ்ச்சியை உறுதி செய்வதாகவும் அமையும்.!. இன்றைய காலக்கட்டத்தில், ஆணால் செய்யக்கூடிய அனைத்தையும் பெண் தன்னால் செய்ய முடியும் என்று நிரூபிக்க முயற்சிக்கின்றாள். இருப்பினும், உண்மையில், இந்த விஷயத்தில் பெண் தனது தனித்துவத்தையும், வேறுபாட்டையும் இழந்து நிற்கினறாள். ஒரு ஆணிணால் செய்ய முடியாத பணிகளை நிறைவேற்றுவதற்காகவே அல்லாஹ் அவளைப் படைத்துள்ளான். பிரசவ வலி மிகவும் கடுமையான வலிகளில் ஒன்றாகும் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. இந்த அர்ப்பணிப்புக்கு ஈடாக பெண்களை கௌரவப்படுத்தவே மார்க்கம் வந்துள்ளது. இந்த உரிமையை அவள் தொழில் செய்யாது, செலவுகளைப் பொறுப்பேற்காது தனது கணவனிடமிருந்து பெற்றுக் கொள்வாள். மேற்கத்திய நாடுகளில் உள்ளதைப் போல் மனைவியின் செல்வத்தை அவளின் விருப்பத்தின் அடிப்படையில் பகிர்ந்து கொள்ளவும் கணவனுக்கு உரிமை அளிக்கிறது. பிரசவ வலிகளைத் தாங்கும் சக்தியை அல்லாஹ் ஆண்களுக்குக் கொடுக்காத அதே வேளை மலைகளில் ஏறும் ஆற்றலை கொடுத்துள்ளான்.

ஒரு பெண் மலையேற ஆசைப்பட்டால், கடினமாக உழைத்து, ஆணைப் போலவே தன்னால் அதைச் செய்ய முடியும் என்று கூறினால், அவளால் அதைச் செய்ய முடியும். இருப்பினும், கடைசியில், குழந்தைகளைத் பெற்றெடுத்து பராமரிப்பதும், தாய்ப்பால் கொடுப்பதும் அவளே. எந்த சூழ்நிலையிலும் எந்த ஆணாலும் இதை செய்ய முடியாது. இவ்வாறான கடினமான செயற்பாடுகளில் ஒரு பெண் தன்னை ஈடுபடுத்திக்கொள்வதானது அவளின் கூடுதல் முயற்சியே. இதனை அவளால் தவிர்த்துக் கொள்ள முடியும்.

ஒரு முஸ்லிம் பெண் அவளுக்கு இஸ்லாம் வழங்கியிருக்கும் உரிமைகளை புறந்தள்ளிவிட்டு, தனது உரிமைகளை ஐக்கிய நாடுகள் சபையின்

மூலம் பெற விரும்பினால் அது பேரிழப்பாகும். ஏனென்றால் அவள் உண்மையில் இஸ்லாத்தில்தான் அதிக உரிமைகளை அனுபவிக்கிறாள் என்பது பலருக்குத் தெரியாது. இஸ்லாம் ஆண்களும் பெண்களும் எதற்காக படைக்கப்படட்டார்களோ அதற்கான முழுமையான ஒருங்கிணைப்பை உத்தாரவாதப்படுத்துவதோடு, இதன் மூலம் அனைவருக்குமான மகிழ்ச்சியையும் உறுதி செய்கிறது.

## *பலதார மணத்தை இஸ்லாம் அனுமதித்தது ஏன்?*

சர்வதேச புள்ளிவிவரங்களின்படி, ஆண்களும் பெண்களும் சுமாராக சமமான விகிதத்தில் பிறக்கிறார்கள். பெண் குழந்தைகள் உயிர் பிழைப்பதற்கும் உயிர்வாழ்வதற்கும் ஆண்களை விட வாய்ப்புகள் அதிகம் என்பது அறிவியல் பூர்வமாக யாவரும் அறிந்த விடயமாகும். போர்க் காலங்களில் ஆண் இறப்பு விகிதம் பெண்களை விட அதிகமாக இருக்கும். பெண்களின் சராசரி ஆயுட்காலம் ஆண்களை விட அதிகமாக உள்ளது என்பதும் அறிவியல் ரீதியாக அறியப்பட்ட ஒரு விடயமாகும். இதன் விளைவாக மனைவியை இழந்த விதவை ஆண்களுடன் ஒப்பிடும்போது பெண்களிடையே விதவைகளின் சதவீதம் அதிகமாக இருக்கும். இதன் விளைவாக, உலக மக்கள் தொகையில் ஆண்களை விட பெண்களே அதிகம் என்ற முடிவுக்கு வருவோம். எனவே, ஒவ்வொரு ஆணுக்கும் ஒரு மனைவி என்று வரையறுப்பது நடைமுறையில் பொருத்தமான விடயமல்ல.! பலதாரமணம் சட்டப்பூர்வமாக தடைசெய்யப்பட்ட சமூகங்களில், ஆண்களுக்கு கள்ளக்காதலிகள் மற்றும் திருமணத்திற்கு வெளியே பல உறவுகள் இருப்பது பொதுவான பரவலாக அறிய முடிகின்ற விடயமாகும். இந்நடைமுறையானது பலதார மணத்தை சட்டப்பூர்வமாக அங்கீகரிக்காது, மறைமுகமாக அங்கீகரிப்பதற்கான குறியீடாக காணப்படுகிறது! இஸ்லாத்திற்கு முன் இதுவே பரவலாக காணப்பட்ட நடைமுறையாகும், இதைச் சரிசெய்து பெண்களின் உரிமைகள், கண்ணியம் ஆகியவற்றைப் பாதுகாத்து, அவர்களின் காதலியை சட்டபூர்வ மனைவியாக மாற்றி, அவர்களுக்கும் அவர்களின் குழந்தைகளுக்கும் கண்ணியம் மற்றும் உரிமைகளையும் பெற்றுத்தரவே இஸ்லாம் வந்தது. இந்த சமூகங்களைப் பொறுத்தவரை திருமணமின்றியே உறவுகளை ஏற்றுக்கொள்வது, மற்றும் ஒரே பாலின திருமணங்கக்ளைக்கூட ஏற்றுக்கொள்வதில் எவ்விதப்பிரச்சினையும் இல்லை. அதே போன்று

தெளிவான பொறுப்புப்புணர்ச்சி (கடமையுணர்வு) இல்லாமல் உறவுகளை ஏற்றுக்கொள்வது அல்லது தந்தை இல்லாத குழந்தைகளை ஏற்றுக்கொள்வது போன்றவற்றில் இந்த சமூகங்களுக்கு எந்தப் பிரச்சினையும் கிடையாது என்பதும் குறிப்பிடத்தக்கது. இருப்பினும், ஒரு ஆணுக்கும் பல பெண்களுக்கும் இடையிலான சட்டப்பூர்வ திருமணபந்தத்தை இவர்கள் ஏன் பொறுத்துக்கொள்வதில்லை என்பதுதான் மிகவும் ஆச்சரியமானவிடயமாகும்! அதே வேளை, இஸ்லாம் இந்த விடயத்தில் தீர்க்கமானதும் அறிவுபூர்வமானதுமான நிலைப்பாட்டை கொண்டுள்ளது. பெண்களின் கண்ணியத்தையும் உரிமைகளையும் பாதுகாக்கும் பொருட்டு ஆண்களுக்கு பல மனைவிகளை வைத்திருக்க வெளிப்படையாக அனுமதிவழங்குகிறது. ஆனால் குறித்த ஆணுக்கு நான்கு மனைவிகளுக்கு குறைவாக இருந்து நீதியாக நடத்தல் மற்றும் பராமரிப்பதற்கான சக்தி பெற்றிருத்தல் போன்ற நிபந்தனைகளைப் பெற்றிருந்தாலே இந்த அனுமதி குறித்த ஆணுக்கு உண்டு. திருமணமாகாத ஆணை துணையாக பெற்றுக்கொள்ள முடியாத ஒரு பெண்ணின் பிரச்சனையை தீர்ப்பதற்கு, ஒன்று அவள் திருமணமான ஒரு நபரை திருமணம் முடித்தல்; அல்லது இன்னொருவருக்கு கள்ளக்காதலியாக இருப்பதற்கு நிர்ப்பந்திக்கப்படுதல் எனும் இரண்டு வழிமுறைகளே காணப்படுகிறன.

இஸ்லாம் பல திருமணங்களை அனுமதித்திருந்தாலும், சிலர் புரிந்துகொண்டிருப்பது போல் முஸ்லிம்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளை கட்டாயம் திருமணம் செய்ய வேண்டும் என்பது கிடையாது.

அல்லாஹ் கூறுகிறான் :
"அநாதை(ப் பெண்களை திருமணம் செய்துகொண்டு, அவர்)கள் விஷயத்தில் நீதமாக நடக்க மாட்டோம் என நீங்கள் அஞ்சினால், மற்ற பெண்களில் உங்களுக்கு விருப்பமானவர்களை இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நான்கு நான்காகவோ நீங்கள் திருமணம் செய்துகொள்ளலாம். (அவ்வாறு பலரை திருமணம் செய்தால் அப்போதும் அவர்களுக்கிடையில் நீங்கள் நீதமாகவே நடந்துகொள்ள வேண்டும்.) நீங்கள் நீதமாக நடக்க முடியாதென பயந்தால் ஒரு பெண்ணை (மட்டும் திருமணம் செய்துகொள்ள வேண்டும்". (அந்நிஸா : 3).

மனைவியர் இடத்தில் நீதியாக நடத்தல் என்ற நிபந்தனையை நிறைவேற்ற முடியாதபோது ஒரு மனைவியை மாத்திரமே வைத்துக்கொள்ள வேண்டும் என்பதை வெளிப்படையாகக் கூறும் உலகின் ஒரே மத நூல் அல்குர்ஆன் மட்டுமே!

அல்லாஹ் கூறுகிறான் :
"(நம்பிக்கையாளர்களே! உங்களுக்குப் பல மனைவிகளிருந்து) நீங்கள் (உங்கள்) மனைவிகளுக்கிடையில் அன்புகாட்டுவதில் நீதமாக நடக்க வேண்டுமென்று விரும்பியபோதிலும் (அது) உங்களால் சாத்தியப்படாது. என்றாலும், (ஒரே மனைவியின் பக்கம்) நீங்கள் முற்றிலும் சாய்ந்து மற்றவளை (அந்தரத்தில்) தொங்கியவளாக விட்டுவிடாதீர்கள்! நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து (உங்களுக்கிடையில்) சமாதானமாக நடந்து கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) குற்றங்களை மன்னித்துக் கருணை புரிபவனாக இருக்கிறான்". (நிஸா : 129).

எல்லா சந்தர்ப்பங்களிலும், திருமண ஒப்பந்தத்தில் இந்த நிபந்தனையை குறிப்பிடுவதன் மூலம் ஒரு பெண் தன் கணவனுக்கு ஒரே மனைவியாக இருக்க உரிமை உண்டு. இது ஒரு அடிப்படை நிபந்தனையாகும், இதனை கடைப்பிடிப்பது கட்டாயமாகும். இதனை மீறுவது கூடாது.

### *ஒரு ஆணுக்கு நான்கு மனைவிகளை திருமணம் முடிப்பதற்கு அனுமதிக்கப்பட்டது போல் ஒரு பெண் ஒரே நேரத்தில் நான்கு ஆண்களை திருமணம் செய்து கொள்வது ஏன் அனுமதிக்கப்படவில்லை?*

நவீன சமுதாயத்தில் பெரும்பாலும் கவனிக்கப்படாத ஒரு மிக முக்கியமான விடயங்களில் ஒன்று ஆண்களுக்கு வழங்கப்படாத, பெண்களுக்கு மாத்திரம் இஸ்லாம் வழங்கிய உரிமை பற்றியதாகும். ஒரு ஆண் தனது திருமணத்தை திருமணமாகாத பெண்களுடன் மாத்திரம் வரையறுத்துக்கொள்வான். மறுபுறம், ஒரு பெண், திருமணமாகாத ஆண் ஒருவரை திருமணம் செய்து கொள்ளலாம், அல்லது அவர் ஏலவே திருமணமான ஒருவரை திருமணம் செய்து கொள்ளலாம். அதாவது குழந்தைகளின் பரம்பரையை அவர்களின் உண்மையான தந்தைக்கு

உறுதிப்படுத்தவும், மற்றும் பிள்ளைகளின் உரிமைகள் மற்றும் அவர்களின் பெற்றோரிடமிருந்து அவர்களுக்கு கிடைக்க வேண்டிய அனந்தரச் சொத்துக்களை பாதுகாக்கவும் இவ்வாறு செய்யப்படுகிறது. இருப்பினும், இஸ்லாம் ஒரு பெண் திருமணமான ஆணை அவனுக்கு நான்கு மனைவிகளுக்குக் குறைவாக இருக்கும் நிலையில் திருமணம் முடிக்க அனுமதி வழங்கியுள்ளது, ஆனால் அந்த ஆண் மனைவியரிடத்தில் நீதம் பேணல் மற்றும் அதற்கான இயலுமை (சக்தி) போன்ற நிபந்தனைகள பெற்றிருக்க வேண்டும். எனவே, ஆண்கள் மத்தியில் பெண்களுக்கு பரந்த அளவிலான தேர்வுகள் உள்ளன. மற்ற மனைவி எப்படி நடத்தப்படுகிறாள் என்பதைப் பற்றி அறிந்துகொள்ளவும், இந்தக் கணவனின் நெறிமுறைகளைப் பற்றிய அறிவுடன் திருமண பந்தத்தில் இணைவதற்கு அவர்களுக்கு வாய்ப்பு உள்ளது. அறிவியல் வளர்ச்சியுடன் டிஎன்ஏ பரிசோதனை மூலம் குழந்தைகளின் உரிமைகளை காக்க முடியும் என்று கருதினாலும், தந்தையை இந்த சோதனை மூலம்தான் தாய் தனது குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்தும்போது அவர்களின் நிலை என்ன? அவர்களின் உளவியல் நிலை எப்படி இருக்கும்? மேலும், இவ்வாறான தடுமாற்றமான மனோ நிலையைக் கொண்ட ஒரு பெண்ணால் நான்கு ஆண்களுக்கு மனைவியாக இருக்கும் பாத்திரத்தை எப்படி வகிக்க முடியும்? அது மாத்திரமா, ஒரே நேரத்தில் பல ஆண்களுடன் அவள் உறவு கொள்வதால் பல நோய்கள் ஏற்படுவதற்கு காரணமாக அமையும்.

### *இஸ்லாத்தில் பெண்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஆண்கள் பெற்றிருப்பது ஏன்?*

இஸ்லாத்தில் ஆண்கள் பெண்களை நிர்வகிக்கும் தகுதியை பெற்றிருப்பது என்பது பெண்களுக்கான மரியாதையையும் (கௌரவத்தையும்), ஆண்களுக்கான பொறுப்பையையுமே காட்டுகிறது. அதாவது பெண்களின் விவகாரங்களைக் பொறுப்பேற்று, கவனித்து அவர்களின் தேவைகளை நிறைவேற்றும் பணியை ஆண்கள் செய்ய வேண்டும் என்பதே இதன் அர்த்தமாகும். இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பெண்ணும் விரும்பும் அரசி எனும் வகிபாகத்தை ஒரு முஸ்லிம் பெண் அடைந்து கொள்கிறாள். புத்திசாலித்தனமான பெண் தான் ஒரு மரியாதைக்குரிய அரசியாகவா அல்லது வாழ்க்கைப் பாதையில் கடின உழைப்பாளியாகவா இருக்க வேண்டும் என்பதைத் அவளே தேர்ந்தெடுப்பாள்.

சில முஸ்லிம் ஆண்கள் தங்களுக்கு வழங்கப்பட்டுள்ள இந்த நிர்வகித்தல் எனும் கருத்தை தவறாகப் பயன்படுத்திக்கொள்கிறார்கள் என்பதை நாம் ஒப்புக்கொண்டாலும், ஒரு போதும் இறைவனால் ஆணுக்கு வழங்கப்பட்டுள்ள சிறப்பு அதிகாரத்தில் உள்ள குறையாக கொள்ளமுடியாது, மாறாக இதனை தவறாகப் பயன்படுத்துபவர்களின் குறைபாட்டைத்தான் அது பிரதிபலிக்கிறது.

## *இஸ்லாத்தில் ஒரு ஆண் பெறும் வாரிசு -அனந்தரச் சொத்தில் அரைவாசியை பெண் பெறுவது ஏன்?*

இஸ்லாம் வருவதற்கு முன்பு பெண்களுக்கு வாரிசுரிமை பறிக்கப்பட்டிருந்தது. இருப்பினும், இஸ்லாம் வந்தபோது, வாரிசுரிமையில் பெண்களையும் உள்ளடக்கியது. உண்மையில், அவர்கள் ஆண்களுடன் ஒப்பிடும்போது சமமான அல்லது அதிக பங்குகளைப் பெறுகிறார்கள். சில சந்தர்ப்பங்களில், பெண்கள் வாரிசுப்பங்குகளை பெரும் நிலையில் அவை ஆண்களுக்கு கிடைக்காத சந்தர்ப்பங்கள் உண்டு. அதாவது அந்நிலைகளில் பெண்களே வாரிசுப்பங்குகளைப் பெறுகின்றனர். குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளபடி, வேறு சில நிலைகளில் உறவு முறை மற்றும் பரம்பரை ரீதியிலான நெருக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆண்கள் வாரிசுத் சொத்தில் அதிக விகிதத்தைப் பெறுவர். "இரு பெண்களுக்குரிய பங்கு போன்றது ஒரு ஆணுக்கு உண்டு என உங்கள் பிள்ளைகள் விடயத்தில் அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகிறான்". (அந்நிஸா : 11). ஒரு முஸ்லிம் பெண் தனது கணவரின் தந்தை இறக்கும் வரை இந்த விடயம் புரியவில்லை என்ற தனது அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டார். கணவனின் சகோதரி பெற்ற தொகையின் இரு மடங்கு தொகையை தனது கணவர் பெற்றார் என்று கூறுகிறாள். எனவே அவர் தனது சொந்த குடும்பத்திற்கு தேவையான பொருட்களை வாங்கவும், கார் வாங்கவும் இந்த வாரிசுச் சொத்தைப் பயன்படுத்தினார். அதே வேளை வீடு மற்றும் பிற தேவைகளை பூர்த்தி செய்வது கணவனின் பொறுப்பு என்பதனால், அவரது சகோதரி தனது வாரிசுத்சொத்தில் கிடைத்த பங்கின் மூலம் நகைகளை வாங்கி, மீதமுள்ள தொகையை வங்கியில் சேமித்து வைத்தார். அந்த நேரத்தில், இந்த தீர்ப்பின் பின்னால் உள்ள ஞானத்தை அவள் புரிந்துகொண்டு அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தினேன் என்று கூறினாள். பல சமூகங்களில் பெண்கள் வேலை

செய்து தங்கள் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ள முயன்றாலும், வாரிசுரிமையில் எவ்விதப் பாதிப்பையும் அது ஏற்படுத்திடமாட்டாது. எடுத்துக்காட்டாக, ஒருவர் கைபேசியை இயக்குவதற்கான அறிவுறுத்தல்களைப் பின்பற்றாது தனது கைபேசியில் கோளாறு –செயலிழப்பு- ஏற்பட்டால் அது அறிவுறுத்தல்களில் உள்ள குறைபாட்டை பிரதிபலிக்காது என்பதே யதார்த்தமாகும்.

## *இஸ்லாம், கணவன் தனது மனைவியை அடிப்பதற்கு ஏன் அனுமதிக்கிறது?*

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் வாழ்நாளில் ஒரு பெண்ணையும் அடிக்கவில்லை. அடிப்பதைப் பற்றி குறிப்பிடும் அல் குர்ஆன் வசனம், பெண்ணின் கீழ்ப்படியாமை (மாறுபாட்டை) (நுஷூஸ்) போன்ற சந்தர்ப்பங்களில் உடல் ரீதியான எவ்விதக் காயமும் ஏற்படாது தண்டிப்பதையே இது குறிக்கிறது. இந்த வகையில் அடிப்பதானது அமெரிக்காவின் சட்டத்தின் படி எந்தவொரு உடல் ரீதியான பாதிப்பையும் ஏற்படுத்தாத நிலையில் இது ஒரு அனுமதிக்கப்பட்ட ஒழுங்குமுறை என விவரிக்கப்பட்டுள்ளது. இது ஒரு பெரிய தீங்கைத் தடுக்கும் ஒரு நடவடிக்கையாகும். அதாவது இந்த விவகாரமானது ஒரு முக்கியமான பரீட்சையை தவறவிடாமல் இருக்க, ஆழ்ந்த உறக்கத்திலிருந்து குழந்தையின் தோளை அசைப்பது போன்றது.

ஒருவர், தன் மகள் யன்னல் ஓரத்தில் நின்று கொண்டு உயரமான இடத்திலிருந்து பாய்ந்து தற்கொலை செய்து கொள்ளப் போகிறாள் என கற்பனை செய்து பார்ப்போம். உடனே, எதேச்சையாக அவளைப் பாதுகாகப்பதற்காக அவரின் கைகள் அவளை நோக்கி நீலுவது மாத்திரமின்றி; அவளின் உயிருக்கு எந்த ஆபத்தும் வராமல் அவளை பினனோக்கி தள்ளுவான். ஆக ஒரு பெண்ணை அடித்தல் எனும் அனுமதியின் பின்னணியில் உள்ள நோக்கமும் இது போன்றதே.! அதாவது ஒரு பெண் தனது கணவனுக்கு கட்டுப்படாது, குடும்பத்தை அழித்து அவர்களின் குழந்தைகளின் எதிர்காலத்தை ஆபத்தில் ஆழ்த்துவதைத் தடுக்கும் கணவனின் முயற்சியாகவே 'பெண்களை அடித்தல்' எனும் அனுமதி வாசகத்தைப் புரிந்து கொள்ளல் வேண்டும்.

அல் குர்ஆன்வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளபடி, இந்த அனுமதியானது பல கட்டங்களுக்குப் பிறகு வருகிறது:

"எவர்கள் கணவருக்கு மாறு செய்வரார்கள் என்று அஞ்சுகிறீர்களோ அவர்களுக்கு உபதேசம் செய்யுங்கள், திருந்தாவிட்டால் படுக்கையில் அவர்களை வெறுத்து விடுங்கள், (அதிலும் திருந்தா விட்டால்) அவர்களுக்கு இலேசாக அடியுங்கள். அவர்கள் உங்களுக்கு கட்டுப்பட்டால் அவர்களுக்கு எதிராக எந்த வழியையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் உயர்ந்தவனும் பெரியவனாகவும் உள்ளான்". (அந்நிஸா : 34).

பொதுவாக ஒரு பெண்ணின் பலவீனத்தை கருத்திற்கொண்டு இஸ்லாம் குறித்த பெண்ணின் கணவன் மோசமாக நடந்து கொண்டால் நீதி கோரி முறையிடுவதற்கான உரிமையை அவளுக்கு வழங்கியுள்ளது.

இஸ்லாத்தில் திருமண உறவுகளின் அடித்தளம் அன்பு, அமைதி மற்றும் கருணை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது.

அல்லாஹ் கூறுகிறான் :
"இன்னும், நீங்கள் அவர்களிடம் ஆறுதல் பெறுவதற்குரிய (உங்கள்) மனைவியரை உங்களிலிருந்தே உங்களுக்காக அவன் படைத்திருப்பதும்; உங்களுக்கிடையே அன்பையும், கருணையையும் உண்டாக்கியிருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும். சிந்தித்து உணரக்கூடிய சமூகத்திற்கு நிச்சயமாக, இதில் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன". (அர்ரூம் : 21).

### *இஸ்லாம் பெண்ணை எவ்வாறு கண்ணியப்படுத்தியது?*

இஸ்லாம், ஏனைய மத நம்பிக்கைகளில் உள்ளது போன்று ஆதமின் பாவச் சுமையை சுமப்பதில் இருந்து பெண்களுக்கு விலக்கு அளித்து கௌரவித்தது மாத்திரமின்றி, அவர்களின் அந்தஸ்தை உயர்த்துவதில் மிகவும் கவனம் செலுத்தியுள்ளது.

இஸ்லாத்தில், அல்லாஹ் ஆதமுக்கு மன்னிப்பளித்து, வாழ்க்கையில் தவறு செய்தால் மனம் திருந்தி அவனிடம் எவ்வாறு மன்னிப்புக் கோருவது என்பதை கற்றுக் கொடுத்தான். இது குறித்து அல்லாஹ் பின்வருமாறு குறிப்பிடுகிறான் :
“பின்னர் ஆதம் தனது இரட்சகனிடமிருந்து சில வார்த்தைகளைப் பெற்று அதன் மூலம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அதனால் அவன் அவரை மன்னித்தான். நிச்சயமாக அவன்தான் மிக்க மன்னிப்பவனாகவும் நிகரற்ற அன்புடையோனுமாவான்". (அல் பகரா : 37).

பெண்களில் இயேசுவின் தாயார் (மேரியாள்) மர்யம் அலைஹஸ்ஸலாம் அவர்கள் பெயர் மாத்திரமே அல்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல் குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ள பல சம்பவங்களில் பெண்கள் முக்கிய பங்கு வகித்துள்ளனர். உதாரணமாக, ஸபாஃ நாட்டின் அரசி பல்கீஸ், ஸுலைமான் (சாலமன்) நபியுடன் சந்தித்த சம்பவம், இறுதியில் அவள் இஸ்லாத்தை மார்க்கமாக ஏற்று, அனைத்து உலகங்களின் இறைவனுக்கு அடிபணிபவதில் முடிந்தது. அல்குர்ஆன் இதனை பின்வருமாறு குறிப்பிடுகறிது :
"அவர்களை ஆட்சி செய்யும் ஒரு பெண்ணை நிச்சயமாக நான் காண்டேன். அவள் (தேவையான)அனைத்துப் பொருட்களும் (வளங்களும்) வழங்கப்பட்டுள்ளாள். மேலும் அவளுக்கு மகத்தானதொரு சிம்மாசனமும் உள்ளது" (அந்நம்ல் : 23).

முஹம்மது நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பெண்களுடன் கலந்தாலோசித்து அவர்களின் கருத்துக்களை பல சந்தர்பங்களில் கவனத்தில் கொண்டதாக இஸ்லாமிய வரலாறு விவரிக்கிறது. மேலும் அவர்கள் பெண்களை ஒழுக்கம் பேணி, ஆண்களைப் போல் பள்ளிக்குச் செல்ல அனுமதித்தார்கள், ஆனால் அவர்கள் வீட்டில் தொழுவது மிகவும் சிறப்பானது என்றிருந்தும் இவ்வனுமதியை வழங்கினார்கள். அத்துடன் பெண்களும் போர்களில் கலந்துகொண்டு போர்களில் காயமுற்றோருக்கு தாதிப்பணியை (முதலுதவிப்பணிகளை) மேற்கொள்வோராக இருந்ததுடன், வணிக பரிவர்த்தனைகளில் ஈடுபட்டதுடன், கல்வி மற்றும் அறிவுத் துறைகளில் முன்னேறினர்.

பண்டைய அரபு கலாச்சாரங்களுடன் ஒப்பிடுகையில் இஸ்லாம் பெண்களின் நிலையை பெரிதும் மேம்படுத்தியுள்ளது. புதிதாகப் பிறந்த பெண் குழந்தைகளை புதைக்கும் நடைமுறையை அது தடைசெய்து, அவர்களை தனியான ஆளுமைப் பண்புகளைப் பெற்றவர்களாக அங்கீகரித்தது. அத்துடன் திருமணத்தின் போது கணவன் மணக்கொடையை வழங்க வேண்டும் என்பதை விதித்து திருமண ஒப்பந்தத்தை ஒழுங்கு படுத்தி பெண்களின் உரிமையைப் பாதுகாத்தது. மேலும் வாரிசுரிமை, தனியான சொத்துரிமை, மற்றும் அவளது செல்வத்தை நிர்வகித்தல் ஆகியவற்றில் அவளது உரிமைகளை உறுதிப்படுத்துகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "பூரண ஈமானைப் பெற்ற விசுவாசி யாரெனில் சிறந்த பண்புகளுடையவரே. மேலும் உங்களில் சிறந்தவர் யாரெனில்,தங்களின் மணைவியரிடம் சிறந்தவரே". (ஆதாரம் : திர்மிதி).
அல்லாஹ் கூறுகிறான் :

"நிச்சயமாக முஸ்லிம்களான ஆண்களும், முஸ்லிம்களான பெண்களும், விசுவாசிகளான ஆண்களும், விசுவாசிகளான பெண்களும், (அல்லாஹ்வுக்கு) வழிபாடு செய்பவர்களான ஆண்களும், வழிபாடு செய்பவர்களான பெண்களும், உண்மையே கூறுபவர்களான ஆண்களும், உண்மையே கூறுபவர்களான பெண்களும், பொறுமையாளர்களான ஆண்களும், பொறுமையாளர்களான பெண்களும், உள்ளச்சத்தோடு (அல்லாஹ்வை) பயந்து நடக்கும் ஆண்களும், உள்ளச்சத்தோடு (அல்லாஹ்வை) பயந்து நடக்கும் பெண்களும், தானம் செய்பவர்களான ஆண்களும், தானம் செய்பவர்களான பெண்களும், நோன்பு நோற்பவர்களான ஆண்களும், நோன்பு நோற்பவர்களான பெண்களும், தங்கள் மர்மஸ்தானங்களைக் காத்துக் கொள்பவர்களான ஆண்களும், (மர்மஸ்தானங்களைக்) காத்துக் கொள்பவர்களான பெண்களும், அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூறுபவர்களான ஆண்களும், (அல்லாஹ்வை அதிகமாக) நினைவு கூறுபவர்களான பெண்களும் (ஆகிய) இவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான (நற்)கூலியையும் தயார் செய்து வைத்திருக்கிறான்". (அஹ்ஸாப் : 35). "நம்பிக்கை கொண்டவர்களே! பெண்களை (அவர்கள் மனப் பொருத்தம் இல்லாத நிலையில்) நீங்கள் பலவந்தப்படுத்தி அனந்தரமாகக்

கொள்வது உங்களுக்கு கூடாது. பகிரங்கமான கெட்ட செயலை அவர்கள் செய்தாலொழிய, பெண்களுக்கு நீங்கள் கொடுத்ததிலிருந்து சிலவற்றை எடுத்துக் கொள்ளும் பொருட்டு அவர்களுக்குத் (துன்பம் கொடுத்து) தடுத்து வைக்காதீர்கள்; இன்னும், அவர்களுடன் கனிவோடு நடந்து கொள்ளுங்கள் - நீங்கள் அவர்களை வெறுத்தால் (அது சரியில்லை ஏனெனில்) நீங்கள் ஒன்றை வெறுக்கக் கூடும், அதில் அல்லாஹ் ஏராளமான நன்மைகளை ஏற்படுத்தி விடலாம்". (அந்நிஸா: 19). "மனிதர்களே! உங்கள் இறைவனுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள், அவன் உங்கள் யாவரையும் ஒரே ஆத்மாவிலிருந்து படைத்தான், அவரிலிருந்தே அவர் மனைவியையும் படைத்தான்; பின்னர் இவ்விருவரிலிருந்து, அநேக ஆண்களையும் பெண்களையும் (வெளிப்படுத்தி உலகில்) பரவச் செய்தான்; ஆகவே, அல்லாஹ்வுக்கே பயந்து கொள்ளுங்கள்; அவனைக் கொண்டே நீங்கள் ஒருவருக்கொருவர் (தமக்குரிய உரிமைகளைக்) கேட்டுக் கொள்கிறீர்கள். மேலும் (உங்கள்) இரத்தக் கலப்புடைய உறவினர்களையும் (ஆதரியுங்கள்) - நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது கண்காணிப்பவனாகவே இருக்கின்றான்". (அந்நிஸா: 1). "ஆணாயினும், பெண்ணாயினும் முஃமினாக இருந்து யார் (சன்மார்க்கத்திற்கு இணக்கமான) நற் செயல்களைச் செய்தாலும், நிச்சயமாக நாம் அவர்களை (இவ்வுலகில்) மணமிக்க தூய வாழ்க்கையில் வாழச் செய்வோம்; இன்னும் (மறுமையில்) அவர்களுக்கு அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றிலிருந்து மிகவும் அழகான கூலியை நிச்சயமாக நாம் கொடுப்போம்". (நஹ்லு : 97). "அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும் நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கின்றீர்கள்". (அல்பகரா:187). "இன்னும், நீங்கள் அவர்களிடம் ஆறுதல் பெறுதற்குரிய (உங்கள்) மனைவியரை உங்களிலிருந்தே உங்களுக்காக அவன் படைத்திருப்பதும் உங்களுக்கிடையே அன்பையும், கருணையையும் உண்டாக்கியிருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும். சிந்தித்து உணரக்கூடிய சமூகத்திற்கு நிச்சயமாக இதில் (பல) அத்தாட்சிகள் இருக்கின்றன". (அர்ரூம் : 21). "நபியே! பெண்கள் விடயத்தில் அவர்கள் உம்மிடம் மார்க்கத் தீர்ப்புக் கோருகின்றனர். அவர்கள் விடயத்தில் அநாதைப் பெண்களுக்கு விதிக்கப்பட்டதை அவர்களுக்கு வழங்காது, அவர்களை மணந்து கொள்ளவிரும்பும் விடயத்திலும் பலவீனமாக்கப்பட்ட சிறுவர்கள் விடயத்திலும் அநாதைகள் விடயத்தில் நீதியை நிலைநாட்டுவது குறித்தும் இவ்வேதத்தில் உங்களுக்கு ஓதிக் காட்டப்படுபவற்றிலும் அல்லாஹ் உங்களுக்கு தீர்ப்பளிப்பான் என்று நபியே நீர் கூறுவீராக. நீங்கள்

நன்மையில் எதைச்செய்தாலும் நிச்சயமாக அல்லாஹ் அதனை நன்கறிந்தவனாக இருக்கிறான். ஒரு பெண் தனது கனவனிடம் மாறுபாட்டை அல்லது புறக்கணிப்பை அஞ்சினால் அவ்விருவரும் தமக்கிடையே நல்லிணக்கம் செய்து கொள்வது அவர்களுக்கிடையில் குற்றமில்லை. நல்லிணக்கமே சிறந்ததாகும். ஆத்மாக்கள் கஞ்சத்தனத்திற்கு உட்படுத்தப்பட்டுள்ளன. நீங்கள் தாராளத் தன்மையுடன் நடந்து அல்லாஹ்வையும் அஞ்சி நடந்தால் நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கிறான்". (நிஸா :127-128).

அல்லாஹ், பெண்களுக்காக செலவிடவும், குடும்பத்திற்கு பெண்கள் மீது எந்த நிதிப் பொறுப்புக்களை சுமத்தாது தங்கள் செல்வத்தைப் பாதுகாக்கவும் ஆண்களுக்கு கட்டளையிட்டுள்ளான். இஸ்லாம் பெண்களின் தனித்துவத்தையும் அடையாளத்தையும் பாதுகாத்து, திருமணத்திற்குப் பிறகும் அவர்களின் குடும்பப் பெயரை பாதுகாத்துக்கொள்ள அனுமதித்தது.

### *இயேசு விபச்சாரியை மன்னித்திருக்கும் போது முகம்மது நபி விபச்சாரத்திற்கான தண்டனையை நிலைநாட்டியது ஏன்?*

இந்த விவகாரத்தைப் பொறுத்தவரை, விபச்சாரக் குற்றத்திற்கான தண்டனையை வலுப்படுத்தியதில் யூதம், கிறிஸ்தவம் மற்றும் இஸ்லாம் ஆகிய மதங்களிக்கிடையே தெளிவான உடன்பாடு உள்ளது. (பழைய ஏற்பாடு, லேவியராகமம் 20:10-18). கிறித்துவத்தில், இயேசு அவர்கள் விபச்சாரத்தின் கருத்து தொடர்பாக அழுத்தமாக குறிப்பிட்டதுடன், அதனை உடல் ரீதியிலான செயலுடன் மட்டுப்படுத்தாது அதனை தார்மீக அம்சத்துடன் தொடர்புபடுத்தி குறிப்பிடுகிறார். (புதிய ஏற்பாடு, மத்தேயு 5:27-30). கிறிஸ்தவம், விபச்சாரம் செய்பவர்கள் கடவுளின் (அல்லாஹ்வின்) ராஜ்யத்தைப் பெறுவதற்கு தகுதியற்றவர்கள் எனக் கூறி விபச்சாரத்தை தடை செய்கிறது. இதன் பிறகு அவர்கள் நரகத்தில் நித்திய தண்டனை பெறுவது தவிர வேறுவழி கிடையாது. (புதிய ஏற்பாடு, 1 கொரிந்தியர் 6:9-10). இந்த வாழ்க்கையில் விபச்சாரத்திற்கான தண்டனை, மோசேயின் (மூஸாவின்) சட்டத்தின்படி, கல்லெறிந்து கொலைசெய்வதாகும். (புதிய ஏற்பாடு, யோவான் 8:3-11). (புதிய ஏற்பாடு, மத்தேயு 5:27-30) (புதிய ஏற்பாடு, 1 கொரிந்தியர் 6:9-10) (புதிய ஏற்பாடு, யோவான் 8:3-11) இயேசு விபச்சாரியை

மன்னித்த சம்பவமானது உண்மையில் யோவான் நற்செய்தியின் பழமையான கையெழுத்துப் பிரதிகளில் இல்லை என்பதை இன்றைய விவிலிய அறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பினும் நவீன மொழிபெயர்ப்புக்களால் பின்னர் இந்த விடயம் சேர்க்கப்பட்டுள்ளது. (https://www.alukah.net/sharia/ 0/82804/). இவை அனைத்தையும் விட முக்கியமானது என்னவென்றால், இயேசு தனது பிரச்சாரப்பணியின் துவக்கத்தில் மோஸே (மூஸா) மற்றும் தீர்க்கதரிசிகளின் சட்டத்திட்டங்களை ஒழிக்க வரவில்லை என்றும், அவற்றை அமுல்படுத்தவே வந்ததாக அறிவித்தார். மேலும் மோஸேயின் (நியாயப்பிரமாணத்தின்) சட்டதிட்டங்களில் ஒரு புள்ளி வெற்றிடமாவதை விட வானமும் பூமியும் அழிந்து போவது எளிது என லூக்காவில் குறிப்பிடப்பட்டுள்ளது. (புதிய ஏற்பாடு, லூக்கா 16-17). இதன் படி விபச்சாரம் செய்த பெண்ணை தண்டிக்காமல் விட்டு விட்டு மோசேயின் (மூஸாவின்) சட்டத்தை இயேசு செல்லுபடி அற்றதாக மாற்றுவது சாத்தியமில்லை. விபச்சார சம்பவத்தை அதன் நிகழ்வை உறுதிப்படுத்தும் வகையில் விவரிக்கும் நான்கு சாட்சிகளின் சாட்சியத்தின் அடிப்படையில் தண்டனை நிறைவேற்றப்படும். ஒரு ஆணும் பெண்ணும் ஒரே இடத்தில் இருப்பது மட்டும் தண்டனை நிறைவேற்றப்படுவதற்கான அடிப்படையாகக் கொள்ளப்பட மாட்டாது. அத்துடன் சாட்சிகளில் ஒருவர் தங்கள் சாட்சியத்தை திரும்பப் பெற்றால், தண்டனை நிறைவேற்றப்படாது நிறுத்தப்படும். வரலாறு முழுவதும் இஸ்லாமிய சட்டத்தில் விபச்சாரத்திற்கான தண்டனைகளை நிறுவுவதற்கான குறைவான மற்றும் அரிதான தன்மையை இது தெளிவுபடுத்துகிறது, ஏனெனில் இது மேற்குறிப்பிடப்பட்ட வழியில் தவிர நிரூபிக்கப்படமாட்டாது, அத்துடன் இது ஒரு சிரமமான விடயமும் ஆகும். அதாவது குற்றவாளியின் ஒப்புதல் வாக்குமூலத்தைத் தவிர இதற்கான தண்டனையை நடைமுறைப்படுத்துவது கிட்டத்தட்ட சாத்தியமற்றது என்பதே யதார்த்தமாகும்.

-நான்கு சாட்சிகளின் சாட்சியத்தின் அடிப்படையிலன்றி –தவறு செய்தவர்களில் ஒருவரின் ஒப்புதலின் அடிப்படையில் விபச்சாரத்திற்கான தண்டனை நிறைவேற்றப்படும் சந்தர்ப்பத்தில் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொள்ளாத மற்ற தரப்பினருக்கு எந்த தண்டனையும் கிடையாது.

என்றாலும் அல்லாஹ் இவ்வாறான குற்றச் செயல்களை செய்வோர்

மீள்வதற்காக தவ்பாவின் (பாவமீட்சிக்கான) கதவை திறந்தே வைத்துள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :
"எவர்கள் அறியாமையின் காரணமாக பாவம் செய்து, பின்பு விரைவாகவே மன்னிப்புத் தேடுகிறார்களோ அவர்களுக்கே அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு உண்டு. இவர்களுக்கே அல்லாஹ் பாவமன்னிப்பு வழங்குகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனாகவும் ஞானமிக்கவனாகவும் இருக்கிறான்". (அந்நிஸா: 17). "எவரேனும், ஒரு பாவத்தைச் செய்துவிட்டு அல்லது தனக்குத்தானே தீங்கிழைத்துக்கொண்டு, பின்னர் (அதிலிருந்து விலகி, உண்மையாகவே கைசேதப்பட்டு) அவன் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால் அல்லாஹ்வை (அவனுடைய குற்றங்களை) மிக மன்னிப்பவனாகவும், (அவன் மீது) மிகக் கருணையுடையவனாகவும் காண்பான்". (அந்நிஸா: 110). "அல்லாஹ் உங்களுக்கு சட்டங்களை இலகுபடுத்தவே விரும்புகிறான். மனிதன் பலவீனனாக படைக்கப்பட்டுள்ளான்". (அந்நிஸா:28). இஸ்லாம் மனிதனின் இயற்கையான விருப்பங்களை (தேவைகளை) அங்கீகரிக்கரித்தது மாத்திரமன்றி இந்த இயற்கையான உள்ளுணர்வை திருமணம் எனும் முறையான வழிமுறை மூலம் நிறைவேற்றுவதற்கான ஒழுங்குகளை செய்துள்ளது. இதனால் இஸ்லாம் திருமணத்தை நேரகாலத்துடன் செய்து கொள்ளுமாறு ஊக்குவிக்கிறது. திருமணம் செய்வதற்கு தடையாக பொருளாதார ரீதியாக விசேட சூழ்நிலைகள் காணப்படின் திருமணத்தை செய்துகொள்ள பொது கருவூலத்திலிருந்து (பைத்துல்-மால்) உதவி வழங்குகிறது. இதன் மூலம் இஸ்லாம் சமூகத்தில் ஆபாசம் மற்றும் மானக்கேடான செயற்பாடுகள் பரவுவதற்கான அனைத்து வழிகளையும் தூய்மைப்படுத்த ஆர்வம் கொண்டுள்ளது. அத்துடன் மனிதனில் காணப்படும் சக்தியை ஒழுங்குபடுத்தி அதனை நன்மையின் பால் செலுத்துவதற்கான உயர்ந்த இலக்குகளை வகுத்துள்ளது. அது மாத்திரமின்றி ஓய்வு நேரத்தை அல்லாஹ்வை நெருங்குவதில் ஈடுபடுத்திட ஊக்குவிக்கிறது. இந்த நடவடிக்கைகள் யாவும் விபச்சாரம் போன்ற குற்றங்களை செய்து அதற்கான நியாயம் கற்பிப்பதை தடுக்கின்றன. இத்தனைக்குமப்பால், விபச்சாரம் நான்கு சாட்சிகளின் சாட்சியத்தின் மூலம் நிரூபிக்கப்படும் வரை தண்டனை விதிக்க இஸ்லாம் அவசரப் படுவதில்லை. குற்றவாளி குறித்த குற்றத்தை வெளிப்படையாகச் செய்து, அதன்மூலம் இத்தகைய கடுமையான தண்டனைக்கு உட்படும் சந்தர்ப்பங்களில்

தவிர, ஏனைய சந்தர்ப்பங்களில் நான்கு சாட்சிகள் இருப்பது அரிதானது என்பது கவனிக்கத்தக்கது. இந்த உன்னத சம்பவம் நபிகளாரின் கருணையையும், தெய்வீக சட்டத்தின் முழுமையையும் எடுத்துக் காட்டுகிறது. அத்துடன் இஸ்லாத்தைப் பொறுத்தவரை விபச்சாரத்தில் ஈடுபடுவது இரகசியமாகவோ அல்லது வெளிப்படையாகவோ செய்தாலும் அது பெரும் பாவங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தானாக முன்வந்து ஒரு பெண் விபச்சாரத்தின் மூலம் கர்ப்பமுற்ற நிலையில் தான் விபச்சாரத்தில் ஈடுபட்டதை ஒப்புக்கொண்ட சம்பவம் ஒன்று ஹதீஸில் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவள் விபச்சாரத்திற்கு விதிக்கப்பட்ட தண்டனையை தனக்கு நிறைவேற்ற வேண்டும் என்று கோரினாள். அப்போது நபியவர்கள் அவளின் பொறுப்பாளரை அழைத்து அவளை சிறந்த முறையில் கவனித்துக்கொள்வீராக என்று கூறினார்கள். இது இஸ்லாமிய சட்டதிட்டத்தின் பரிபூரணத் தன்மைக்கும், படைப்பாளனான அல்லாஹ் தனது அடியார்கள் மீது கொண்டுள்ள கருணைக்கும் சான்றாக அமைந்துள்ளது.

நபியவர்கள் அவளிடம் நீ குழந்தையைப் பெற்ற பின் வருவீராக என்று கூறினார்கள். பின் அவள் குழந்தையைப் பெற்றெடுத்ததன் பின் வந்த போது உனது குழந்தைக்கு பால் மறக்கடிக்கச் செய்ததன் பின் மீண்டும் வருவீராக என்று கூறினார்கள். குழந்தை பால் குடி மறந்ததன் பின் அவள் நபியவர்களிடம் வந்து தனக்கு தண்டைனை நிறைவேற்றுமாறு கோரவே, அவளது வற்புறுத்தலின் பேரில், பரிந்துரைக்கப்பட்ட தண்டனை நிறைவேற்றப்பட்டது. தன்னைக் குற்றத்திலிருந்து தூய்மைப் படுத்திக் கொள்ள வேண்டும் என்ற அவளது உறுதியைக் கண்ட நபிகளார் ‘அவளுடைய தவ்பாவை மதீனாவின் எழுபது பேருக்கு பிரித்துக் கொடுத்தால், அது அவர்கள் அனைவருக்கும் போதுமானதாக இருக்கும்’ என்று கூறினார்கள்.எனவே இந்த உன்னத சந்தர்ப்பத்திலும் நபியவர்களின் கருணை வெளிப்பட்டதைதெளிவாகக் காண முடிகிறது.!

# இறை நீதி :

### *நீதி மற்றும் நியாயம் குறித்த இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

மக்களிடம் நீதியை நிலைநாட்டுமாறும் அளவை நிறுவைகளில் நியாயம் பேணுமாறும் இஸ்லாம் அழைப்பு விடுக்கிறது.

அல்லாஹ் கூறுகிறான் :
"என் மக்களே! அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனைத் தவிர உங்களுக்குவணக்கத்திற்குரியவேறுஇறைவனில்லை.உங்கள்இறைவனிடமிருந்து நிச்சயமாக உங்களுக்குத் தெளிவான அத்தாட்சி வந்திருக்கிறது. ஆகவே, அளவை முழுமையாக அளந்து எடையை சரியாக நிறுங்கள். (நீங்கள் கொடுக்க வேண்டிய) மனிதர்களுடைய பொருள்களில் எதையும் குறைத்து விடாதீர்கள். பூமியில் (சமாதானமும் அமைதியும் ஏற்பட்டு) ^+ர்திருந்திய பின்னர் அதில் குழப்பமும் கலகமும் செய்யாதீர்கள். மெய்யாகவே நீங்கள் (என் வார்த்தையை) நம்புபவர்களாக இருந்தால் இவைதான் உங்களுக்கு நன்மை பயக்கும்" என்று கூறினார். (அஃராப் : 85). "நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக்காக நீதியை நிலை நிறுத்துவோராகவும், அதற்கு சாட்சியாளர்களாகவும் இருங்கள். ஒரு கூட்டத்தின் மீதுள்ள வெறுப்பு நீங்கள் நீதி செலுத்தாதிருக்க உங்களைத் தூண்ட வேண்டாம். நீங்கள் நீதி செலுத்துங்கள் அதுவே பயபக்திக்குமிக நெருக்கமானதாகும். மேலும் அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாவான்". (மாஇதா : 8). "(நம்பிக்கையாளர்களே! உங்களிடம் நம்பி ஒப்படைக்கப்பட்ட) அமானிதப் பொருள்களை அதன் உரிமையாளர்களிடம் நீங்கள் ஒப்படைத்து விடும்படியும், மனிதர்களுக்கிடையில் நீங்கள் தீர்ப்புக் கூறினால் (பாரபட்சமின்றி) நீதமாகவே தீர்ப்பளிக்கும்படியும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான். உங்களுக்கு அல்லாஹ் செய்யும் இவ்வுபதேசம் மெய்யாகவே எவ்வளவு சிறந்தது! நிச்சயமாக அல்லாஹ் செவியுறுபவனாக, உற்று நோக்குபவனாக இருக்கிறான்". (நிஸா : 58). "(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் நீதி செலுத்தும்படியாகவும், நன்மை செய்யும்படியாகவும், உறவினர்களுக்கு(ப் பொருள்) கொடுத்து உதவி

செய்யும்படியாகவும் நிச்சயமாக அல்லாஹ் (உங்களை) ஏவுகிறான். மானக்கேடான காரியங்கள், பாவம், அநியாயம் ஆகியவற்றிலிருந்து (உங்களை) அவன் தடுக்கிறான். நீங்கள் நல்லுணர்வு பெறுவதற்காக அவன் உங்களுக்கு (இப்படி) நல்லுபதேசம் செய்கிறான்". (அந்நஹ்ல் : 90). "ஈமான் கொண்டவர்களே! உங்கள் வீடுகளல்லாத (வேறு) வீடுகளில், அ(வ்வீட்டிலுள்ள)வர்களிடம் அனுமதி பெற்று, அவர்களுக்கு ஸலாம் சொல்லாதவரை (அவற்றினுள்) பிரவேசிக்காதீர்கள் - (அவ்வாறு நடப்பதுவே) உங்களுக்கு நன்மையாகும்; நீங்கள் நற்போதனை பெறுவதற்கு (இது உங்களுக்குக் கூறப்படுகிறது). அவ்வீட்டில் எவரையுமே நீங்கள் காணாவிடில், உங்களுக்கு அனுமதி கிடைக்கும் வரை அதில் நுழையாதீர்கள். "நீங்கள் திரும்பிவிடுங்கள்" என்று (அவ்வீட்டில் ) உங்களுக்குக் கூறப்பட்டால், அவ்வாறே நீங்கள் (தாமதிக்காது) திரும்பி விடுங்கள். இதுவே உங்களுக்கு மிக பரிசுத்தமானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன் ஆவான்". (அந்நூர் :27, 28). "நம்பிக்கையாளர்களே! பாவி ஒருவன் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டுவந்தால், (அதன் உண்மையை அறியும் பொருட்டு அதைத்) தீர்க்க விசாரணை செய்து கொள்ளுங்கள். (இல்லையெனில், அவனுடைய சொல்லை நம்பி) அறியாமையால் ஒரு கூட்டத்திற்கு நீங்கள் தீங்கிழைத்து விட்டுப் பின்னர், நீங்கள் செய்தவற்றைப் பற்றி நீங்களே துக்கித்துக் கவலைப்படும் படியும் நேர்ந்து விடும்". (அல் ஹுஜுராத் : 6).

"மேலும், இறைநம்பிக்கையாளர்களில் இரு குழுவினர் தங்களுக்குள் போரிட நேர்ந்தால் அவர்களிடையே சமரசம் செய்து வையுங்கள். பிறகு, அவர்களில் ஒரு குழுவினர் மற்றொரு குழுவினரிடம் வரம்புமீறி நடந்து கொண்டால், வரம்புமீறிய குழுவினருடன் அவர்கள், அல்லாஹ்வின் கட்டளையின்பால் திரும்பும் வரை அவர்களுடன் போர் புரியுங்கள். அப்படி அவர்கள் திரும்பிவிட்டால், அவர்களிடையே நீதியுடன் சமரசம் செய்து வையுங்கள்; இன்னும் நீதி செலுத்துங்கள். திண்ணமாக, அல்லாஹ் நீதிசெலுத்துபவர்களை நேசிக்கின்றான். நிச்சயமாக நம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்களே! ஆகவே, உங்கள் சகோதரர்களுக்கிடையில் ஒழுங்கை(யும் சமாதானத்தையும்) நிலை நிறுத்துங்கள். நீங்கள் அருள் செய்யப்படும் பொருட்டு அல்லாஹ்வுக்குப் பயந்து நடங்கள்". (அல் ஹுஜுராத் :9, 10). "இறைநம்பிக்கையாளர்களே, (முஃமின்களே!) எந்த ஆண்களும் மற்றெந்த ஆண்களையும் பரிகாசம் செய்ய

வேண்டாம். ஒரு வேளை அவர்கள் (பரிகசிக்கப்படுவோர்), இவர்களைவிட மேலானவர்களாக இருக்கலாம். எந்தப் பெண்களும் மற்றெந்தப் பெண்களையும் பரிகாசம் செய்ய வேண்டாம். ஒருவேளை அவர்கள் இவர்களைவிடச் சிறந்தவர்களாயிருக்கலாம். நீங்கள் ஒருவரையொருவர் குத்திப் பேசாதீர்கள். ஒருவருக்கொருவர் மோசமான பட்டப் பெயர்களைச் சூட்டி அழைக்காதீர்கள். இறைநம்பிக்கை கொண்டதன் பின்னர் மோசமான பெயர்களைச் சூட்டுவது மிகவும் கெட்ட விஷயமாகும். எவர்கள் இந்த நடத்தையைக் கைவிடவில்லையோ அவர்கள்தாம் கொடுமைக்காரரகள். விசுவாசிகளே! (தவறான) எண்ணத்தில் பெரும்பாலனவற்றை நீங்கள் தவிர்த்துக் கொள்ளுங்கள், (ஏனெனில்,) நிச்சயமாக எண்ணத்தில் சில பாவமாகும், (எவருடைய குறைகளையும்) நீங்கள் துருவித் துருவி விசாரித்துக் கொண்டிருக்கவும் வேண்டாம், உங்களில் சிலர் சிலரைப் புறம் பேசவும் வேண்டாம், உங்களில் யாதொருவர், தன்னுடைய சகோதரரின் மாமிசத்தை (அவர் இறந்து) சவமாயிருக்கும் நிலையில் புசிக்க விரும்புவாரா? அப்போது, அதனை நீங்கள் வெறுத்து விடுவீர்கள். இன்னும், நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள், நிச்சயமாக அல்லாஹ் (பாவத்திலிருந்து தவ்பாச் செய்து மீள்வோரின்) பாவமீட்சியை மிகுதியாக ஏற்பவன் மிகக் கிருபையுடையவன்". (ஹுஜுராத்: 11, 12). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "தான் விரும்புவதையே தனது சகோதரருக்கும் விரும்பாத வரை உங்களில் ஒருவர் பரிபூணமான விசுவாசியாக மாட்டார்". (ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்).

## இஸ்லாத்தில் உரிமைகள் :

### *அடிமை முறை குறித்த இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

இஸ்லாத்திற்கு முன்பே அடிமை முறையானது பன்னெடுங்காலாமாக எந்த சட்ட வரைமுறைகளுமின்றி மக்களிடத்தில் பரவலாக காணப்பட்டது. அடிமைத்தனத்திற்கு எதிரான இஸ்லாத்தின் போராட்டமானது, ஒட்டுமொத்த சமூகத்தின் பார்வை மற்றும் மனநிலையை மாற்றுவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. இதனால் விடுதலைபெற்ற அடிமைகள் ஆர்ப்பாட்டங்கள், வேலைநிறுத்தங்கள், கீழ்ப்படியாமை அல்லது இனப் புரட்சிகள் போன்றவற்றை கைக்கொள்வதற்கான எந்தத் தேவையுமின்றி சமூகத்தின் பூரண செயற்பாட்டு உறுப்பினர்களாக இருப்பர். இந்த வெறுக்கத்தக்க முறைமையை மிக விரைவாகவும் சாத்வீக வழிகளிலும் ஒழிப்பது இஸ்லாத்தின் குறிக்கோளாக காணப்பட்டது. ஆட்சியாளர்கள் தங்கள் குடிமக்களை அடிமைகளாக நடத்துவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. ஏனெனில் இஸ்லாம் ஆட்சியாளர்களுக்கும் ஆளப்படுவோருக்குமான (குடிமக்களுக்குமான) உரிமைகள் மற்றும் கடமைகளை சுதந்திரம் மற்றும் நீதியின் எல்லைக்குள் நின்று அனுபவிப்பதற்கு அனைவருக்கும் உத்தரவாதம் வழங்கியிருக்கிறது. குற்றப்பரிகாரங்கள், தர்மங்கள் செய்வதற்கான வாய்ப்புகளை அளிப்பதன் மூலம் அடிமைகள் படிப்படியாக விடுவிக்கப்பட்டனர். அத்துடன் அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ்வை நெருங்கும் வழிமுறைகளில் ஒன்றாக அடிமைகளை உரிமையிடலை ஆக்கி, இவ்வாறான நற்காரியங்களில் விரைவாக செயற்படுவதற்கும் தூண்டியது. தன் எஜமான் மூலம் ஒரு குழந்தையைப் பெற்றுக்கொடுத்த ஒரு அடிமைப் பெண் மீண்டும் அடிமையாக விற்கப்படாது, அவள் தன் எஜமானன் இறந்தவுடன் தானாகவே சுதந்திரம் பெறுபவளாக இருந்தாள். முன்னைய சமூக வழக்காறுகளுக்கு மாறாக, இஸ்லாம் அடிமைப்பெண்ணின் குழந்தையை தனது சுதந்திரவானனான தந்தையுடன் இணைப்பதை சட்டபூர்வமாக்கியது. அதே போல் எஜமானுக்கு குறிப்பிட்ட தொகையை செலுத்துவதன் மூலம் அல்லது குறிப்பிட்ட காலம் ஊழியம் செய்வதன் மூலம் தனது அடிமைத்தலையிலிருந்து தன்னை விடுவிக்கும் சட்ட அனுமதியையும் வழங்கியது.

அல்லாஹ் கூறுகிறான் :
"உங்களின் அடிமைகளில் எவர்கள் உரிமைப்பத்திரம் எழுதிக்கேட்கிறார்களோ, அவர்களிடம் நீங்கள் ஏதேனும் நன்மையை அறிந்தால் அவர்களுக்கு எழுதிக்கொடுங்கள்". (அந்நூர்: 33). மார்க்கத்தையும், உயிரையும், உடமையையும் பாதுகாப்பதற்காக போரில் ஈடுபட்டு சிறைபிடிக்கப்பட்ட எதிரிக் கைதிகளுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுமாறு தனது தோழர்களுக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் பணித்தார்கள். கைதிகளை ஒரு தொகைப்பணத்தை செலுத்துவதன் மூலம், அல்லது சிறார்களுக்கு எழுதவும் வாசிக்கவும் கற்றுக்கொடுப்பதன் மூலம் தமது சுதந்திரத்தை பெற்றுக்கொள்வதற்கான வாய்ப்பு காணப்பட்டது. அதே போல் இஸ்லாத்தில் கைதிகள் முறைமையைப் பொறுத்தவரை அவர்களில் எந்தக் குழந்தைகளும் தமது தாயிடமிருந்தோ, அல்லது தனது சகோதரனிடமிருந்தோ பிரித்து வைக்கப்படவில்லை.

போரில் சரணடையும் போராளிகளுடன் கருணையுடன் நடந்து கொள்ளுமாறும் இஸ்லாம் பணித்தது.

அல்லாஹ் கூறுகிறான் :
"(நபியே!) இணைவைத்து வணங்குபவர்களில் எவனும் உம்மிடம் பாதுகாப்பைக் கோரினால், அல்லாஹ்வுடைய வசனங்களை அவன் செவியுறும்வரை அவனுக்கு பாதுகாப்பு அளிப்பீராக. (அவன் அதை செவியுற்றும் நம்பிக்கை கொள்ளாவிட்டால்) அவனை அவனுக்கு பாதுகாப்புள்ள (வேறு) இடத்திற்கு அனுப்பிவிடுவீராக! ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அறிவில்லாத மக்கள் ஆவர்".(அத்தவ்பா : 6).

அதே போல் அடிமைகள் தங்களை விடுவித்துக்கொள்ள முஸ்லிம்களின் பொது நிதி அல்லது அரச கரூவுலத்திலிருந்து உதவி செய்ய முடியும் என்றும் இஸ்லாம் ஆணை பிறப்பித்தது. இந்த வகையில் நபியவர்களும் அவர்களின் தோழர்களும் அரச பொது நிதியிலிருந்து இதற்கான உதவிகளை வழங்கினர்.

## *பெற்றோர் மற்றும் உறவினர்களின் உரிமைகள் பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?*

அல்லாஹ் கூறுகிறான் :

"(நபியே!) உமது இறைவன் தன்னைத் தவிர (மற்றெவரையும்) வணங்கக் கூடாதென்றும், தாய் தந்தைக்கு உபகாரம் புரியும் படியும் கட்டளையிட்டிருக்கிறான். உம்மிடம் இருக்கும் அவர்களில் ஒருவரோ அல்லது இருவருமோ முதுமையை அடைந்து விட்ட போதிலும் அவர்களை விரட்டவும் வேண்டாம்; அவர்களை (நிந்தனையாகச்) '^+' என்றும் சொல்லவும் வேண்டாம். அவர்களிடம் (எதைக் கூறியபோதிலும்) மிக்க மரியாதையாக(வும் அன்பாகவுமே) பேசுவீராக. அவர்களுக்கு மிக்க அன்புடன் பணிந்து நடப்பீராக! மேலும், "என் இறைவனே! நான் குழந்தையாக இருந்த பொழுது (மிக்க அன்பாக) என்னை அவர்கள் வளர்த்துப் பாதுகாத்தவாறே நீயும் அவ்விருவர் மீது அன்பும் அருளும் புரிவாயாக!" என்றும் பிரார்த்திப்பீராக!".(அல் இஸ்ரா :23, 24).

"மனிதன் தன் தாய் தந்தைக்கு உபகாரம் புரியும் படி நாம் அவனுக்கு நல்லுபதேசம் செய்தோம். அவனுடைய தாய், சிரமத்துடனேயே அவனை (கர்ப்பத்தில்) சுமந்திருந்து சிரமத்துடனேயே பிரசவிக்கிறாள். அவள் கர்ப்பமானதிலிருந்து, அவன் பால்குடி மறக்கும் வரை, முப்பது மாதங்கள் (மிக்க சிரமத்துடன்) செல்கின்றன. அவன் வாலிபமாகி நாற்பது வயதையடைந்தால் "என் இறைவனே! நீ என் மீதும், என் தாய் தந்தை மீதும் புரிந்த அருளுக்காக உனக்கு நான் நன்றி செலுத்தி, உன் திருப்தியை அடையக்கூடிய நற்செயல்களைச் செய்யும்படி(யான நல்லறிவை) நீ எனக்குத் தந்தருள்வாயாக! எனக்கு உதவியாக இருக்கும்படி என் குடும்பத்தை ^+ர்திருத்தி வைப்பாயாக. நிச்சயமாக நான் உன்னிடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டு விட்டேன். (உனக்கு) முற்றிலும் வழிபட்டவர்களில் நானும் ஒருவன்" என்று கூறுவான்". (அல்அஹ்காப்: 15). "உறவினர்களுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும் அவரவர்களுடைய உரிமைகளைக் கொடுத்து வரவும். (செல்வத்தை) அளவு கடந்து வீண் செலவு செய்யவேண்டாம்". (அல் இஸ்ரா : 26).

### அண்டைவீட்டார் உரிமைகள் குறித்த இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன?

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன் என்று (மூன்று முறை) நபி (ஸல்) அவர்கள கூறினார்கள். அப்போது அவன் யார்? அல்லாஹ்வின் தூதரே! என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் எவனுடைய தீங்கிலிருந்து அவனுடைய அண்டை வீட்டார் பாதுகாப்பு பெறவில்லையோ அவன்தான் என்று பதிலளித்தார்கள்". (புஹாரி, முஸ்லிம்). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அண்டைவீட்டாரே தனது அண்டைவீட்டாரின் சொத்தை வாங்குவதற்கு மிகவும் அருகதை உடையவர். (வேறு நபர் ஒருவர் குறித்த சொத்தை உடமையாக்கிக்கொண்டால் அதனை பலவந்தமாக எடுப்பதற்கும் உரிமைபெற்றவராக அண்டை வீட்டார் மாறிவிடுகிறார்;). குறித்த நிலத்திற்கு செல்லும் பாதை ஒன்றாக இருந்து அண்டைவீட்டார் இல்லாதிருந்தால் அவருக்காக காணி உரிமையாளர் எதிர்பார்த்திருத்தல் வேண்டும்" (முஸ்னதுல் இமாம் அஹ்மத்). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "அபூதர்ரே! நீ குழம்பு வைத்தால் அதில் தண்ணீரை அதிகப்படுத்து! உன் பக்கத்து வீட்டாரை (அதைக் கொடுத்து) கவனித்துக் கொள்!". (ஆதாரம் : முஸ்லிம்). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஒருவரிடம் நிலமிருந்து அதனை விற்க நாடினால் அதனை தனது அண்டைவீட்டாரிடம் முன்வைக்கட்டும்" (ஆதாரம் இப்னு மாஜஹ், இது ஆதாரபூர்வமான ஹதீஸாகும்).

### மிருகங்களின் உரிமைகள் (ஜீவகாருண்யம்) பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு யாது?

அல்லாஹ் கூறுகிறான் :
"பூமியில் ஊர்ந்து திரியக்கூடியவையும், தன் இரு இறக்கைகளால் (ஆகாயத்தில்) பறக்கக் கூடியவையும் உங்களைப் போன்ற (உயிருள்ள) படைப்புகளே (சமுதாயங்களே) தவிர வேறில்லை. (இவற்றில்) ஒன்றையுமே (நம் பதிவுப்) புத்தகத்தில் (லவ்ஹுல் மஹ்ஃபூளில்) குறிப்பிடாது நாம் விட்டுவிடவில்லை. பின்னர், (ஒரு நாளில்) இவையும் தங்கள் இறைவனிடம் கொண்டு வரப்படும்".

(அல் அன்ஆம் : 38 ). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "(முன்னொரு சமுதாயத்தைச் சேர்ந்த) பெண்ணொருத்தி ஒரு பூனை(க்குத் துன்பம் தந்த) விஷயத்தில் வேதனைப்படுத்தப் பட்டாள். அந்தப் பூனையை அது பசியால் துடித்துச் சாகும் வரை அவள் அடைத்து வைத்திருந்தாள். அதற்கு அவள் உணவு, பானம் கொடுக்கவுமில்லை, பூமியிலுள்ள பூச்சி, புழுக்களைத் தானாகத் தேடி உண்ண அதனை விடுவிக்கவும் இல்லை. அதன் காரணத்தால் அவள் நரகத்தில் புகுந்தாள்". (புஹாரி, முஸ்லிம்). நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஒரு நாய் தாகத்தால் மண்ணை நக்கியதை ஒரு மனிதர் கண்டார். உடனே தனது காலணியை கழற்றி அது தாகத்தை தணித்துக் கொள்ளும் வரை அதில் நீரை அள்ளி கொடுத்தார். அல்லாஹ் இந்த செயலைப் பாராட்டி அவரை சுவர்க்கத்தில் நுழைவித்தான்". (ஆதாரம் : புஹாரி, முஸ்லிம்).

### *அல்குர்ஆன் சூழலியல் விவகாரங்கள் பற்றி பேசுகிறதா?*

அல்லாஹ் கூறுகிறான் :
"(மனிதர்களே! சமாதானமும் அமைதியும் ஏற்பட்டு), பூமியில் ^+ர்திருத்தம் ஏற்பட்ட பிறகு நீங்கள் அதில் குழப்பம் விளைவிக்காதீர்கள்! மேலும், அச்சத்துடனும் ஆவலுடனும் அல்லாஹ்வை அழையுங்கள்! திண்ணமாக, அல்லாஹ்வின் அருள் நன்னடத்தையுள்ள மக்களுக்கு அருகில் இருக்கிறது". (அஃராப் : 56). "மக்கள் தங்கள் கைகளால் எதைச் சம்பாதித்தார்களோ அதன் காரணமாக தரையிலும் கடலிலும் அராஜகமும் குழப்பமும் தோன்றி விட்டிருக்கின்றன. அவர்கள் செய்த சில செயல்களின் விளைவை அவர்கள் சுவைப்பதற்காக! (அதனால்) அவர்கள் விலகி விடக்கூடும்". (அர்ரூம் : 41). "அவனுக்கு அதிகாரம் கிடைத்து விட்டால், அவனுடைய முயற்சிகள் எல்லாம் பூமியில் குழப்பத்தைப் பரப்புவதற்காகவும் வேளாண்மையையும், மனித இனத்தையும் அழிப்பதற்காகவுமே இருக்கும்! ஆனால் (அவன் சாட்சியாக்குகின்ற) அல்லாஹ் குழப்பத்தை விரும்புவதில்லை". (அல்பகரா: 205). "மேலும், (பாருங்கள்:) அருகருகே அமைந்துள்ள (தனித்தனித் தன்மைகள் கொண்ட) பல பகுதிகள் பூமியில் உள்ளன; திராட்சைத் தோட்டங்களும் உள்ளன; வயல்களும் இருக்கின்றன; பேரீச்சை மரங்களும் இருக்கின்றன. அவற்றில் சில ஒற்றையாகவும் வேறு சில இரட்டையாகவும் முளைக்கின்றன. அனைத்திற்கும் ஒரே விதமான நீரே புகட்டப்படுகின்றது. ஆயினும் அவற்றில்

சிலவற்றைச் சுவை மிகுந்ததாகவும் சிலவற்றை சுவை குறைந்ததாகவும் ஆக்குகின்றோம். திண்ணமாக, இவை அனைத்திலும் சிந்தித்துணரும் மக்களுக்கு பல சான்றுகள் இருக்கின்றன". (அர்ரஃத் : 4).

### *சமூக உரிமைகளை இஸ்லாம் எவ்வாறு பாதுகாக்கிறது?*

சமூகக் கடமைகள் யாவும் அன்பு, இரக்கம் மற்றும் பிறருக்கு மரியாதை செய்தல் என்ற அடித்தளத்தில் கட்டமைக்கப்பட வேண்டும் என்று இஸ்லாம் நமக்குக் கற்றுத்தருகிறது.

இஸ்லாம் இதற்கான அடிப்படைகள், அளவுகோள்கள் மற்றும் வரையறைகளை நிறுவியுள்ளதுடன், சமூகத்தை ஒன்றிணைக்கும் அனைத்து உறவுகளுக்குமான உரிமைகள் மற்றும் கடமைகளையும் வரையறுத்துள்ளது.
அல்லாஹ் கூறுகிறான் :

"அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணையாக்காதீர்கள். தாய், தந்தைக்கு உபகாரம் புரியுங்கள். (அவ்வாறே) உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், அண்டை வீட்டிலுள்ள உறவினர்களுக்கும், அந்நிய அண்டை வீட்டாருக்கும், (எப்பொழுதும்) உங்களுடன் இருக்கக்கூடிய நண்பர்களுக்கும், பயணிகளுக்கும், உங்களிடம் உள்ள அடிமைகளுக்கும், (அன்புடன் உபகாரம் புரியுங்கள்). எவன் கர்வம் கொண்டவனாக, பெருமை அடிப்பவனாக இருக்கிறானோ அவனை நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை". (நிஸா : 36). "அவர்களோடு நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள். அவர்களுடன் சேர்ந்து வாழ நீங்கள் விரும்பாவிட்டாலும் பொறுமையைக் கைக்கொள்ளுங்கள். ஏனெனில், ஒரு விஷயம் உங்களுக்குப் பிடிக்காமல் போகலாம். ஆனால் அல்லாஹ் அதில் பல நன்மைகளை வைத்திருக்கக் கூடும்". (அந்நிஸா: 19). நம்பிக்கையாளர்களே! (நீங்கள் ஒரு சபையிலிருக்கும் பொழுது, எவரேனும்) உங்களை நோக்கிச் "சபையில் நகர்ந்து இடம் கொடுங்கள்" என்று கூறினால், (அவ்வாறே) நீங்கள் நகர்ந்து இடம் கொடுங்கள். இடத்தை அல்லாஹ் உங்களுக்கு விசாலமாக்கி கொடுப்பான். தவிர, (சபையில் ஒரு காரணத்திற்காக உங்களை நோக்கி) "எழுந்து (சென்று) விடுங்கள்"

என்று கூறப்பட்டால், அவ்வாறே நீங்கள் எழுந்து (சென்று) விடுங்கள். (இவ்வாறு நடந்துகொள்ளும்) உங்களிலுள்ள நம்பிக்கையாளர்களுக்கும், கல்வி ஞானம் உடையவர்களுக்கும் அல்லாஹ் பதவிகளை உயர்த்துவான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிவான்". (அல் முஜாதலா: 11).

### *பிள்ளைகளை தத்தெடுப்பதை இஸ்லாம் தடை செய்தது ஏன்?*

அனாதைகளை ஆதரிக்குமாறு இஸ்லாம் ஊக்குவிப்பது மாத்திரமின்றி, தங்கள் சொந்த குழந்தைகளை நடத்துவது போல் அவர்களை நடத்துமாறும் அனாதை பாதுகாவலரை வலியுறுத்துகிறது. இருப்பினும், தந்தையின் அனந்தரச்சொத்தில் அவ்வநாதைக்குரிய பங்கை பாதுகாக்கவும், பரம்பரை கலப்பை தவிர்ப்பதற்காகவும் அநாதைகள் தங்கள் உண்மையான குடும்பத்தைக் கண்டறியும் உரிமை உண்டு.
தான் தத்தெடுக்கப்பட்டதை முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு தற்செயலாக அறிந்து கொண்ட மேற்கத்திய யுவதி தற்கொலை செய்த சம்பவம், தத்தெடுப்புச் சட்டங்களில் உள்ள முறை கேட்டுக்கான மிகப்பெரும் சான்றாக உள்ளது. சிறுவயது முதலே அவளுக்கு இதனைத் தெரிவித்திருந்தால், அவளுக்கு கருணை காட்டி, அவளுடைய சொந்த குடும்பத்தைத் தேடும் வாய்ப்பைக் பெற்றிருப்பாள்.

அல்லாஹ் கூறுகிறான் :
"ஆகவே நீர் அநாதைகளைக் கடிந்துகொள்ள வேண்டாம்". (அல்ழுஹா: 9). "நீங்கள் இம்மை மறுமை பற்றி கருத்தூன்றி சிந்திக்க வேண்டும் என்பதற்காக! அநாதைகளைப் பற்றியும் உம்மிடம் வினவுகின்றனர். நீர் கூறுவீராக: "அவர்களுக்கு நன்மை பயக்கக்கூடிய செயல் முறையை மேற்கொள்வதே உத்தமமாகும். நீங்களும், அவர்களும் சேர்ந்து வாழ்வதில் (உணவு, உறைவிடம் போன்றவைகளுக்குக் கூட்டாகச் செலவு செய்வதில்) குற்றமேதும் இல்லை. ஏனென்றால், அவர்கள் உங்கள் சகோதரர்களேயாவர். தீமை செய்பவர்களையும் நன்மை செய்பவர்களையும் அல்லாஹ் நன்கு அறிந்திருக்கின்றான். அல்லாஹ் நாடியிருந்தால் (இவ்விஷயத்தை) உங்களுக்குக் கடினமாக்கியிருப்பான். ஆனால் அல்லாஹ் பேராற்றலுள்ளவனாகவும் நுண்ணறிவாளனாகவும் இருக்கின்றான்". (அல்பகரா : 220). "(பாகப்) பிரிவினை செய்துகொள்ளும் இடத்திற்கு (பங்குதாரல்லாத) உறவினர்களோ, அனாதைகளோ, ஏழைகளோ

வந்துவிட்டால், அவர்களுக்கும் அதிலிருந்து (ஏதும்) கொடுத்து, அவர்களுக்கு அன்பான வார்த்தைகளைக் (கொண்டு ஆறுதல்) கூறுங்கள்". (அந்நிஸா: 8).

# இஸ்லாத்தில் தனக்கோ பிறருக்கோ தீங்கிழைத்தல் கூடாது

### *சிவப்பு மற்றும் வெள்ளை மாமிசத்தை (இறைச்சியை) புசிப்பதற்கு இஸ்லாம் ஏன் அனுமதித்தது?*

இறைச்சி புரதச்சத்தைப் பெற்றுக்கொள்வதற்கான அடிப்படையாகும். மேலும் மனிதர்களுக்கு தட்டையான மற்றும் கூர்மையான பற்கள் உள்ளன, அவை இறைச்சியை மெல்லவும் அரைக்கவும் ஏற்றாற் போல் அமைந்துள்ளது. தாவரங்களையும், விலங்குகளையும், சாப்பிடுவதற்கு ஏற்ற விதமாக பற்களை அல்லாஹ் மனிதர்களில் படைத்துள்ளான். மேலும் தாவர மற்றும் விலங்கு சார் உணவுகளை ஜீரணிக்கக்கூடிய செரிமான அமைப்பை உருவாக்கியுள்ளான். இவை யாவும் தாவரங்கள் மற்றும் மாமிசங்கள் உட்கொள்ளப்படுவதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதற்கான சான்றாக அமைந்துள்ளது.

அல்லாஹ் கூறுகிறான் :
"கால் நடைகள் உண்பதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளன" . (அல்மாஇதா : 1).
உணவுகள் தொடர்பான சில விதிகளை அல்குர்ஆன் குறிப்பிட்டுள்ளது :
"(நபியே!) கூறுவீராகः "மனிதன் புசிக்கக்கூடியவற்றில் எதுவும் தடுக்கப்பட்டு விட்டதாக எனக்கு அறிவிக்கப்பட்ட வஹ்யில் நான் காணவில்லை. ஆயினும், செத்தவை, வடியக்கூடிய இரத்தம், பன்றியின் மாமிசம் ஆகியவை நிச்சயமாக அசுத்தமாக இருப்பதனால் இவையும், அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் கூறுவது பாவமாய் இருப்பதனால் அவ்வாறு கூறப்பட்டவையும் (தடை செய்யப்பட்டுள்ளன.)" தவிர வரம்பு மீறி பாவம் செய்யும் நோக்கமின்றி எவரேனும் நிர்ப்பந்திக்கப்பட்டு (இவற்றை புசித்து) விட்டால், (அது அவர்கள் மீது குற்றமாகாது.) நிச்சயமாக உமது இறைவன் மிக்க மன்னிப்பவன், மிகக் கருணையுடையவன். (ஆகவே, மன்னித்து விடுவான்)". (அல் அன்ஆம் : 145). "தானாகச் செத்ததும், இரத்தமும், பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாதோர்க்கு அறுக்கப்பட்டவையும் உங்களுக்குத் தடைசெய்யப்பட்டுள்ளன. மேலும் கழுத்து நெறிக்கப்பட்டுச் செத்தது, அடிபட்டுச் செத்தது, உயரத்தில் இருந்து வீழ்ந்து செத்தது, கொம்பால் குத்தப்பட்டுச் செத்தது, வனவிலங்கு கடித்துச் செத்தது ஆகியவையும் (தடைசெய்யப்பட்டுள்ளன.

இவற்றில் உயிருடன் கண்டு) முறைப்படி நீங்கள் அறுத்தவற்றைத் தவிர. மேலும் (வணக்கத்திற்காக) நடப்பட்டவற்றிக்கு அறுக்கப்பட்டவையும், நீங்கள் அம்பெறிந்து குறிபார்ப்பதும் (தடைசெய்யப்பட்டுள்ளன) இவை பாவமாகும்". (மாஇதா : 3).
மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

"உண்ணுங்கள் பருகுங்கள் வீண்விரயம் செய்யாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் வீண்விரயம் செய்வோரை நேசிக்கமாட்டான்". (அல் அஃராப் :31). இப்னுல் கைய்யிம் ரஹிமஹுல்லாஹ் கூறுகிறார்கள் : 'அளவு மற்றும் தரத்தின் அடிப்படையில், உடலுக்கு தேவையான நன்மைபயக்கும் உணவு மற்றும் நீராகாரங்களை தமது உடலுக்கு வழங்க வேண்டும் என அல்லாஹ் தனது அடியார்களுக்கு வழிகாட்டியுள்ளான். இது எப்போது மீறப்படுமோ அது வீண்விரயமாக மாறிவிடும். உண்ணாமல் மற்றும் பருகாமல் இருத்தல், அல்லது அளவுக்கதிகமாக சாப்பிடுதல் அல்லது பருகுதல் ஆகியவை ஒருவரின் ஆரோக்கியத்திற்கு தீங்கு விளைவிப்பதோடு நோய்கள் ஏற்படுவதற்கும் காரணமாக அமையும். எனவே, முழுமையாக ஆரோக்கியம் பேணல் என்பது இந்த இரண்டு வார்த்தைகளில் உள்ளது'. (ஸாதுல் மஆத் 4-213) மேலும் நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் விடயத்தில் அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான் : "அவர் அவர்களுக்கு நல்லவற்றை அனுமதித்து, தீங்கானவற்றை தடைசெய்கிறார்". (அல்அஃராப் : 157). மேலும் அல்லாஹ் கூறுகிறான் : "நபியே தங்களுக்கு உண்பதற்கு அனுமதிக்கப்பட்டவை எவை? என அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். அதற்கு நீர் அவர்களுக்கு தூய்மையானனை எனக் கூறுவீராக". (அல் மாஇதா : 4).

ஆகவே நல்லவை அனைத்தும் அனுமதிக்கப்பட்டதாகும், தீயன அனைத்தும் தடைசெய்யப்பட்டதாகும்.

மேலும் நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஒரு இறைவிசுவாசி உண்ணல் மற்றும் பருகுதலில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை தெளிபடுத்தினார்கள். அவர்கள் குறிப்பிடுகையில் : "ஆதமுடைய மக்களின் நிரம்பக் கூடிய பைகளில் மிகவும் கெட்டது அவர்களின் வயிறாகும். ஆதமுடைய மகனுக்கு தனது முதுகெலும்பை நேராக்கிக் கொள்ளும்

அளவு உணவே போதுமானது. அதுவும் அவனுக்கு போதாது என்றால் தன் வயிற்றில் மூன்றில் ஒரு பகுதியை உணவுக்கும் மற்றொரு பகுதியை தண்ணீருக்கும் மற்றொரு பகுதியை அவன் ^+ராக மூச்சு விடுவதற்கும் ஆக்கிக் கொள்ளட்டும்". (ஆதாரம் : திர்மிதி) . "ஒருவர் தமக்கோ பிறருக்கோ தீங்கிழைத்தல் கூடாது" என நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஆதாரம் : இப்னு மாஜா) .

## *இஸ்லாத்தில் மிருகங்களை அறுக்கும் முறை மனிதாபிமானமற்றதாக கருதப்படாதா?*

கூர்மையான கத்தியினால் அறுவைமிருகத்தின் உணவுக் குழாயையும், மூச்சுக் குழாயையும் மிக வேகமாக வெட்டி விடுவதே இஸ்லாத்தின் அறுப்பு முறையாகும். இந்த முறை மிருகங்கள் நோவினைப்படுவதற்கு காரணமாக அமையும் மின்அதிர்வு, மற்றும் கழுத்தை நெரித்துக் கொல்லல் போன்ற வழிமுறைகளை விடவும் கருணை நிறைந்தது. மூளைக்கான இரத்த ஓட்டம் தடைபட்டால், விலங்கு வலியை உணராது. ஒரு மிருகம் அறுக்கப்படும்போது ஏற்படும் துடிப்புக்கு வலி காரணம் அல்ல, மாறாக இரத்தத்தின் விரைவான வெளியேற்றமே இதற்கான காரணமாகும். இவ்வாறு துடிப்பது உடலில் இருந்து இரத்தம் முழுமையாக வெளியேற உதவுகிறது. இது விலங்குகளின் உடலுக்குள் இரத்தத்தை உரைய வைக்கும் ஏனைய அறுப்பு முறைகளுக்கு மாற்றமானது. இரத்தம் வெளியேறாத நிலையில் கொல்லப்பட்ட மிருகத்தின் இறைச்சியை புசிப்போரின் ஆரோக்கியம் பெரிதும் பாதிக்கப்படும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "நிச்சயமாக அல்லாஹ் எல்லா விடயங்களையும் மிகவும் அழகிய முறையில் செய்ய வேணடும் என விதித்துள்ளான். ஆகவே நீங்கள் கொலை செய்தால் அழகிய முறையில் கொல்லுங்கள். நீங்கள் ஒரு மிருகத்தை அறுத்தால் அழகிய முறையில் அறுங்கள். எனவே உங்களில் அறுக்கும் ஒருவர் தனது கத்தியை கூர்மையாக்கிக் கொள்ளட்டும், அறுவைப் பிராணிக்கும் ஆருதலைக் கொடுக்கட்டும்'. அறுக்கும் மிருகங்களின் கஷ்டங்களை எளிதாக்கக்கட்டும்". (ஆதாரம் : முஸ்லிம்).

## *உணவுக்காக அறுக்கப்படும் மிருங்கள் மனித உயிர்போன்றதல்லவா?*

விலங்குகளின் உயிருக்கும் மனிதர்களின் உயிருக்கும் மிகப்பெரும் வேறுபாடு உள்ளது. ஒரு விலங்கின் உயிரானது அதன் உடலை இயக்கும் உந்து சக்தியாகும். அது மரணத்தின் மூலம் வெளியேறும் போது, உடல் உயிரற்றதாகி, வெறும் சடலமாக மாறிவிடுகிறது. அதாவது இது வாழ்க்கையின் ஒரு பகுதியைக் குறிக்கிறது. தாவரங்கள் மற்றும் மரங்கள் கூட வாழ்க்கையின் வடிவத்தைக் கொண்டுள்ளன. ஆனால் அது ஒரு உயிர் என்று குறிப்பிடப்படவில்லை. மாறாக, தண்ணீரின் உதவியுடன் அதன் உற்பகுதி வழியாக ஓடுவதனால் உயிர் என்று அழைக்கப்படுகிறது. ஆனால் தண்ணீர் இல்லாமல் போனால் செடி வாடி விழுந்துவிடும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"உயிருள்ள அனைத்தையும் நீரிலிருந்தே நாம் படைத்தோம், அவர்கள் நம்ப வேண்டாமா?". (அன்பியாஃ : 30). இருப்பினும் அவை சிறப்பித்தல் மற்றும் கண்ணியப்படுத்தல் ஆகிய நோக்கங்களுக்காக அல்லாஹ்வுடன் இணைக்கப்பட்ட மனித உயிர் போன்றது அல்ல. அதன் யதார்த்தம் குறித்து அல்லாஹ் மட்டுமே அறிவான், மேலும் அது மனிதர்களுக்கு மட்டுமே பொருந்தும். மனித ஆன்மா –உயிர்- என்பது ஒரு தெய்வீக ஆணை, அதன் மூலத்தைப் மனிதர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற தேவை கிடையாது. அதாவது மனித உடலை இயக்குவதற்காக சக்தி ஒருங்கிணைந்து, அதனோடு சேர்த்து சிந்தனை (மனம்), புரிதல், அறிவு மற்றும் நம்பிக்கை ஒன்றாக கலந்த நிலையாகும், இவை தான் விலங்குகளின் உயிரிலிருந்து –ஆன்மாவிலிருந்து- மனித ஆன்மாவை வேறுபடுத்துகிறது.

## *முஸ்லிம் பன்றி இறைச்சியை உட்கொள்ளாது இருப்பது ஏன்?*

அல்லாஹ் எமக்கு ஆரோக்கியமான, நல்லனவற்றை சாப்பிடுவதற்கு அனுமதித்து, ஆரோக்கியமற்ற அருவருப்பானவற்றை சாப்பிடுவதற்கு தடை விதித்தமை படைப்பினங்களுடனான அவனின் கருணை மற்றும் அன்பின் வெளிப்பாடுகளில் ஒன்றாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :

"(ஆகவே, அவர்களில்) எவர்கள் எழுதப் படிக்கத் தெரியாத (நம்) தூதராகிய இந்த நபியைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களிடமுள்ள தௌறாத்திலும், இன்ஜீலிலும் இவருடைய பெயர் எழுதப்பட்டிருப்பதைக் காண்பார்கள். (இத்தூதரோ) அவர்களை நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார். நல்லவற்றையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார். மேலும், அவர்களது சுமையையும் அவர்கள் மீதிருந்த (கடினமான சட்ட) விலங்குகளையும் (இறைவனின் அனுமதி கொண்டு) நீக்கிவிடுவார். ஆகவே, எவர்கள் அவரை உண்மையாகவே நம்பிக்கை கொண்டு, அவரை பலப்படுத்தி அவருக்கு உதவி செய்து, அவருக்கு இறக்கப்பட்ட பிரகாசமான (இவ்வேதத்)தைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றவர்கள்". (அல் அஃராப் : 157). இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட பலர் தாம் இஸ்லாத்தை தழுவுவதற்கு பன்றியே காரணம் எனக் குறிப்பிட்டுள்ளனர்.

இந்த விலங்கு மிகவும் அசுத்தமானது, உடலுக்கு பல நோய்களை ஏற்படுத்துகிறது என்பது அவர்களுக்கு முன்பே தெரிந்திருந்தனால், அவர்கள் அதை சாப்பிட தயங்கினார்கள். முஸ்லிம்கள் தங்கள் வேதத்தை புனிதப்படுத்தி அதனை வணங்குவதனால் அதில் பன்றி இறைச்சி புசிப்பது தடை என குறிப்பிடப்பிடப்பட்டிருப்பதே காரணம் என்பதனால் அவர்கள் உண்பதைத் தவிர்த்து வருகிறார்கள் என நம்பிக் கொண்டிருக்கிறார்கள். இருப்பினும், பன்றி இறைச்சி அசுத்தமான விலங்கு எனவும் அதன் இறைச்சி ஆரோக்கியத்திற்கு பாதிப்பை ஏற்படுத்துகிறது, என்பதால்தான் அவர்கள் உட்கொள்வதைத் தவிர்ந்துகொண்டார்கள் என்பதை உணர்ந்த வேளைதான் இந்த மார்க்கத்தின் மகத்துவத்தை அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

அல்லாஹ் கூறுகிறான் :

"(நம்பிக்கையாளர்களே!) தாமாக செத்தது, இரத்தம், பன்றியின் மாமிசம், அல்லாஹ் அல்லாத (வேறு) பெயர் கூறப்பட்டவை ஆகியவற்றைத்தான் அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ளான். ஆதலால், எவரேனும் வரம்பு மீறாமலும், பாவம் செய்யும் நோக்கமில்லாமலும் இருந்து (இவற்றைப் புசிக்க)

நிர்ப்பந்திக்கப்பட்டு விட்டால் (அது) அவர் மீது குற்றமாகாது. நிச்சயமாக அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன், மிக்க கருணையுடையவன்". (அல்பகரா:173).
பைபிளின் பழைய ஏற்பாட்டிலும் பன்றி இறைச்சி உண்பது தடை என குறிப்பிடப்பட்டுள்ளது.

'பன்றியின் குழம்பு விரிகுழம்பும் இரண்டாகப் பிரிந்ததுமாயிருந்தும் அது அசைபோடாது. அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும். இவைகளின் மாமிசத்தை சாப்பிடாமலும் இவைகளின் உடலைத்தொடாமலும் இருப்பீர்களாக. அது உங்களுக்கு தீட்டாகும்'. (லேவியராகமம் 11:7-8). 'பன்றியின் குழம்பு விரிகுழம்பும் இரண்டாகப் பிரிந்ததுமாயிருந்தும், அது அசைபோடாது, அது உங்களுக்கு அசுத்தமாயிருக்கும். இவைகளின் மாம்சத்தைப் புசிக்கவும், இவைகளின் உடல்களைத் தொடவும் வேண்டாம்; இவைகள் உங்களுக்குத் தீட்டாயிருக்கக்கடவது'. (உபாகமம் 8:14).

புதிய ஏற்பாட்டில் இயேசுவே கூறியது போல் மோசேயின் சட்டமும் இயேசுவின் சட்டமே என்பது இதன் மூலம் அறியமுடிகிறது.

'நான் நியாயப்பிரமாணத்தையோ தீர்க்கதரிசிகளையோ ஒழிக்க வந்தேன் என்று நினைக்காதீர்கள்; நான் அவற்றை ஒழிக்க வரவில்லை, அவற்றை நிறைவேற்ற வந்தேன். வானமும் பூமியும் அழியும் வரை, நான் உங்களுக்குச் சொல்கிறேன், ஒரு துளியும் இல்லை, ஒரு புள்ளியும் இல்லை , அனைத்தும் நிறைவேறும் வரை நியாயப்பிரமாணத்திலிருந்து கடந்து போகும்; ஆகையால், இந்தக் கட்டளைகளில் மிகக் குறைவான ஒன்றைத் தளர்த்தி, மற்றவர்களுக்கு அதைச் செய்யும்படி கற்பிப்பவன் பரலோகராஜ்யத்தில் சிறியவன் என்று அழைக்கப்படுவான், ஆனால் அவற்றைச் செய்து அவற்றைக் கற்பிப்பவன் பெரியவன் என்று அழைக்கப்படுவான்'. (மத்தேயு 5:17-19).

இந்த அடிப்படையில் யூத மதத்தில் பன்றி இறைச்சி தடைசெய்யப்பட்டது போன்று கிறிஸ்தவ மதத்திலும் தடைசெய்ப்பட்டுள்ளது என்பது புரிகிறது.

## *வட்டியை இஸ்லாம் தடைசெய்திருப்பது ஏன்?*

இஸ்லாத்தில் பணம் என்பது வர்த்தகம், பொருட்கள் மற்றும் சேவைகளுக்கான பரிமாற்றம், அத்துடன் கட்டுமானம் மற்றும் நிர்மாணம் போன்றவற்றிக்கு பயன்படுத்தும் ஒரு அதிகாரம் அளிக்கப்பட்ட அடையாள அலகாகும். அதிகப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் கடன் கொடுக்கும்போது, அதன் அடிப்படை நோக்கங்களான பரிவர்த்தனை மற்றும் மேம்பாடு எனும் வழிமுறையிலிருந்து தவிர்த்து, அதையே ஒரு குறிக்கோளாக மாற்றுகிறோம். அதாவது பணத்தை கொடுத்து பணத்தை மேலதிகமாக பெரும் ஒரு வழிமுறையாக மாற்றிவிடுகிறோம்.

கடன்களுக்கு விதிக்கப்படும் வட்டி அல்லது இலாபம் கடன் வழங்குபவர்களுக்கு ஒரு ஊக்குவிப்பாக செயல்படுவதோடு உறுதியான ஆதாயமாக கருதப்படுகிறது. இதன் விளைவாக, பல ஆண்டுகளாக கடன் வழங்குபவர்களால் திரட்டப்பட்ட- பெறப்படுகின்ற- இலாபம் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையிலான இடைவெளியை அதிகரிக்கிறது. சமீபத்திய தசாப்தங்களில், அரசாங்கங்களும் நிறுவனங்களும் இந்தத் துறையில் பாரிய அளவில் ஈடுபட்டுள்ளன. இது சில நாடுகளின் பொருளாதார வீழச்சிக்கு வழிவகுத்துள்ளது என்பதை நாம் அறிகிறோம். அதற்கான பல உதாரணங்கள் உண்டு. எந்த குற்றச்செயல்களாலும் சாதிக்க முடியாத அளவிற்கு சமூகத்தில் ஊழலை பரப்பும் ஆற்றல் வட்டிக்கு மாத்திரமே உண்டு. அல்லாஹ் கூறுகிறான் : கிறிஸ்தவ கொள்கைகளின் அடிப்படையில், தாமஸ் அக்வினாஸ் வட்டி அல்லது வட்டியுடன் கடன் கொடுப்பதைக்-வாங்குவதைக்- கண்டித்தார். கிறிஸ்தவ தேவாலயத்தின் குறிப்பிடத்தக்க மத மற்றும் உலக செல்வாக்கு காரணமாக, இரண்டாம் நூற்றாண்டில் மதகுருமார்கள் மீது மாத்திரம் இத்தடையை விதித்து, அதனைத் தொடர்ந்து குடிமக்கள் யாவருக்குமான தடையாக இதனை விஸ்தரித்தது. கடனளிப்பவரின் காத்திருப்பு காலத்திற்கான கட்டணமாக வட்டியைக் கருத முடியாது என்பது வட்டியைத் தடைசெய்வதற்கான நியாயங்களில் ஒன்று என்பது அக்வினாஸின் கருத்தாகும். இதனை நியாயப்படுத்துவோர் இதை வணிகப் பரிவர்த்தனையாகப் கருதுகிறாரகள். பண்டைய காலங்களில், தத்துவஞானி அரிஸ்டாட்டில் பணம் என்பது பரிமாற்றத்திற்கான ஒரு

வழிமுறையாகும் தவிர வட்டியைப் பெறுவதற்கான வழிமுறை அல்ல என்று உறுதியாக கூறினார். மறுபுறம், பிளேட்டோ, சமூகத்தின் ஏழை உறுப்பினர்கள் மீது செல்வந்தர்களால் நடைமுறைப்படுத்தப்பட்ட வட்டியை சுரண்டலாகக் கண்டார். கிரேக்கர்களின் காலத்தில் வட்டி பரிவர்த்தனைகள் மிக அதிகமாகக் காணப்பட்டன. இக்காலத்தில் கடனாளிகள் தங்கள் கடனைத் திருப்பிச் செலுத்த முடியாவிட்டால் அடிமைச் சந்தையில் கடனாளிகளை விற்க உரிமை உண்டு என்ற நிலை இருந்தது. இந்த விவகாரத்தில் ரோமானியர்களின் நிலைமையும் சற்றும் வித்தியாசமின்றி ஒன்றாகவே காணப்பட்டது. கிறிஸ்தவத்தின் வருகைக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பே இந்த தடை ஏற்பட்டதால், இந்த தடை மதரீதியான எந்தத் தாக்கங்களுக்கும் உட்படவில்லை என்பது ஈன்று குறிப்பிடத்தக்க அம்சமாகும். இன்ஜீல் வேதத்தைப் பின்பற்றுவோர் வட்டியில் ஈடுபடுவதைத் தடைசெய்தது என்பதையும், தௌராத்தும் அதற்கு முன் அதையே செய்தது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். "நம்பிக்கை கொண்டோரே! பண்மடங்காகப் பெருகும் வட்டியை நீங்கள் உண்ணாதீர்கள். நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்". (ஆல இம்ரான் : 130). "(மற்ற) மனிதர்களுடைய பொருள்களுடன் சேர்ந்து (உங்கள் பொருளும்) அதிகப்படுவதற்காக வட்டிக்கு நீங்கள் கொடுக்கும் பொருள் அல்லாஹ்விடத்தில் அதிகப்படுவதில்லை. எனினும், அல்லாஹ்வின் முகத்தை நாடி ஸகாத்தாக ஏதும் நீங்கள் கொடுத்தாலோ, கொடுத்தவர்கள் அதை இரட்டிப்பாக்கிக் கொள்கின்றனர்". (அர்ரூம்: 39).

பழைய ஏற்பாடும் வட்டிக்கு தடை விதித்துள்ளது என்பதை லேவியராகமம் நூலில் நாம் காணலாம். இதற்கு உதாரணமாக பின்வரும் வசனத்தை குறிப்பிடுகிறோம் :

'உங்கள் சக இஸ்ரவேலர்களில் எவரேனும் ஏழைகளாகி, உங்களில் தங்களைத் தாங்களே ஆதரிக்க முடியாமல் போனால், நீங்கள் அவரை அந்நியராகவோ அல்லது குடியேரியாகவோ இருப்பது போல் கருதி அவர்களுக்கு உதவுங்கள். அவ்வாறு நீங்கள் நடந்து கொண்டால் அவர்கள் உங்களிடையே தொடர்ந்து வாழுவார்கள். அவர்களிடமிருந்து வட்டி அல்லது இலாபம் எடுக்காதீர்கள. ஆனால் நீங்கள் உங்கள் கடவுளை பயந்து நடந்து கொள்வீராக!

அவர்கள் உங்களிடையே தொடர்ந்து வாழ்வதற்காக, நீங்கள் அவர்களுக்கு வட்டிக்குக் கடன் கொடுக்கவோ அல்லது லாபத்திற்கு உணவை விற்கவோ வேண்டாம்'. (லேவியராகமம் 25:35-37).

முன்பு குறிப்பிட்டது போல, புதிய ஏற்பாட்டில் இயேசு கூறியுள்ளபடி மோசேயின் சட்டமும் கிறிஸ்துவின் சட்டமும் ஒன்றே என்பது புலனாகிறது. 'நான் நியாயப்பிரமாணத்தையோ தீர்க்கதரிசிகளையோ ஒழிக்க வந்தேன் என்று நினைக்காதீர்கள்; நான் அவற்றை ஒழிக்க வரவில்லை, அவற்றை நிறைவேற்ற வந்தேன். வானமும் பூமியும் அழியும் வரை, நான் உங்களுக்குச் சொல்கிறேன், ஒரு துளியும் இல்லை, ஒரு புள்ளியும் இல்லை , அனைத்தும் நிறைவேறும் வரை நியாயப்பிரமாணத்திலிருந்து கடந்து போகும்; ஆகையால், இந்தக் கட்டளைகளில் மிகக் குறைவான ஒன்றைத் தளர்த்தி, மற்றவர்களுக்கு அதைச் செய்யும்படி கற்பிப்பவன் பரலோகராஜ்யத்தில் சிறியவன் என்று அழைக்கப்படுவான், ஆனால் அவற்றைச் செய்து அவற்றைக் கற்பிப்பவன் பெரியவன் என்று அழைக்கப்படுவான்'. (மத்தேயு 5:17-19).

இதன் படி யூத மதத்தில் வட்டி தடைசெய்யப்பட்டது போன்றே கிறிஸ்தவத்திலும் வட்டி தடை செய்யப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளபடி:
"யூதர்கள் செய்த அக்கிரமத்தின் காரணமாகவும், அல்லாஹ்வின் வழியிலிருந்து அதிகமான மனிதர்களை அவர்கள் தடுத்துக் கொண்டிருப்பதாலும், (முன்பு) அவர்களுக்கு அனுமதிக்கப் பட்டிருந்த பல தூய்மையான நல்ல பொருள்களை அவர்கள் மீது நாம் தடை செய்துவிட்டோம். மேலும் வட்டி அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருக்க அதனை அவர்கள் வாங்கிக் கொண்டிருப் பதாலும், மக்களின் சொத்துகளைத் தவறான முறையில் அவர்கள் விழுங்கிக் கொண்டிருப்பதாலும் (முன்பு அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த பல தூய்மையான நல்ல பொருள்களை அவர்கள் மீது நாம் தடை செய்து விட்டோம்). மேலும் அவர்களில் நிராகரிப்பாளர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையை நாம் தயார் செய்து வைத்துள்ளோம்". (அந்நிஸா:160-161).

## *மதுவை இஸ்லாம் தடைசெய்தது ஏன்?*

இறைவன் மனிதனை பகுத்தறிவின் மூலம் ஏனைய படைப்பினங்களை விடவும் தனித்துவமானவனாக ஆக்கியுள்ளான். ஆகையால் அவன் எமது உடலுக்கும் பகுத்தறிவிற்கும் பாதிப்பை ஏற்படுத்துபவைகளை தடை செய்துள்ளான். இதனால் போதையை ஏற்படுத்தக் கூடிய அனைத்தையும் தடைசெய்துள்ளான். காரணம் அது புத்தியை மறைத்து அதில் பாதிப்பை ஏற்படுத்தி பல வகையான கேடுகளுக்கும் வழிவகுக்கும். மதுஅருந்தியவன் சிலவேளை இன்னொருவனை கொன்று விடமுடியும். சிலவேளை விபச்சாரம் செய்வான், சில வேளை களவெடுப்பான். இவ்வாறான மாபாதகச் செயல்கள் மது குடித்ததன் விளைவாக ஏற்படும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"நம்பிக்கையாளர்களே! நிச்சயமாக மது, சூதாட்டம், சிலை வணக்கம், அம்பெறிந்து குறி கேட்பது ஆகிய இவை ஷைத்தானுடைய அருவருக்கத்தக்க வேலைகளில் உள்ளவையாகும். ஆகவே, நீங்கள் வெற்றியடைவதற்காக இவற்றில் இருந்து நீங்கள் விலகிக்கொள்ளுங்கள்". (அல் மாஇதா : 90). - பெயர் மற்றும் அதன் வடிவத்தை கருத்திற்கொள்ளாது போதையை ஏற்படுத்துவதற்கு வழிவகுப்பவை அனைத்தும் 'கம்ர்' மதூபானம் ஆகும். நபியவர்கள் கூறினார்கள் : 'போதையை ஏற்படுத்தும் அனைத்தும் மதூபானமாகும். போதையை ஏற்படுத்தும அனைத்தும் தடைசெய்யப் பட்டவைகளாகும்'. (ஆதாரம் : முஸ்லிம்). -

தனிமனிதன் மற்றும் சமூகத்திற்கு மிகப்பெரும் பாதிப்பை ஏற்படுத்துவதாக இது காணப்படுவதால் இதற்கான தடை வந்துள்ளது.

யூத, கிறிஸ்தவ மதங்களில் கூட மது தடைசெய்யப்பட்டுள்ளது. ஆனாலும் இன்றைய காலத்தில் உள்ள பெரும்பாளானோர் இதனை ஏற்றுக் கொள்வதுமில்லை, நடைமுறைப்படுத்துவதுமில்லை.

'மதூபானம் கேலிக்குரியது, போதை பொங்கி எழுகிறது, அதன் மூலம் வழிதவறுகிறவன் ஞானி அல்ல'. (நீதிமொழிகள் 20:1). 'ஒழுக்கக்கேடும் துஷ்பிரயோகமும் நிறைந்த மதுவை அருந்திக் போதைக்குள்ளாகாதீர்கள்'.

(எபேசியர் 5:18). 2010 இல் புகழ்பெற்ற மருத்துவ இதழான தி லான்செட் (The Lancet) தனிநபர்களையும், சமூகத்தையும் அழிக்கவல்ல மிகவும் ஆபத்தமான மருந்துகள் பற்றிய ஆய்வை வெளியிட்டது. இந்த ஆய்வானது ஆல்கஹால் கலந்த பாணங்கள், ஹெரோயின், புகையிலை மற்றும் ஏனைய பொருட்கள் உள்ளடங்களாக 20 பொருட்களை அடிப்படையாக கொண்டமைந்தது. இதனை 16 அளவுகோள்களின் அடிப்படையில் மதிப்பீடு செய்தனர். அவற்றுள் ஒன்பது அளவுகோள்கள் தனிநபருக்கு தீங்கு விளைவிப்பது தொடர்பானதாகவும், ஏழு அளவுகோல்கள் பிறருக்கு தீங்கு விளைவிப்பது தொடர்பானதாகவும் அமைந்திருந்தது. இந்த மதிப்பீட்டுக்கான புள்ளி 100 என்ற அளவில் வழங்கப்பட்டு மதிப்பீடு செய்யப்பட்டது.

இறுதியில் இந்த ஆய்வு பின்வரும் முடிவை வெளியிட்டது. அதாவது தனிநபருக்கு ஏற்படும் தீங்கு மற்றும் பிறருக்கு ஏற்படும் தீங்கு இரண்டையும் ஒன்றாக கருத்திற் கொண்டால், போதைப் பொருட்களில் ஆல்கஹாலே எல்லாவற்றிலும் மிகவும் தீங்குகள் நிறைந்தததாகவும், தீங்கு விளைவிப்பதில் முதலிடத்தில் உள்ளதாகவும் குறிப்பிடுகிறது.

மற்றொரு ஆய்வு அல்கஹோலின் பாதுகாப்பான நுகர்வு விகிதம் பற்றி குறிப்பிடுகிறது. குறித்த ஆய்வானது :

மது அருந்துவதால் ஏற்படும் நோய்கள் மற்றும் காயங்களினால் ஏற்படும் உயிரிழப்பைத் தவிர்க்க மதுவின் பாதுகாப்பான நுகர்வு விகிதம் பூஜ்யமாகும் என குறிப்பிடுகின்றனர். அதாவது இதனை முழுமையாக தவிர்ப்பதே இவ்வாறான பாதிப்புகளிலிருந்து பாதுகாத்துக்கொள்வதற்கான ஓரே வழி என புகழ்பெற்ற அறிவியல் இதழான தி லான்செட்டின் இணையதளத்தில் ஆராய்ச்சியாளர்கள் இவ்வாறு தெரிவித்துள்ளனர். இதுவரையில் இந்த விவகாரம் தொடர்பான மிகப்பெரும் தரவு பகுப்பாய்வு இடம்பெற்றுள்ளது. மது அருந்துதல் மற்றும் உட்கொள்ளும் அளவு (694 தகவல் ஆதாரங்களைப் பயன்படுத்தி) யும் மற்றும் இதனை பயன்படுத்துவதால் ஏற்படும் உடல்நல கேடுகள் மற்றும் அபாயங்களை மதிப்பிடுவதற்கு ஆல்கஹால் தொடர்புடைய (நோய்க்கு முந்தைய மற்றும் பிந்தைய 592ஆய்வுகளில் இருந்து பெறப்பட்ட முடிவுகளின் படியும்) இதற்கென 1990 முதல்

2016 வரையிலான காலப்பகுதியில்,195 நாடுகளைச் சேர்ந்த 28 மில்லியன் மக்களை உள்ளடக்கி இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த ஆய்வின் படி உலகளவில் ஆண்டுக்கு 2.8 மில்லியன் மக்களின் மரணத்திற்கு மது காரணமாகிறது என்று இவ்வாய்வு முடிவுகள் வெளிப்படுத்தின.

இந்த வகையில், சந்தையில் மதுபானம் இருப்பதைக் கட்டுப்படுத்தவும், மதுபானத்தின் மீது வரிகளை விதிக்கவும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறும் ஆராய்ச்சியாளர்கள் பரிந்துரைத்தனர். இந்த நடவடிக்கையானது எதிர்காலத்தில் மது கிடைப்பதைத் தடுப்பதற்கான முன்ஆயத்த நடவடிக்கையாக அமையலாம் என்று அபிப்பிராயப்படுகின்றனர். இதன் விளைவுகளை அறிந்த படைப்பாளனாகிய அல்லாஹ் மதுவை தடுத்ததன் மூலம் மிகவும் சிறந்த வழிகாட்டியாகவும் தீர்ப்பாளனாகவும் உள்ளான் என்பதை நாம் அறிய வேண்டும். அல்லாஹ் தீர்ப்பளிப்பதில் மிகவும் சிறந்தவன்; என்று பின்வரும் வசனத்தில் குறிப்பிடுகிறான் :

“தீர்ப்பளிப்பவர்களில் எல்லாம், அல்லாஹ் மிக மேலான நீதிபதியல்லவா?”. (அத்தீன்: 8).

## இஸ்லாத்தின் அடிப்படைகள் (இஸ்லாத்தின் பிரதான கடமைகள்) :

*நபி முஹம்மத் கொண்டு வந்த இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள் யாவை?*

படைப்பாளன் ஒருவன் என்றும் அவனை மாத்திரமே வணங்கி வழிப்படுவது என்றும், முஹம்மத் அவனின் அடியாரும் தூதருமாவார் என ஒப்புக்கொண்டு சான்று பகர்வதாகும்.
தொழுகையின் மூலம் அகிலங்களின் இரட்சகனானுடன் தொடர்பில் எப்போதும் இருத்தல்.

நோன்பு நோற்பதன் மூலம் ஒருவரின் விருப்பத்தையும் சுயக்கட்டுப்பாட்டையும் வலுப்படுத்துவதும், மற்றவர்களுடன் இரக்கம் மற்றும் நல்லிணக்க உணர்வுகளை விருத்திசெய்து கொள்வதுமாகும்.

ஸகாத்தின் மூலம் ஏழை எளியவர்களுக்கு தனது சேமிப்புச்செல்வத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட சாதாரண விகிதத்தை செலவு செய்வதாகும். ஸகாத் என்பது ஒரு வணக்கமாகும். அது கஞ்சத்தனம், உலோபித்தனம் ஆகிய குணங்களை களைந்து ஈதல் மற்றும் கொடை கொடுத்தல் போன்ற உயரிய பண்புகள் குடிகொள்ள வகைசெய்கிறது.
மக்காவிற்கு ஹஜ் யாத்திரை செல்வதன் மூலம் அனைத்து இறைவிசுவாசிகளும் ஒரே உணர்வுடன் ஒரே வகையான கிரியைகளை நிறைவேற்றுவதன் மூலம் குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட ஒரு இடத்தில் முழுமையாக இறைவழிபாட்டில் திலைத்திருப்பதாகும். இந்தக் கடமையானது வித்தியாசமான மனித உறவுகள், கலாச்சாரங்கள், மொழிகள், தராதரங்கள் மற்றும் நிறங்கள் ஆகியவற்றுக்கு அப்பால் படைப்பாளனான அல்லாஹவின் பால் முன்னோக்கிச் செல்வதில் அனைவரும் சமம் எனும் ஒற்றுமையின் குறியீட்டைப் பிரதிபலிப்பதாகக் காணப்படுகிறது.

## ஒரு முஸ்லிம் ஏன் தொழவேண்டும்?

இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளுள் ஒன்றாக தொழுகையை ஆக்கி, தொழுமாறு கட்டளையிட்ட தனது இரட்சகனுக்கு கடடுப்பட்டு நடக்க வேண்டும் என்பதற்காக ஒரு முஸ்லிம் தொழுகையை நிறைவேற்றுகிறான்.

ஒரு முஸ்லிம் தினமும் காலை ஐந்து மணிக்கு தொழுகைக்கு எழுவார். முஸ்லிமல்லாத அவரின் நண்பர்கள் அதே நேரத்தில் காலை உடற்பயிற்சிக்கு எழுவார்கள். முஸ்லிமின் தொழுகையானது உடல் மற்றும் ஆன்மீகரீதியான ஊட்டமாக அமையும், அதே நேரத்தில் அவர்களின் உடற்பயிற்சி உடலுக்கான ஊட்டமாக மாத்திரமே அமையும். ஒரு முஸ்லிம் இறைவனிடம் தனது தேவைகளை கேட்கும் பிரார்த்தனையை விட்டும் தொழுகை வித்தியாசமானது. இப்பிரார்த்தனையை ஒரு முஸ்லிம் எப்போதும் மேற்கொள்ளலாம். இதற்கு ருகூஊ ஸுஜுத் போன்றவைகள் தேவையில்லை.

ஆன்மாவை பட்டினியில் வதைத்து நம் உடம்பை கட்டாக வைத்துக் கொள்வதில் நாம் எவ்வளவு கவனம் செலுத்துகிறோம் என்பது குறித்து நாம் சிந்திக்க வேண்டும். இதன் விளைவுதான் உலகில் மிகவும் வசதி படைத்தவர்களின் எண்ணற்ற தற்கொலைகள் நிகழ்வதற்கு காரணமாக அமைந்துள்ளது.!

வழிபாடுகள் மூளையில் உள்ள உணர்வு மையத்தில் உள்ள உணர்வை ரத்து செய்ய வழிவகுக்கும். இது சுய உணர்வு மற்றும் நம்மைச் சுற்றியுள்ளவர்களின் உணர்வு ஆகியவற்றுடன் தொடர்புடையது. எனவே இதனால் ஒரு நபர் தன்னை ஒரு உயர்நிலை அடைந்ததை உணருவார். ஆகவே இது ஒரு வகை உணர்வாகும். இதனை அனுபவித்தவர் தவிர வேறு யாருக்கும் புரிந்து கொள்ள முடியாது.

வழிபாடுகள் மூளையில் உணர்வு மையங்களை இயக்குகின்றன. எனவே இதன்மூலம் கோட்பாட்டுரீதியான தகவல்களாகவும் சடங்குகளாகவும் இருந்த நம்பிக்கை அகநிலை உணர்ச்சி அனுபவங்களாக மாற்றம் பெருகின்றன. தந்தை தன் மகன் பயணத்திலிருந்து வீட்டிற்கு திரும்பியதும், அவனை வார்த்தை மூலம் வரவேற்பதால் மாத்திரம் திருப்தியடைவாரா? இல்லை மாறாக அவனை

கட்டியணைத்து முத்தமிடும் வரையில் அவரின் மனம் திருப்தியடையாது என்பதே உண்மையாகும். நம்பிக்கைகளையும், கருத்துக்களையும் உணர்வு பூர்வமாக பிரதிபலிப்பதில் மனதுக்கு உள்ளார்ந்த விருப்பம் உண்டு. இந்த விருப்பத்தைத் பூர்த்தி செய்யவே வணக்க வழிபாடுகள் வந்துள்ளன. ஆகவே தொழுகை நோன்பு போன்ற கடமைகளில் கட்டுப்படுதலும் கீழ்ப்படிதலும் அடங்கியுள்ளன. டாக்டர் ஆண்ட்ரூ நியூபெர்க் (அமெரிக்காவின் பென்ஸிலோனியா பல்கழகத்தின் ஆன்மீக ஆய்வுகளுக்கான மையத்தின் இயக்குனர்) கூறுகிறார்: 'உடல்,மனம் மற்றும் உளவியல் ரீதியாக ஆரோக்கியத்தை மேம்படுத்துவதிலும், அமைதி மற்றும் ஆன்மிக உயர்வை அடைவதிலும் (இபாதத்) வணக்கவழிபாடுகள் பெரும் பங்கு வகிக்கிறன, படைப்பாளனிடம் திரும்புவது அதிக அமைதி மற்றும் மேன்மைக்கு வழிவகுக்கிறது'. அமெரிக்காவின் பென்ஸிலோனியா பல்கழகத்தின் ஆன்மீக ஆய்வுகளுக்கான நிலையத்தின் இயக்குனர்

## *ஒரு முஸ்லிம் தினமும் ஐவேளை தொழுவது ஏன்?*

ஒரு முஸ்லிமைப் பொறுத்தவரை அவன் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் போதனைகளை பின்பற்றுபவன் என்ற வகையில் தனது தூதரும் தீர்க்கதரிசியுமான முஹம்மத் தொழுதது போன்று தொழுவான்.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறினார்கள் : "நான் எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே நீங்களும் தொழுது கொள்ளுங்கள்". (ஆதாரம் : புஹாரி).

'முஸ்லிம் தான் நாள் முழுவதும் அல்லாஹ்வுடன் தொடர்பில் இருக்க வேண்டும் என்ற தீவிர விருப்பத்தால்-ஆர்வத்தால் உந்தப்பட்டிருப்பதால், தொழுகையின் மூலம், ஒரு நாளைக்கு ஐந்து முறை தனது இறைவனுடன் உறவாடுகிறான். இது எமக்கு அல்லாஹ்வுடன் தொடர்புகொள்வதற்கு அவன் வழங்கிய வழிமுறையாகும். மேலும் இதனை கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என நமக்கு கட்டளையிட்டது எமது நலனுக்காகவே'.

அல்லாஹ் கூறுகிறான் :

"(நபியே! குர் ஆனாகிய) இவ்வேதத்திலிருந்து உமக்கு அறிவிக்கப்பட்டதை நீர் ஓதுவீராக, தொழுகையும் (அல்லாஹ் விதியாக்கியவாறு) நிறைவேற்றுவீராக, நிச்சயமாக தொழுகை, (அதை நிறைவேற்றுபவரை) மானக்கேடான செயலிலிருந்தும், (மார்க்கத்தில்) மறுக்கப்பட்டதிலிருந்தும் தடுக்கும். நிச்சயமாக (தொழுகையின் மூலம்) அல்லாஹ்வை நினைவுகூர்வது (எல்லாவற்றையும் விட) மிகவும் பெரியதாகும், இன்னும், நீங்கள் செய்பவைகளை அல்லாஹ் நன்கு அறிகிறான்". (அன்கபூத் : 45).

நாம் மனிதர்கள் என்ற வகையில் எமது மனைவிமார்கள் மற்றும் குழந்தைகளுடன் தினமும் தொலைபேசியினூடாக பேசுவதை ஒரு போதும் நிறுத்திக்கொள்வதில்லை. காரணம் அவர்கள் மீதுள்ள அதீத இரக்கமும் இறுக்கமான தொடர்புமாகும்.

தொழுகை மானக்கேடான தவறுகளில் ஈடுபடுவதைத் தடுத்து நல்ல செயல்களைச் செய்யத் தன்னைத் தூண்டும். இவை தொழுகையின் முக்கியத்தை தெளிவாக எடுத்துகாட்டுகிறது. அதாவது ஒருவர் தன்னை படைத்த இறைவனை நினைவுகூர்ந்து அவனின் தண்டனையை பயந்து அவனின் மன்னிப்பிலும், வெகுமதியிலும் ஆசைகொள்ளும் போது இந்நிலை ஏற்படும்.

அதே போல் மனிதனின் செயற்பாடானது அகில உலக இரட்சகனுக்காக மாத்திரம் இதய சுத்தியுடன் மனத் தூய்மைபேணி செய்தல் வேண்டும். ஏனெனில் மனிதனைப் பொறுத்தவரை அவனின் பலவீனங்களின் படி எப்போதும் அவனை நினைவு கூர்வதற்கோ அல்லது எண்ணத்தைப் புதுப்பித்துக்கொள்வதற்கோ சிரமமான விடயமாகும். எனவே, அகிலங்களின இரட்சகனுடன் தொடர்பு கொள்ளவும், வழிபாடு மற்றும் செயல்ற்பாடுகளினூடாக தனது பற்றுறுதியை-விசுவாத்தை புதுப்பித்துக்கொள்ளவதற்கும் தொழுகைக்கான நேரங்கள் இருப்பது அவசியம். இந்த நேரங்களைப் பொறுத்தவரை, குறைந்தபட்சம், தினமும் பகல் மற்றும் இரவில் ஐந்து குறிப்பிட்ட நேரங்களாகும். அவைகளாவன (ஃபஜ்ர், லுஹ்ர், அஸ்ர்,மஃ;ரிப் மற்றும் இஷா) இவை கால சுழற்சியையும் ஒவ்வொரு தொழுகைக்குமிடையில் குறிப்பிடத்தக்க இடைவெளிகளையும் பிரதிபலிக்கிறது.

அல்லாஹ் கூறுகிறான் :

"ஆகவே, அவர்கள் (உம்மைக் குறைவுபடுத்திக்) கூறுவதைப் பற்றி நீர் பொறுமையுடன் சகித்திருப்பீராக. சூரியன் உதயமாவதற்கு முன்னரும், சூரியன் மறைவதற்கு முன்னரும், இரவு காலங்களிலும், (பகல் காலங்களிலும்) பகலின் இருமுனைகளிலும் உமது இறைவனைப் புகழ்ந்து துதி செய்துகொண்டிருப்பீராக. (இதனால்) நீர் திருப்தி அடையலாம்". (தாஹா :130).

இந்த வசனத்தில் குறிப்பிடப்பட்ட சூரிய உதயத்திற்கு முன்னும் சூரியன் மறைவதற்கு முன்னரும் என்பது பஜ்ர் மற்றும் அஸ்ர் தொழுகைகளையும்
இரவு வேளைகளில் என்பது இஷாத் தொழுகையையும்

பகலின் ஓரங்களில் என்பது லுஹர் மற்றும் மஃரிப் தொழுகைகளையும் குறிக்கிறது. பகலில் நிகழும் இயற்கை மாற்றங்களை உள்ளடக்கியதும், இந்த மாற்றங்களை நிகழ்த்துவோனை நினைவுகொள்வதற்குமான ஐந்து தொழுகைகளாகும்.

### *முஸ்லிம்க்கள் மக்கா திசையை நோக்கித் தொழுவது ஏன்?*

'அல்லாஹ்; புனித ஆலயமான கஃபாவை முதல் வழிபாட்டு தளமாகவும், விசுவாசிகளின் ஒற்றுமையின் அடையாளமாகவும் ஆக்கினான். இது தொழுகையின் போது அனைத்து முஸ்லிம்களும் முன்னோக்கும் திசையாகும். மக்காவை மையமாகக் கொண்டு இந்தப் பூமியில் வசிக்கும் பல்வேறு பகுதிகளில் வாழும் முஸ்லிம்கள் அனைவரும் இதனைச்சூழ இணைகின்றனர். இறை வழிபாட்டாளர்கள் தங்களைச் சுற்றியுள்ள இயற்கையுடன் தொடர்பு கொள்ளும் பல காட்சிகளை குர்ஆன் நமக்கு முன்வைக்கிறது. இதற்கு நபி தாவூதுடன் மலைகளும் பறவைகளும் இறைவனை துதிசெய்தது ஆதாரமாக அமைகிறது. "நிச்சயமாக நாம் தாவூதிற்கு நம்மிடமிருந்து அருளை வழங்கினோம். மலைகளே பறவைகளே! அவருடன் சேர்ந்து துதிசெய்யுங்கள். மேலும் நாம் அவருக்கு இரும்பை எளிதாக்கிக் கொடுத்தோம்". (ஸபஃ : 10). இஸ்லாம் அதிகமான இடங்களில் இப்பிரபஞ்சம் முழுவதிலுமுள்ள படைப்பினங்கள் யாவும் அகிலத்தின் இரட்சகனை துதிசெய்து மகிமைப்படுத்துகின்றன என்பதை உறுதிப்படுத்துகின்றன. அல்லாஹ்

கூறுகிறான் : "(இவ்வுலகில் இறைவனை வணங்குவதற்கென) மனிதர்களுக்கு அமைக்கப்பட்ட ஆலயங்களில் முதன்மையானது நிச்சயமாக 'பக்கா' (மக்கா) வில் இருப்பதுதான். அது மிக்க பாக்கியமுள்ளதாகவும், உலகத்தாருக்கு நேரான வழியை அறிவிக்கக் கூடியதாகவும் இருக்கிறது". (ஆல இம்ரான் : 96). கஃபா என்பது சவூதி அரேபியாவின் மக்காவில் உள்ள பெரிய பள்ளிவாயிலின் மத்தியில் அமைந்துள்ள பெட்டி வடிவிலான ஒரு சதுர கட்டிடமாகும். அதற்கு கதவு உண்டு, ஆனால் யன்னல்கள் இல்லை. அதன் உள்ளே ஒன்றும் இல்லை. மேலும் அது யாருடைய கல்லறையும் அல்ல. மாறாக, அது ஒரு தொழுகை அறை. கஃபாவிற்குள் தொழும் ஒரு முஸ்லீம் எந்தத் திசையிலும் தொழலாம். வரலாறு முழுவதும் கஃபா பலமுறை புனரமைக்கப் பட்டுள்ளது. நபி இப்ராஹீம் (ஆபிரகாம்) தனது மகன் இஸ்மாஈலுடன் சேர்ந்து அதன் அடித்தளத்தை முதலில் அமைத்தார். கஃபாவின் மூலையில், ஆதம் நபியின் காலத்திலிருந்தே இருந்ததாகக் கருதப்படும் கருப்புக் கல் உள்ளது. இருப்பினும், இது ஒரு இயற்கைக்கு அப்பாற்பட்ட அல்லது உள்ளார்ந்த சக்தி வாய்ந்த கல் அல்ல. மாறாக, அது முஸ்லிம்களுக்கான அடையாளமாக விளங்குகிறது.

பூமியின் கோளவடிவத் தன்மையானது, தொடராக இரவு பகல் மாறி மாறி வருவதை குறிக்கறது. மேலும் முஸ்லிம்கள் கஃபாவைச் சுற்றி தவாப் செய்வதன் மூலம் ஒன்றிணைந்திருப்பதும், உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள முஸ்லிம்கள் ஐவேளைத் தொழுகைகளில் மக்கா திசை நோக்கித் தொழுவதும் இந்த பிரபஞ்சத்தின் ஒரு பகுதி அகிலங்களின் இரட்சகனை மகிமைப்படுத்தி துதிப்பதில் எப்போதும் தொடர்பில் இருப்பதை பிரதிபலிக்கிறது. இதனை படைப்பாளனான அல்லாஹ் தனது நபி ஆபிரகாமுக்கு- இப்ராஹிமுக்கு- கஃபாவின் அஸ்திவாரங்களை உயர்த்தி அதனைத் தவாப் செய்யுமாறு கட்டளையிட்டான். அதே போன்று கஃபாவானது தொழுகையின் திசையாக இருக்க வேண்டும் என எமக்குக் கட்டளையிட்டுள்ளான்.

### *தொழுகையின் திசை அல்-அக்ஸா பள்ளிவாயிலிருந்து மக்காவில் உள்ள புனித ஹரம் பள்ளிக்கு மாற்றப்பட்டது ஏன்?*

கஃபா ஆலயம் தொடர்பான குறிப்புகள் வரலாறு முழுதும் அதிகமாக

இடம்பெற்றுள்ளன. அரேபிய தீபகற்பத்திற்கு அப்பால் தொலைத்தூரத்திலிருந்து இதனை தரிசிப்பதற்காக மக்கள் வருடம் தோரும் வருகை தந்திருந்தனர். அத்துடன் முழு அரேபியத் தீபகற்பத்தில் உள்ளோரும் இதனைப் புனிதப்படுத்துகின்றனர். கஃபா குறித்து பழைய ஏற்பாட்டிலும் குறிப்பிடப்பட்டுள்ளது: 'பாக்கா பள்ளத்தாக்கைக் கடந்து, அவர்கள் அதை நீரூற்றுகளின் இடமாக மாற்றுகிறார்கள்'. (பழைய ஏற்பாடு, சங்கீதம் 84).

அரேபியர்கள் இஸ்லாம் வர முன் கஃபாவை மிகவும் மதித்து புனிதப்படுத்துவோராக இருந்தனர். ஆரம்பத்தில், முஹம்மது நபி தூதுவராக அனுப்பப்பட்டவேளை, அல்லாஹ் ஜெரூசலத்தில் உள்ள பைத்துல் மக்திஸை நபியவர்களின் கிப்லாவாக ஆக்கினான். முஹம்மது நபியைப் பின்பற்றுவோரில் அவர்களை எதிர்போரிலிருந்து, அல்லாஹ்வுக்கு தூய்மையான முறையில் கட்டுப்படுவோரை வேறுபடுத்துவதற்கான சோதனையாக, புனித ஹரமை நோக்கி தொழும் திசையாக ஆக்கிக்கொள்ளுமாறு அல்லாஹ் கட்டளையிட்டான். இதயங்களைத் தூய்மைப்படுத்துவதும், அல்லாஹ்வில் மாத்திரம் உள்ளத்தைப் பற்றுக்கொள்ளச் செய்வதுமே கிப்லாவை (தொழுகையின் திசையை) மாற்றியதன் பின்னணியில் உள்ள பிரதான நோக்கமாகும். நபியவர்கள் வழிகாட்டலை ஏற்று முஸ்லிம்கள் கட்டுப்பட்டனர். யூதர்களோ தங்களின் கொள்கைக்கு நியாயம் கற்பிக்க நபியவர்கள் பைத்துல் மக்திஸை நோக்கித் தொழுததை சார்பாக கொண்டனர்.

கிப்லாவின் மற்றமானது, அகிலங்களின் இரட்சகனான அல்லாஹ்வுடன் செய்த உடன்படிக்கைகளை இஸ்ரவேலர்கள் மீறியதன் காரணமாக, மதத்தலைமையானது இஸ்ரவேலர்களிடமிருந்து அகற்றப்பட்டு அரேபியர்களுக்கு மாறுவதற்கான அறிகுறியாகவும் திருப்புமுனையாகவும் காணப்பட்டது.

கஃபா மற்றும் ஏனைய சின்னங்களை புனிதப்படுத்துவதிதினூடாக ஹஜ்ஜின் சடங்குகள் உருவ வழிபாடுகளுக்குரிய கிரியைகளை கொண்டதாக கருதமுடியாதா?

சிலைவழிபாட்டு மதங்களுக்கும் குறிப்பிட்ட சில இடங்கள், மற்றும்

சடங்குகளை சிறப்பிப்பதற்குமிடையே பாரிய வேறுபாடுகள் உண்டு. அவை மத அல்லது தேசிய அல்லது கலாச்சாரமாக இருந்தாலும் சரியே!

உதாரணமாக, ஹஜ்ஜின் போது ஜமராத்துக்ளில் கல்லெறிவது, ஷைத்தனுக்கு முரண்படுவதையும் அவனைப் பின்பற்ற மறுப்பதையும் காட்டுகிறது. மற்றும் நமது நபி இப்ராஹிம் (ஆபிரகாம்) அவர்களின் செயலைப் பின்பற்றுவதாகக் கருதப்படுகிறது. தனது இரட்சகனின் கட்டளைப்படி மகனை பலியிடுவதை ஷைத்தான் தோன்றி தடுக்க முயற்சித்தான். அப்போது இப்ராஹிம் நபி ஷைத்தானுக்கு கூழாங்கற்களால் கல்லெறிந்தார். இதனையே முஸ்லிம்கள் ஒரு கிரியையாக நிறைவேற்றுகின்றனர். (இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் மூலம் அறிவிக்கப்பட்ட ஹதீஸ் முஸ்தத்ரக் ஹாகிமிலும் இப்னு குஸைமாவின் ஸஹீஹிலும் பதிசெய்யப்பட்டுள்ளது). இதேபோன்று, ஸஃபா மற்றும் மர்வாவிற்கு இடையே ஓட்டமும் நடையுமாக செல்லும் வணக்கமுமாகும். தனது மகன் இஸ்மாயிலுக்காக அன்னை ஹாஜர் தண்ணீரைத் தேடி இரு மலைக்கிடையில் அவர்கள் ஓடியமையை நினைவு கூறும் ஒரு செயல். இதனை ஹஜ் மற்றும் உம்ராவின் போது நிறைவேற்றும் ஒரு கடமையாக இஸ்லாம் விதித்துள்ளது. இந்த விவகாரத்தில் மாறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும், ஹஜ்ஜின் அனைத்து கிரியைகளும் அல்லாஹ்வை நினைவு கூறுவதையும், அகிலங்களின் இரட்சகனுக்கு அடி பணிந்து வழிபடுதலையும் குறித்துக்காட்டுவதுடன் அதனையே இலக்காகவும் கொண்டுள்ளது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். மாறாக அவர்கள் கற்களையோ, இடங்களையோ அல்லது தனி நபர்களையோ வணங்குவதை நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. அதே வேளை வானங்கள், பூமி மற்றும் அவற்றுக்கிடையே உள்ள அனைத்தினதும் இரட்சகனும், எல்லாவற்றையும் படைத்தவனும், அவற்றின் இறையாண்மையும் கொண்ட ஒரே கடவுளை வணங்குவதற்கு இஸ்லாம் அழைப்பு விடுக்கிறது.

'முஸ்லிம் ஹஜருல் அஸ்வதை வணங்காதிருப்பின் அதனை ஏன் முத்தமிடவேண்டும்?. குறிப்பு: கறுப்புக் கல் (Black Stone, Hajarul Aswad, அரபு மொழி: الحجر الأسود) என்பது சவூதி அரேபியாவின் மக்கா நகரில் பெரிய பள்ளிவாசல் நடுவில் அமைந்துள்ள கஃபா எனும் கட்டடத்தின் கிழக்கு மூலையில் அமைக்கப்பட்டுள்ள ஒரு கல் ஆகும். இது இஸ்லாமிய பாரம்பரியத்தின்படி ஆதம், ஹவ்வா ஆகியோரின் காலத்திருந்தே இஸ்லாமியர்களால் போற்றப்பட்ட

சின்னமாகும். இந்தக் கல் (முஹம்மது நபியின்) பிறப்புக்கு முன்னே, இஸ்லாத்தின் ஆரம்ப காலம் முதல் போற்றப்படுகிறது. இஸ்லாமிய முறைப்படி கறுப்புக் கல் என்பது முஹம்மது நபியினால் கிபி 605 ஆம் ஆண்டு கஃபாவின் சுவருடன் இணைத்து அமைக்கப்பட்டது. கிபி 605 இற்கு 5 ஆண்டுகளுக்கு முன்னர் பல துண்டுகளாக உடைக்கப்பட்ட இந்தக் கல் தற்போது காபாவின் ஓரத்தில் ஒரு வெள்ளி சட்டத்தினால் சாந்திடப்பட்டுள்ளது. முஹம்மது நபி வழிமுறையைப் பின்பற்றி இன்றும் முஸ்லிம் யாத்திரிகர்கள் ஹஜ் கடமையில் கஃபாவைச் சுற்றி வந்து தவாப் செய்யும் போது இக்கல்லை ஆர்வத்துடன் முத்தமிடுவார்கள். ((விகிபீடியா).

உதாரணத்திற்கு தனது தந்தையிடமிருந்து கிடைக்கப்பெற்ற ஒரு கடிதத்தின் உரையை ஒரு நபர் முத்தமிடுகிறார் என்றால் அவரை நாம் குறைகூறுவோமா? மாட்டோமல்லவா?! இதே போன்றுதான் ஹஜருல் அஸ்வத் கல்லின் நிலையும் என்பதையும் மனம் கொள்ள வேண்டும்.! ஹஜ்ஜின் அனைத்து கிரியைகளும் அல்லாஹ்வை நினைவு கூறுவதையும், அகிலங்களின் இரட்சகனுக்கு அடி பணிந்து வழிபடுதலையும் குறித்துக்காட்டுவதுடன் அதனையே இலக்காகவும் கொண்டுள்ளது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். மாறாக அவர்கள் கற்களையோ, இடங்களையோ அல்லது தனி நபர்களையோ வணங்குவதை நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. (1839 : هذه الترجمة متكررة. ينظر) அதே வேளை வானங்கள், பூமி மற்றும் அவற்றுக்கிடையே உள்ள அனைத்தினதும் இரட்சகனும், எல்லாவற்றையும் படைத்தவனும், அவற்றின் இறையாண்மையும் கொண்ட ஒரே கடவுளை வணங்குவதற்கு இஸ்லாம் அழைப்பு விடுக்கிறது. □□□ أيضا متكرر. ينظر رقم **1840)**

அல்லாஹ் கூறுகிறான் :

"வானங்களையும் பூமியையும் எவன் படைத்தானோ அ(ந்த ஒரு)வனின் பக்கமே நிச்சயமாக நான் முற்றிலும் நோக்குகின்றேன். நான் (அவனுக்கு எதையும்) இணைவைப்பவன் அல்ல" (என்று கூறினார்). (அல் அன்ஆம்: 80).

### *கடும் நெரிசல் காரணமாக சில முஸ்லிம்கள் மரணிப்பதற்கு வாய்ப்புல்லதால் ஹஜ் ஒரு பயங்கரமான வணக்கம் -கிரியை- என்று கருதப்படாதா?*

ஹஜ்ஜில் நெரிசல் காரணமாக குறிப்பிட்ட சிலவருடங்களில் மாத்திரமே மரணசம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. ஆனால் வழமையில் நெரிசல் காரணமாக மரணமடைவோரின் தொகை மிகவும் குறைவானதாகும். ஆனால் உதாரணத்திற்கு குறிப்பிடுவோமாயின் நாம் மது அருந்துவதன் விளைவாக இறக்கும் நபர்களை கணக்கிட்டால் அவர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் பல மில்லியன்கலாகும். அதுமாத்திரமின்றி தென் அமெரிக்காவில் கால்பந்து அரங்கங்கள் மற்றும்; திருவிழாக்களில் பாதிக்கப்பட்டு இறப்போரின் எண்ணிக்கை இதை விட அதிகமாகும்! என்பதை கருத்திற்கொள்ள வேண்டும். எப்படியிருந்தாலும், மரணம் தவிர்க்க முடியாத மாபெரும் உண்மையாகும், இறைவனை சந்திப்பது அது போன்ற உண்மையாகும். ஆகவே பாவத்தில் இறப்பதை விட நற்காரியத்தில் இறப்பது மிகவும் சிறந்தல்லவா!

மால்கம் எக்ஸ் கூறுகிறார்:

'இந்த பூமியில் எனது இருபத்தி ஒன்பது வருட வாழ்க்கையில் முதன்முறையாக, நான் எல்லாவற்றையும் படைத்தவன் முன் நின்று, ஒரு முழுமையான மனிதனாக இருப்பதை உணர்ந்தேன். அதே போன்று எல்லா நிறத்தவரும், இனங்களும் சங்கமமாகி ஓரிடத்தில் அணிதிரண்டு உண்மையான சகோதரத்துவத்தை பிரதிபலிக்கும் ஒரு சமூகத்தை நான் கண்டதில்லை. அமெரிக்கா இஸ்லாத்தை புரிந்து கொள்ள வேண்டும், ஏனென்றால் இனவெறிப் பிரச்சினைக்கான யதார்த்தமான தீர்வை தன்னகத்தே கொண்ட ஒரே மதமாக இஸ்லாம் மாத்திரமே திகழ்கிறது' (இவர் ஆபிரிக்க இனத்தை சேர்ந்த அமெரிக்க இஸ்லாமிய போதகர். மற்றும் மனித உரிமைகள் போராளி, அமெரிக்காவில் இஸ்லாமிய இயக்கத்தின் போக்கை சரிசெய்து, சரியான இஸ்லாமிய கொள்கையின் பால் அழைப்பு விடுத்தவர்).

## படைப்பாளியின் கருணை :

*இறைவன் இஸ்லாத்தில் உள்ள தனது அடியார்களை நேசிக்கிறான், எனவே அவன் அவர்களை தனிமனிதத்துவ (Individualism) வழிமுறையை பின்பற்ற ஏன் அனுமதிக்கவில்லை ? (தனிமனித நலன்களைப் பாதுகாப்பதை ஒரு அடிப்படை விஷயமாக தனிமனிதவாதம் கருதுகிறது, அதே நேரத்தில் சமூகம் அல்லது அரசாங்கம் போன்றவற்றால் தனிநபரின் நலன்களில் எந்தவொரு வெளிப்புற தலையீட்டையும் அது எதிர்க்கிறது). 1857 அல் குர்ஆனில், இறைவனின் கருணையையும், அடியார்கள் மீது கொண்ட அன்பையும் குறிக்கும் பல வசனங்கள் உள்ளன. இருப்பினும், இறைவன் தம்முடைய அடியானிடம் அன்பு செலுத்துவது மக்கள் தங்களுக்கு மத்தியில் அன்பு பாராட்டிக்கொள்வது போன்றது அல்ல. ஏனென்றால் மனித அளவுகோளின் படி ஒரு காதலன் தான் இழந்த தேவையை காதலியிடமே பெற்றுக்கொள்கிறான். ஆனால் அல்லாஹ், எம்மில் எவ்விதத் தேவையுமற்றவன். அவன் நம்மீது கொண்ட அன்பானது பாசமும் அருளுமாகும். பலமானவன் பலவீனமானவனை விரும்புவது, வசதி படைத்தவன் ஏழைகள் மீது நிறைந்த அன்பு காட்டுவது, ஒரு பலசாலி ஆதரவற்றவரிடம் அன்பு காட்டுவது போன்ற நிலைக்கு ஒப்பானதாகும். எமது குழந்தைகளை நேசிக்கிறோம் என்ற அடிப்படையில் அவர்கள் விரும்பியதையெல்லாம் செய்வதற்கு அவர்களுக்கு அனுமதி வழங்குவோமா? எமது குழந்தைகளை நாம் நேசிக்கிறோம் என்பதனால் அவர்களை யன்னலினூடகாப் பாய்ந்து தற்கொலை செய்து கொள்வதையோ, அல்லது திறந்த மின்னோட்டமுள்ள கம்பிகளைப் பிடித்து விளையாடவோ அனுமதிப்போமா?*

நாட்டின் நலன்கள், சமூகத்தில் ஏற்படும் பாதிப்புகள், மதக் கருத்துகள் ஆகியவற்றைப் புறக்கணித்து, தனி நபரை முதன்மையாகக் கவனத்தில் கொண்டு, தனிப்பட்ட நன்மை மற்றும் மகிழ்ச்சியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தனிநபர் முடிவுகள் எடுக்க முடியாது. அத்துடன் ஒருவர் தன் பாலினத்தை மாற்றிக் கொள்வதற்கும், விரும்பியதைச் செய்வதற்கும், ஆடை அணிந்து கொள்வதற்கும், பாதை பொதுவானது என்று சாக்குப் போக்கு கூறி அவர் விரும்பும் விதத்தில்

நடந்துகொள்ளும் இப்போக்கை ஒரு போதும் ஏற்றுக்கொள்ள முடியாது.

ஒருவர் ஒரு வீட்டில் அவரின் ஏனைய பல நபர்களுடன் கூட்டாக – ஒன்றாக- வசிக்கிறார் என்றால், அந்த வீடு அனைவருக்கும் சொந்தமானது என்ற அடிப்படையில், அந்த வீட்டின் அறையொன்றை தனது இயற்கைத் தேவைக்காக பயன்படுத்துவது போன்ற தகாத நடத்தையில் ஈடுபடுவதை அவர்கள் ஏற்றுக்கொள்வார்களா? இவ்வாறான ஒரு வீட்டில் வரையறைகள் மற்றும் கட்டுப்பாடுகள் இல்லாது வாழ்வதை யாரும் ஏற்றுக்கொள்வார்களா? ஆகவே கட்டற்ற சுதந்திரத்தைப் பெற்ற மனிதன் ஒரு அசிங்கமான மனிதனாக மாறி விடுகிறான். இவ்வாறான சுந்திரத்தித்தை அனுபவிப்பதற்கு அவனால் ஒரு போதும் முடியாது என்பதே நிரூபிக்கப்பட்ட உண்மையாகும். தனிமனிதனின் அதிகாரம் அல்லது செல்வாக்கு எதுவாக இருந்தாலும், தனிமனிதத்துவம் (Individualism ) என்பது கூட்டு அடையாளத்திற்கு மாற்று அடையாளமாக இருக்க முடியாது. சமூகத்தின் உறுப்பினர்கள் என்போர் பல படித்தரங்களை உடையயோர் ஆவர். அவர்கள் ஒவ்வொருவரும் இன்னொருவரை சார்ந்து இருப்பதுடன், ஒருவர் மற்றவரில் தேவையுடையோராகவும் உள்ளனர். அந்த வகையில சமூக உறுப்பினர்களில் சிலர் இராணுவ வீரர்கள், மருத்துவர்கள், செவிலியர்கள் மற்றும் நீதிபதிகள் போன்ற பாத்திரங்களை வகிக்கின்றனர். இவர்களில் எவரேனும் தங்கள் சொந்த மகிழ்ச்சியை அடைவதை மாத்திரம் பிரதானமக் கொண்டு மற்றவர்களை புறக்கணித்து நடக்க முடியுமா?

தனிநபர்கள் தங்கள் உணர்ச்சியை கட்டவிழ்த்துவிடும் போது, அவர்கள் அதற்கு அடிமைகளாக மாறுகிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் உணர்ச்சியைக் கட்டுக்குள் வைத்து அதனை மிகைக்கும் எஜமானர்களாக இருக்க வேண்டும் என்று அல்லாஹ் விரும்புகிறான். அது மாத்திரமின்றி மனிதர்கள் தங்கள் உணர்ச்சியை கட்டுப்படுத்துவதில் புத்திசாலியாகவும், பகுத்தறிவு உள்ளவராகவும், திறன் படைத்தவராகவும் இருக்க வேண்டும் என்று அல்லாஹ் விரும்புகிறான். இதன் மூலம் உணர்ச்சியை முடக்கி செயலிழக்கச் செய்திட வேண்டும் என்பது அர்த்தமல்ல. மாறாக ஆன்மீக உயர்வின் பால் சரியான வழிமுறையினூடாக இதனை வழிப்படுத்துவதே இதன் உயர் குறிக்கோளாகும்.

தனது பிள்ளைகளுக்கு விளையாட வேண்டும் என்ற ஆசை இருந்தபோதிலும், எதிர்காலத்தில் கல்வி ரீதியாக உயர் அடைவொன்றை பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக, பிள்ளைகள் படிப்பதற்காக சிறிது நேரம் ஒதுக்க வேண்டும் என்று ஒரு தந்தை வற்புறுத்தின், இவ்வாறான ஒரு தந்தையை கொடுமை நிறைந்த தந்தையாக கருதுவோமா? இல்லை என்பதே இதற்காகான பதிலாகும. அதே போல் ஒரு மனிதன் தான் நினைத்த விதத்தில் தான்றோண்டித்தனமாக எவ்விதக் கட்டுப்பாடுமின்றி இவ்வுலகில் வாழ முடியாது என்பதே யதார்த்தமாகும்.

### *படைப்பாளனான அல்லாஹ் தனது அடியார்களுடன் மகா கருணையாளனாக உள்ளான் என்றால் ஏன் ஒரு தனிநபரின் ஒரு பாலின பாலியல் விருப்பங்களை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை?*

அல்லாஹ் கூறுகிறான் :

"லூத்தையும் (நம் தூதராக அவருடைய மக்களுக்கு நாம் அனுப்பிவைத்தோம்.) அவர் தம் மக்களை நோக்கி "உங்களுக்கு முன்னர் உலகத்தில் எவருமே செய்திராத மானக்கேடானதொரு காரியத்தையா நீங்கள் செய்கிறீர்கள்?. நிச்சயமாக நீங்கள் பெண்களை விட்டு (விட்டு) ஆண்களிடம் காம இச்சையைத் தணித்துக் கொள்ளச் செல்கிறீர்கள். நீங்கள் மிக்க வரம்பு மீறிய மக்களாக இருக்கிறீர்கள்" என்று கூறினார். இவர்களை உங்கள் ஊரை விட்டு வெளியேற்றுங்கள்' இவர்கள்தாம் மிக்க பரிசுத்தமான மனிதர்களாயிற்றே' என்று கூறியதைத் தவிர வேறெதுவும் அவரது சமூகத்தாரின் பதிலாக இருக்கவில்லை". (அல்-அராஃப்: 80-82). இந்த வசனம் ஓரினச்சேர்க்கை மனித மரபியலாக வந்த விடயமல்ல என்பதையும், இது மனித மரபணு குறியீட்டின் ஒரு பகுதியுமல்ல என்பதனையும் உறுதிப்படுத்துகிறது. ஏனெனில் லூத் சமூகமே இந்த வகையான ஈனச் செயலில் முதலில் ஈடுபட்டுள்ளனர். இது பாலியல் விலகலான ஓரிணச்சேர்க்கைக்கும் மரபியல் பரம்பரைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதை உறுதிப்படுத்தும் பரந்த அறிவியல் ஆய்வுகளுடன் ஒத்துப்போகிறது. (அல்குர்ஆன்,அஸ்ஸுன்னா கூறும் அறிவியல் அற்புதங்களுக்கான அல் கஹீல் கலைகளஞ்சியம் (https://kaheel7.net/?p=15851)).

திருடனின் திருடும் விருப்பத்தை-ஆர்வத்தை –( Interests) நாம் ஏற்று மதிக்கிறோமா? இதுவும் ஒரு வகை ஆர்வமே, ஆனால் இரண்டு சந்தர்ப்பங்களிலும், இது ஒரு இயற்கைக்கு மாறான ஆர்வ- நிலையாகும். இது மனித இயல்புக்கு எதிரானதும், இயற்கை ஒழுங்கை மீறுகிற விடயமுமாக இருப்பதால், இது நெறிப்படுத்தப்பட்டு சரி செய்யப்பட வேண்டும்.

இறைவன் மனிதனை படைத்து ^+றான வழியையும் காண்பித்துக் கொடுத்துள்ளான். அந்தவகையில் மனிதன் நன்மை மற்றும் தீமையின் பாதையை தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் அவனுக்கு உண்டு.

அல்லாஹ் கூறுகிறான் :
"நாம் அவனுக்கு நன்மை தீமை எனும் இரு பாதைகளை காட்டிக்கொடுத்தோம்"(அல்-பலத்: 10). எனவே, ஓரினச்சேர்க்கையைத் தடைசெய்யும் சமூகங்களில் இயற்கைக்கு மாறான இச்செயற்பாடு அரிதாகவே வெளிப்படுத்துவதைக் காண்கிறோம், அதே சமயம் அத்தகைய நடத்தையை அனுமதித்து ஊக்குவிக்கும் சூழல்களில் ஓரினச்சேர்க்கையாளர்களின் விகிதம் மற்றும் எண்ணிக்கை அதிகரித்து வருவதை காண முடிகிறது. மனிதர்களிடத்தில் காணப்படும் இயற்கைக்கு மாறான இச்செயற்பாட்டை சாத்தியப்படுத்துவதை தீர்மானிப்பது அவர்களைச் சுற்றியுள்ள சூழமும் போதனைகளுமே என்பதை இது சுட்டிக்காட்டுகிறது. உதாரணத்திற்கு, தொலைக்காட்சியை கண்டுகழித்தல், தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துதல் அல்லது குறிப்பிட்ட கால் பந்து விளையாட்டுக் குழு மீதான பற்று ஆகியவற்றின் அடிப்படையில் மனித அடையாளம்- ஆளுமை- நிமிடத்திற்கு நிமிடம் தொடர்ந்து மாற்றத்திற்குட்படுகிறது. எனவே உலகமயமாக்கலானது அவர்களை சிக்கல் நிறைந் மனிதர்களாக கட்டமைத்துள்ளது என்பதை நாம் இதிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது. ஆகவே இன்று துரோகி ஒரு கருத்தியலாளனாகவும், நடத்தை கெட்டவன் (ஓரினச்சேர்கையாளன்) சாதாரண ^+ரிய நடத்தை கொண்ட ஒருவனாகவும் மாறிவிட்டனர். அவர்கள் தற்போது பொது வெளியில் விவாதங்களில் பங்கேற்க சட்டப்பூர்வ உரிமையைப் பெற்றுள்ளனர். ஆகையால் நாம் அவர்களை ஆதரித்து சமரசம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது!. தொழில்நுட்பத்தை கையகப்படுத்தி வைத்திருப்போரிடமே இப்போது ஆதிக்கமும் அதிகாரமும் காணப்படுகிறது. அந்த வகையில் வக்கிர நடத்தை உடையோரிடத்தில்

அதிகாரம் இருப்பின், அவர்கள் தங்கள் நம்பிக்கைகளை மற்ற தரப்பினரின் மீது திணிப்பர். இது ஒரு நபர், தன்னுடனும் தன் சமூகம் மற்றும் படைப்பாளனுடனான தனிப்பட்ட உறவில் பாதிப்பை ஏற்படுத்துவதற்கு வழிகோலும். தனிமனிதத்துவம் (Individualism) ஆனது நேரடியாக பாலியல் நெறிபிறழ்வுடன் ((Paraphilia)) இணைவதானது, மனித இனம் சார்ந்த உள்ளார்ந்த மனித இயல்பு மறைந்து, பாரம்பரிய குடும்பம் என்ற கருத்து சரிந்து போவதற்கு காரணமாய் அமைந்து விடும். இந்தக் கருத்தியலின் தொடர்ச்சியானது சமகால மனிதர்களின் சாதனைகளையும், குடும்பம் என்ற கருத்தையும் வீணடித்துவிடும் என்பதால், மேற்குலகம் தனிமனிதவாதத்தை ((Individualism) முறியடிக்கத் தீர்வுகளைத் தேடத் தொடங்கியுள்ளது. இதன் விளைவாக, சமூகத்தில் மக்கள்தொகை குறைவடைதல் பிரச்சினையை மேற்கு நாடுகள் தொடர்ந்து எதிர்கொள்கின்றன. இது புலம்பெயர்ந்தோரை தருவிப்பதற்கான கதவுகளைத் திறக்க வழிவகுக்கிறது. இறை நம்பிக்கையும், அவன் நமக்காக உருவாக்கிய பிரபஞ்ச விதிகளை மதித்து நடப்பதும், அவனுடைய ஏவல் விலக்கல்களை கடைப்பிடித்து ஏற்று வாழ்வதுமே இம்மையிலும் மறுமையிலும் மகிழ்ச்சிக்கான பாதையாகும்.

### *இறைவன் (அல்லாஹ்) தன்னை சில போது மிகப்பெரும் மன்னிப்பாளன், மகா கருணையாளன் என்றும், சில சமயங்களில் கடுமையாக தண்டிப்பவன் என்றும் விவரிப்பது ஏன்?*

மனித இயல்பையும், பலவீனத்தையும் கருத்தில் கொண்டு, விடாப்பிடியாக இன்றி பாவம் செய்வோரை அவர்கள் மனந்திருந்தி மன்னிப்புக் கோரினால் இறைவன் மன்னிப்பவனாகவும் அவர்களுடன் இரக்கமுள்ளவனாகவும் இருக்கிறான். இதில் இறைவனை சவாலுக்குட்படுத்துவது என்பது கிடையாது. இருப்பினும், இறைஇருப்பை மறுத்து, தன்னை சிலைகள் அல்லது விலங்குகளின் வடிவில் சித்தரிப்போரை, அல்லது மனந்திருந்தாமல் பாவச்செயல்களில் விடாப்பிடியாக நிலைத் திருப்பவர்களை கடுமையாக தண்டிப்பான். ஒருவன் மிருகத்தை அவமதித்தால், யாரும் அவனை குறை கூற மாட்டார்கள், ஆனால் அவர்கள் பெற்றோரை அவமதித்தால், அவர்கள் கடுமையாக கண்டனத்துக்கு ஆளாகுவார். அப்படியாயின், இந்த சமன்பாட்டை அவமதிப்பை படைப்பாளனான இறைவன் விவகாரத்தில் பிரயோகித்தால்;? அது இதை விட மிகப்பெரும்

குற்றமல்லவா?! ஆகையினால் நாம் பாவத்தை சிறியதாக கருதக்கூடாது. மாறாக யாருக்கு மாறு செய்கிறோம் என்பதைத்தான் நாம் அவதானிக்க வேண்டும்.

### *தீமை அல்லாஹ்வின் புறத்திலிருந்து வருகிறதா?*

தீமையானது இறைவன் புறத்திலிருந்து வருவதில்லை. தீமைகள் அடிப்படையில இருப்பியல் சார்ந்த விடயமல்ல. ஆக, இருப்பானது நன்மையின் மொத்த வடிவமாகும்.

உதாரணத்திற்கு ஒருவர் இன்னொருவரை, எழுந்து நடமாட முடியாத அளவு மிகக்கடுமையாக தாக்கிவிட்டார் என்றால் அவர் அநியாயம் என்ற பண்பை பெற்றவராக மாறிவிடுகிறார். அநியாயம் என்பது தீமையுமாகும்.

இருப்பினும், ஒரு தடியை எடுத்து மற்றொரு நபரைத் தாக்கும் ஒருவரிடம் அதிகார ஆற்றல் இருப்பது இயல்பிலேயே தீமை அல்ல.

இறைவன் அவனுக்கு வழங்கிய நாட்டம் அவனுள் இருப்பது தீமையல்ல.
அவனது கையை அசைக்கும் ஆற்றல் அவனிடம் காணப்படுவதும் தீமையல்ல.
தடியில் அடிக்கும் பண்பு இருப்பதும் தீமையல்ல.

இந்த இருத்தலியல் விடயங்கள் அனைத்தும், உண்மையில் நல்லவையாகும். நாம் ஏலவே குறிப்பிட்ட உதாரணத்தில் உள்ளது போல், தவறான பயன்பாட்டின் மூலம் எப்போது தீங்கு விளைவிப்பதாக அமையுமோ அப்போது மட்டுமே அவை அதற்குரிய தீய பண்புகளைப் பெறுகின்றன. இந்த எடுத்துக்காட்டின் அடிப்படையில், தேள் மற்றும் பாம்புகளின் இருப்பில் உண்மையில் எந்தத் தீங்கும் கிடையாது. அவைகளை எவராவது எதிர்கொள்வதினூடாக அவரை அவை தீண்டுவதன் மூலமே தீங்கு ஏற்படுகிறது. எனவே, இறைவனின் செயல்களில் தீமை கிடையாது. அவை முற்றிலும் நன்மையானவையாகும். மாறாக, தனது இறைவிதியின் மூலம் இடம்பெறும் நிகழ்வுகளில், அவற்றை தடுப்பதற்கான வல்லமையை பெற்றிருப்பினும் அதில் இறை நுட்பமும், மனிதர்களுக்கான அதிக நலன்களும் உள்ளடங்கியுள்ளன. ஆனால் மனிதன் இந்த நன்மைகளை

பிழையான முறையில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான்.

### *இயற்கை அனர்த்தங்கள் நிகழ்வதில் இறைவனின் நோக்கம்; யாது?*

இறைவன் பௌதீக விதிகளையும் அவற்றை நிர்வகிக்கும் கோட்பாடுகளையும் வைத்துள்ளான். இப்பிரபஞ்சத்தில் முறைகேடு அல்லது சுற்றுச்சூழல் கோளாறு ஏற்பட்டால் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்கின்றது. அத்துடன் பூமியில் ^+ர்திருத்தமும் மிகச் சிறந்த வாழ்வும் தொடர வேண்டும் என்ற நோக்கில் இந்த சமநிலையின் இருப்பை அது பேணிப்பாதுகாக்கிறது. மக்களுக்கும் வாழ்க்கைக்கும் நன்மையளிப்பவை –பயனளிப்பவை மாத்திரமே எஞ்சியிருக்கும். ஏனையவை அழிந்துவிடும். பூமியில் பேரழிவுகள் ஏற்படும் போது நோய்கள், எரிமலைகள், பூகம்பம், வெள்ளம் போன்றவைகளால் , மனிதர்கள் பாதிக்கப்படுகின்றனர். இத்தகைய சூழ்நிலைகளில், இறைவனின் திருப் பெயர்களான வலிமைமிக்கவன், குணப்படுத்துபவன் பாதுகாப்பாளன் போன்ற பெயர்கள் பிரதிபலிக்கின்றன. அதாவது நோயாளியை குணப்படுத்துவதிலும், அனர்த்தத்தில் பாதிக்கப்பட்டோரை பாதுகாப்பதிலும் அவனின் உயரிய திருநாமங்கள் வெளிப்படுகின்றன. அதேபோல், நீதியாளன் எனும் அவனின் திருநாமமானது பிறருக்கு அநியாயம் செய்தவன், மற்றும் பாவியை தண்டிப்பதிலும் வெளிப்படுகிறது. அதே நேரத்தில் அவன் ஞானமிக்கவன் எனும் திருநாமமானது பாவியல்லாதோரை சோதிப்பதில் பிரதிபலிக்கிறது. அதாவது ஒருவன் இறைவனின் சோதனையில் பொறுமை காத்தால் அவனுக்கு வெகுமதி வழங்கியும், யார் அவனின் சோதனையில் வெறுப்போடு நடந்து கொள்கிறானோ அவனுக்கு தண்டனை வழங்குவதன் மூலமும் கூலி வழங்குவதாகும். ஒரு மனிதன் தனது இரட்சகனின் அழகிய கொடைகளை –வெகுமதிகளை அறிந்து கொள்வது போல், இந்த சோதனைகள் மூலம் அவனது மகத்துவத்தையும் தெரிந்து கொள்கிறான். இறைவனின் அழகிய இறை பண்புகளை அறிந்து கொள்வதால் மாத்திரம் அவனை அறியமுடியாது மாறாக ஏனைய எல்லாப் பண்புகளையும் அறிந்திருத்தல் வேண்டும்.

சமகால சடவாத தத்துவஞானிகளில் பலர் நாத்திகத்தை ஏற்றுக் கொள்வதில் இவ்வுலகில் நிகழும் இன்னல்கள், தீமைகள் மற்றும் வலிகள் பின்னணியாக அமைந்தது. அவர்களுள் தத்துவஞானி 'அந்தோனி ஃப்ளு'வும்

ஒருவர், அவர் இறப்பதற்கு முன் கடவுள் இருப்பதை ஒப்புக்கொண்டு 'கடவுள் இருக்கிறார்' என்ற புத்தகத்தை எழுதினார். இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் நாத்திகத்தில் ஒரு முக்கிய தலைவராக இருந்த போதிலும், கடவுள் இருப்பதை அவர் ஒப்புக்கொண்டபோது, அவர் பின்வருமாறு கூறினார்:

'மனித வாழ்க்கையில் தீமை மற்றும் துன்பம் இருப்பது கடவுளின் இருப்பை நிராகரிக்காது. ஆனால் தெய்வீக பண்புகளை மறுபரி^+லனை செய்ய நம்மை தூண்டுகிறது'. 'இந்த பேரழிவுகள் ஒரு நபரின் பௌதீகரீதியான திறன்களைத் தூண்டுவதால், பல நேர்மறையான அம்சங்களைக் கொண்டிருப்பதாக 'அந்தோனி ஃப்ளு', கருதுகிறார். அதாவது இந்தப் பேரழிவிலிருந்து காக்கவல்ல பல விடயங்களை புதிதாக கண்டுபிடிப்பதற்கான உத்வேகத்தை மனிதனுக்கு வழங்குவதுடன், சிறந்த உளவியல் பண்புகளைத் தூண்டி, மக்களுக்கு உதவ அவனை நிர்ப்பந்திக்கிறது. அத்துடன் வரலாறு முழுவதும் மனித நாகரிகங்களைக் கட்டியெழுப்பிய பெருமை தீங்கு மற்றும் இன்னலுக்கு உண்டு என்றும் அவர் கூறுகிறார். இந்த சிக்கலை தெளிவுபடுத்தவும் விளக்குவதற்கும் பல ஆய்வுக் கட்டுரைகள் தேவைப்படும். எனவே இதற்குரிய தெளிவை தரக்கூடியதாக மத விளக்கம் இருப்பதோடு அது மிகவும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும், வாழ்க்கையின் இயல்புக்கு மிகவும் இணக்கமாகவும் இருக்கிறது எனக் குறிப்பிடுகிறார்'. (கலாநிதி அம்ரு ஷரீபின் குராபதுல் இல்ஹாத் -பதிப்பு -2014 (நாஸ்தீக மூடநம்பிக்கை) என்ற நூலிலிருந்து பெறப்பட்டது).

உண்மையில், சில சமயங்களில் நம் சிறு குழந்தைகளை அறுவை சிகிச்சை அறைக்கு வயிற்றைக் கிழிப்பதற்காக அன்புடன் அழைத்துச் செல்வதைக் காண்கிறோம். இந்தத் தருனங்களில் வைத்தியரின் அறிவு, சிறியவர் மீதான அவரது அன்பு மற்றும் அந்தக் குழந்தையின் உயிரைக்காப்பதற்கான அவரின் ஆர்வம் போன்றவற்றில் நாங்கள் முழு நம்பிக்கையுடன் இருக்கிறோம் என்றால் படைப்பாளனான இறைவனின் வல்லமையிலும் அவனின் ஞானத்திலும் கருணையிலும் நம்பிக்கையற்று இருக்கிறோமல்லவா?! (தழுவல்: நூல் :நாத்திக புராணம் டாக்டர். அம்ரு ஷரீப். பதிப்பு 2014 ).

## *வாழ்க்கையில் தீமை இருப்பது கடவுள் இல்லை என்பதைக் காட்டுகிறதா?*

இவ்வுலக வாழ்க்கையில் தீமைகள் இருப்பதற்கான காரணம் குறித்து கேள்வி கேட்பவர் கடவுளின் இருப்பை மறுப்பதற்கு நியாயம் தேடுவதையே நோக்காகக் கொண்டிருக்கிறார். இதன் மூலம் அவருடைய குறுகிய பார்வையையும் அதன் பின்னால் உள்ள ஞானத்தைப் பற்றிய அவரது சிந்தனையின் பலவீனத்தையும், உள்ளார்ந்த விஷயங்களைப் பற்றிய அறிவின்மையையும் நமக்கு வெளிப்படுத்துகிறார். மேலும் நாத்திகர் தனது கேள்வியின் மூலம் தீமை விதிவிலக்கு என்பதை மறைமுகமாக ஒப்புக்கொண்டுள்ளார்.
எனவே, தீமை தோன்றியதன் நுட்பம் பற்றி கேள்வி கேட்க முன், 'முதன்முதலில் நல்லது எப்படி வந்தது?' என்ற மிகவும் யதார்த்தமான கேள்வியைக் கேட்க வேண்டும்.

இதைவிடவும் மிக முக்கிய கேள்வியான ' நல்லதை படைத்தவன் யார்? என்பதிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். இது மிகவும் முக்கியமான கேள்வி என்பதில் சந்தேகமும் இல்லை. அத்துடன் தொடக்கப் புள்ளி அல்லது அடிப்படை அல்லது நடைமுறையில் பரவலாக உள்ள கொள்கையில் நாம் உடன்பட வேண்டும். இவ்வுடன்பாடுகளின் பின் விதிவிலக்குகளுக்கான காரணங்களை நாம் தேட முடியும்.

விஞ்ஞானிகள் முதலில் பௌதிகவியல், இரசாயனவியல் மற்றும் உயிரியலுக்கான நிலையான மற்றும் குறிப்பிட்ட சில விதிகளை உருவாக்குகிறார்கள். பின்னர் அவர்கள் அந்த விதிகளில் விதிவிலக்கான மற்றும் அசாதாரண நிலைகளைக் குறித்து ஆய்வு செய்கின்றனர். இதேபோல், நாத்திகர்கள் அழகும், மிகச்சிறந்த முறையில் ஒழுங்கமைக்கப்பட்டதும் எண்ணற்ற பல காட்சிகளும் தோற்றப்பாடுகளும் நிறைந்த இவ்வுலகத்தின் இருப்பை முதலில் ஒப்புக் கொள்ளாத வரை, தீமை இருப்பதான அனுமானத்தை-கற்பிதத்தை- வெல்ல முடியாது.

சராசரி ஆயுட்காலம் முழுவதிலும் ஆரோக்கியமாக இருந்த காலப்பகுதியை நோய் ஏற்பட்ட காலங்களுடன் ஒப்பிடுவதன் மூலம், அல்லது பல தசாப்தங்களாக

காணப்பட்ட செழிப்பு, முன்னேற்றத்தை, அழிவும் சேதமும், நாசமும் நிறைந்த காலங்களுடன் ஒப்பிடுவதன் மூலம், அதே போல் இயற்கையானது எவ்வித அனர்த்தங்களுமின்றி பல நூற்றாண்டுகளாக அமைதியும் இஸ்திரமாகவும் இருந்த காலப்பகுதியை நில நடுக்கம், எரிமலை வெடித்தல் போன்ற அனர்த்த காலப்பகுதிகளுடன் நாம் ஒப்பிட்டுப் பார்ப்போமேயானால் ஆரம்பத்தில் நிலவிய நன்மை அல்லது மேம்பாடு என்பது எங்கிருந்து வந்தது? தற்செயல் நிகழ்வுகளையும் குழப்பங்களையும் அடிப்படையாகக் கொண்ட உலகம் ஒரு நல்ல உலகத்தை உருவாக்கிட முடியாது.

அறிவியல் சோதனைகள் இதை உறுதிப்படுத்துவது நகைப்புக்குரியது. வெப்ப இயக்கவியலின் இரண்டாவது விதி, எந்தவொரு வெளிப்புற தாக்கமும் இல்லாமல் தனிமைப்படுத்தப்பட்ட அமைப்பில் மொத்த என்ட்ரோபி (கோளாறு அல்லது ^+ரற்ற தன்மை) எப்போதும் அதிகரிக்கும், மேலும் இந்த செயல்முறை மீள முடியாதது என்று கூறுகிறது.

வேறு வார்த்தையில் கூறுவதானால், ஒழுங்கமைக்கப்பட்ட பொருட்களுக்கு பக்கபலமாக அவற்றை தாங்கிக் கொள்ளக் கூடிய ஒரு பொருள் வெளியில் இல்லாதிருந்தால் அவை எப்பொழுதும் சரிந்து சிதறுண்டுவிடும். இந்த வகையில், அழகு, ஞானம், மகிழ்ச்சி மற்றும் அன்பு போன்ற அற்புதமான விஷயங்களில் தோன்றும் இந்த ^+ரற்ற நிகழ்வுகளை படைப்பாளன் ஒழுங்கமைக்காமல், வெப்ப இயக்கவியலானது தன்னிச்சையாக எதையும் உருவாக்கிடவோ அல்லது இறைவனின் படைப்பில் அது போன்ற ஒன்றை மிகச்சிறப்பான முறையில் செய்திடவோ முடியாது. இதற்கு முன்னர் நலவுதான் அடிப்படையென்றும் தீமை விதிவிலக்கானதென்றும் அங்கே வல்லமை மிக்க ஓர் இறைவன் உள்ளான், அவன் படைத்துத் திட்டமிட்டு நிர்வகிப்பவனாக உள்ளான் என்றும் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

## *இறைவன் நரக நெருப்பால் ஏன் தண்டிக்க வேண்டும்?*

உதாரணத்திற்கு யாராவது ஒருவர் தங்கள் பெற்றோரை புறக்கணித்து, அவமானப்படுத்தி, வீட்டை விட்டு வெளியேற்றி, அவர்களை பாதையில்

விட்டுவிட்டால் அந்த நபர் குறித்து எப்படி நினைப்போம்?
ஒரு நபர் இந்த நிகழ்வைத் தொடர்ந்து தான் அந்த நபரின் வீட்டிற்கு சென்று, அவனை கௌரவித்து, உணவு வழங்கி, அவரின் செயலுக்கு நன்றி பாராட்டுவதாக யாராவது கூறினால், மக்கள் அந்த நபரின் செயலை பாராட்டி அதனை ஏற்றுக்கொள்வார்களா?! அல்லாஹ்வுக்கே இதில் உயர் முன்மாதிரி உண்டு. படைப்பாளனை நிராகரித்து, அவனை நம்பாத ஒருவரின் இறுதி முடிவு என்னவாக இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கிறோம்? நரக நெருப்பால் தண்டிக்கப்படுவோர் அவர்களுக்கே உரிய சரியான தண்டனையையே பெறுகிறார்கள். காரணம் குறித்த அந்நபர் பூமியில் அமைதியும், நன்மையும் விளைய வேண்டும் என்பதை விரும்பாது அதனை அற்பமாகக் கருதினார். ஆகவே பரலோகத்து சுவர்க்க இன்பத்தை பெறுவதற்கு தகுதியற்றவராக மாறி விடுகிறார்.

### *உதாரணமாக, இரசாயன ஆயுதங்களால் குழந்தைகளை சித்திரவதை செய்யும் ஒருவர் எவ்வித விசாரணையுமின்றி சுவர்க்கம் நுழைய வேண்டும் என நாம் எதிர்பார்ப்போமா?*

அவர்களின் குற்றம் ஒரு குறிப்பிட்ட காலத்துடன் மாத்திரம் வரையறுக்கப்பட்டதல்ல. மாறாக அது ஒரு நிலையான பண்பாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"(ஒரு வேளை) அவர்கள் திரும்பவும் அனுப்பப்பட்டாலும், அவர்கள் எதைவிட்டு தடுக்கப்பட்டிருந்தார்களோ, அதற்கே அவர்கள் மீண்டு விடுவார்கள். நிச்சயமாக அவர்கள் பொய்யர்களே". (அல்அன்ஆம்: 28).

இவ்வாறானோர் மறுமைநாளில் கூட இறைவனுக்கு முன் பொய் சத்தியம் செய்வதன் மூலமே அல்லாஹ்வை எதிர்கொள்வார்கள்.

அல்லாஹ் கூறுகிறான் :
"அவர்களை அல்லாஹ் ஒன்றாக எழுப்பும் நாளில், உங்களிடம் அவர்கள் சத்தியம் செய்வது போன்று அவனிடமும் சத்தியம் செய்வார்கள். அவர்கள் (தமக்குப் பயனளிக்கும்) ஏதோ ஒன்றின் மீது தாம் இருப்பதாக எண்ணிக்

கொண்டிருக்கிறார்கள். நிச்சயமாக அவர்கள்தாம் பொய்யர்கள்". (அல் முஜாதலா :18).

உள்ளத்தில் பொறாமையும் ரோசமும் கொண்ட சில மனிதர்களிடமிருந்து தீமை வரமுடியும். இவ்வாறானோர் மனிதர்களுக்கு மத்தியில் பிரச்சினைகளையும் மோதல்களையும் ஏற்படுத்த காரணமாயிருப்பர். ஆகையால் அவர்களுக்குரிய வெகுமதியாக நரக நெருப்பு இருப்பது நியாயமாகும். இதுவே அவர்களின் இயல்பிற்கு பொருந்துவதாக உள்ளது.

அல்லாஹ் கூறுகிறான் :
"எவர்கள் நமது வசனங்களைப் பொய்ப்பித்து அவற்றை விட்டும் பெருமையடிக்கிறார்களோ, அவர்கள் நரகவாசிகள் அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்". (அல் அஃராப் : 36).

நீதியாளன் என்ற அல்லாஹ்வின் பண்பைப் பொறுத்தவரை அவனின் அருள் மற்றும் கருணையுடன் சேர்த்து அவன் தண்டிப்பவனாகவும் உள்ளான் என்பதை காட்டுகிறது. கிறிஸ்துவத்தில் அல்லாஹ்வை அன்பிற்கும், யூதமதத்தில் அல்லாஹ்வை கோபம் என்ற பண்புகளுக்குரியவனாகவே சித்தரிக்கின்றனர். இஸ்லாத்தில் அல்லாஹ் என்பவன் நீதியும் கருணையும் நிறைந்த இறைவன், அவனுக்கு உயரிய திருநாமங்கள் அனைத்தும் உண்டு. அவை அழகு மற்றும் மகத்துவம் போன்ற பண்புகளை உள்ளடக்கியுள்ளது.

அத்துடன்; நாம் எமது நடைமுறை வாழ்க்கையில், தங்கம் மற்றும் வெள்ளி போன்ற தூய்மையான பொருட்களில் உள்ள அசுத்தங்களை வேறுபடுத்த நெருப்பைப் பயன்படுத்துகிறோம். எனவே சர்வ வல்லமைமிக்க அல்லாஹ் - இதில் உயர் முன்மாதிரி அவனுக்குரியது- மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையில் தனது அடியார்களை பாவங்கள் மற்றும் தவறான செயல்களிலிருந்து தூய்மைப்படுத்த நரக நெருப்பைப் பயன் படுத்துகிறான். இறுதியில் யாருடைய உள்ளத்தில்; அணுவளவு இறைவிசுவாசம் இருக்கிறதோ அவர் நரக நெருப்பிலிருந்து அவனின் கருணையினால் வெளியேற்றிவிடுவான்.

அல்லாஹ் இரக்கமுள்ளவன் எல்லா நன்மைகளுக்கும் அடிப்படைக்காரணமாக இருப்பவன். ஆகவே அவன் எம்மனைவரையும் எவ்வித விசாரணையுமின்றி சுவர்க்கத்தில் நுழைவிக்காதது ஏன்?

உண்மையில், அல்லாஹ் தனது அடியார்கள் அவனைவரும் தன்னை விசுவாசிக்க வேண்டும் என விரும்புகிறான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“எனினும், தன் அடியார்கள் (தன்னை) நிராகரிப்பதை அவன் விரும்புவதே இல்லை. நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்துவீர்களாயின், அதனால் உங்களைப் பற்றி அவன் திருப்தியடைவான். ஒருவனின் (பாவச்) சுமையை மற்றொருவன் சுமப்பதில்லை. இனி நீங்கள் செல்ல வேண்டியது உங்கள் இறைவனிடம்தான். அச்சமயம் நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவன் உங்களுக்கு அறிவிப்பான். உள்ளங்களில் உள்ளவற்றையும் நிச்சயமாக அவன் நன்கறிகிறான்”. (அஸ்ஸுமர்:7) இருப்பினும், அல்லாஹ் எவ்வித விசாரணையுமின்றி அனைவரையும் சொர்க்கத்திற்கு அனுப்பினால், நீதி வெளிப்படையாக மீறப்படும். அத்துடன் அல்லாஹ் தனது தீர்க்கதரிசி மூஸா (மோசஸ்) மற்றும் கொடுங்கோலன் பிர்அவனுக்கும் இதே வழிமுறையை பின்பற்ற நேரிடும். அது மாத்திரமின்றி ஒவ்வொரு அடக்குமுறையாளனும் -அநியாயக்காரனும்- அவனால் பாதிக்கப்பட்டோரும் எதுவும் செய்யாதது போல் சொர்க்கத்தில் நுழைவர். ஆகவே சொர்க்கத்தில் நுழைபவர்கள் தகுதியின் அடிப்படையில் நுழைவதை உறுதி செய்வதற்கான ஒரு பொறிமுறையின் தேவை உள்ளது.

இஸ்லாமிய போதனைகளின் அழகு என்னவென்றால், அல்லாஹ் நம்மை விட நம்மை பற்றி நன்கு அறிந்துள்ளான். எனவே அவனுடைய திருப்தியை பெற்று சுவர்க்கம் நுழைவதற்கு தேவையான உலகில் அவசியம் பின்பற்றி ஒழுக வேண்டிய விடயங்களை எமக்கு அறிவித்துத் தந்துள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான் :
“எந்த ஓர் ஆத்மாவையும் அதன் சக்திக்கு மேல் அல்லாஹ் சிரமப் படுத்தமாட்டான்”. (அல் பகரா : 286).

இறைவன் தனது அடியார்களை அவர்களது குறுகிய கால வாழ்க்கையில் செய்த ஒரு சில பாவங்களுக்காக முடிவில்லாது தண்டிப்பது ஏன்?

பல குற்றங்கள் சில போது ஆயுள் தண்டனைக்கு வழிவகுக்கும். குற்றவாளி தன் குற்றத்தைச் சில நிமிடங்களில் செய்ததால், ஆயுள் தண்டனை நியாயமற்றது என்று யாராவது கூறுவார்களா? குற்றவாளி ஒரு வருடம் மாத்திரமே பணத்தை கொள்ளை அடித்தான் என்பதற்காக பத்து வருட சிறைத்தண்டனை நியாயமற்ற தீர்ப்பு எனக் கூற முடியுமா? குற்றங்களுக்கான தண்டனைகள் காலத்துடன் தொடர்புடையவை அல்ல, மாறாக அக்குற்றங்களின் அளவு மற்றும் அவற்றின் கொடிய தன்மையைப் பொறுத்ததாகும்.

### *அல்லாஹ் நரகம் பற்றி பல தடவைகள் எச்சரிக்கை செய்வது ஏன்? இது இறை கருணை என்ற பண்புக்கு முரணாக மாட்டாதா?*

தாய் தன் பிள்ளைகள் பயணம் செய்யும் போதோ அல்லது வேலைக்குச் செல்லும் போதோ போய் வருகையில் அவதானமாகவும் எச்சரிக்கையாகவும் நடந்கொள்ளுங்கள் என அவர்களை எச்சரிப்பதன் மூலம் அவர்களை மிகவும் சோர்வுக் குள்ளாக்குகிறாள் என நாம் வைத்துக்கொள்வோம். இவ்வாறான ஒரு தாய் இரக்கமற்ற இருகிய மனம் படைத்தவள் எனக் கருதப்படுவாளா? இங்கு பாசமானது கடுமையின் வெளிப்பாடாக மாறியுள்ளது என்பதை புரிந்து கொள்ள முடிகிறது. ஆகவே அல்லாஹ்வும் தனது அடியார்கள் மீதான கருணையினால் அவர்களுக்கு நல்லனவற்றை நினைவூட்டி, தீயனவற்றை எச்சரித்து, மீட்சிக்கான வழியை காண்பித்துக் கொடுக்கிறான். மேலும் அவர்கள் தமது பாவங்களிலிருந்து மீண்டு மனந்திருந்தி அவனிடம் முறையிடும் போது அவர்களின் பாவங்களை நன்மைகளாக மாற்றுவதாகவும் வாக்களிக்கிறான். இது அவனின் கருணையின் வெளிப்பாடல்லவா!

அல்லாஹ் கூறுகிறான் :
“யார் பாவமன்னிப்புக் கோரி நம்பிக்கைகொண்டு நல்லறமும் புரிகிறாறோ அவர்களுக்கு அவர்களின் தீமைகளை அல்லாஹ் நன்மைகளாக மாற்றுவான். அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையோனுமாக இருக்கிறான்”.

(அல் புர்கான்:70). குறைந்த சில வணக்கங்களுக்கு நிகராக நிரந்தர சுவர்க்க இன்பங்களையும் உயர் வெகுமதிகளையும் பெற்றுக்கொள்கிறோம் இது குறித்து ஏன் எமது அவதானத்தை செலுத்துவதில்லை?

அல்லாஹ் கூறுகிறான் :
"எவர் அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு, நற்செயல்களைச் செய்கிறாரோ, அவருடைய பாவத்திற்கு (அவற்றைப்) பரிகாரமாக்கி, தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கங்களிலும் அவரைப் புகுத்தி விடுகிறான். என்றென்றுமே அதில் அவர் தங்கிவிடுவார். இதுதான் மிக மகத்தான வெற்றியாகும்". (அத்தகாபுன் : 9).

### *அல்குர்ஆன் முஃமின்களை -இறைவிசுவாசிகளை அல்லாஹ் விரும்புவதாகவும் இறைநிராகரிப்பாளர்களை வெறுப்பதாகவும் மீண்டும் மீண்டும் ஏன் குறிப்பிடுகிறது? அவர்கள் அனைவரும் அவனின் அடியார்களல்லவா?*

அல்லாஹ் தனது அடியார்கள் அனைவருக்கும் மீட்சிக்கான வழியை காண்பித்துக் கொடுத்துள்ளான். எனவே அவன் இறைநிராகரிப்பை ஏற்றுக்கொள்வதில்லை. அத்துடன் இறை நிராகரிப்பு மற்றும் பூமியில் குழப்பம் விளைவித்தல் போன்ற மனிதன் செல்லும் பிழையான நடத்தையையும் அவன் விரும்ப மாட்டான்.
அல்லாஹ் கூறுகிறான் :

"அவனை நீங்கள் நிராகரித்துவிட்ட போதிலும் (அவனுக்கு நஷ்டமில்லை. ஏனென்றால்,) நிச்சயமாக அல்லாஹ் உங்களை விட்டும் தேவையற்றவனாக இருக்கிறான். எனினும், தன் அடியார்கள் (தன்னை) நிராகரிப்பதை அவன் விரும்புவதே இல்லை. நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்துவீர்களாயின், அதனால் உங்களைப் பற்றி அவன் திருப்தியடைவான். ஒருவனின் (பாவச்) சுமையை மற்றொருவன் சுமப்பதில்லை. இனி நீங்கள் செல்ல வேண்டியது உங்கள் இறைவனிடம்தான். அச்சமயம் நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அவன் உங்களுக்கு அறிவிப்பான். உள்ளங்களில் உள்ளவற்றையும் நிச்சயமாக அவன் நன்கறிகிறான்". (அஸ்ஸுமர் : 7).

நீங்கள் களவெடுத்தாலும் விபச்சரம் செய்தாலும் கொலை செய்தாலும் இந்தப் பூமியில் குழப்பம் விளைவித்தாலும், நீங்கள் அனைவரும் என்னைப்பொருத்தவரை நல்ல அடியாரைப் போன்றோர், உங்கள் அனைவரையும் நினைத்து நான் பெருமைப் படுகிறேன் என்று பிள்ளைகளுக்கு முன்னால் திரும்பத் திரும்பச் சொல்லும் தந்தையைப் பற்றி நாம் என்ன சொல்வது? எளிமையாகச் சொன்னால், இந்த தந்தை ஷைத்தானைப் போன்றவர், பூமியில் குழப்பங்கள் மற்றும் தீமைகளை செய்வதற்கு குழந்தைகளைத் தூண்டிக்கொண்டிருக்கிறார் என்றே சொல்ல முடியும்.

## தனது அடியார்கள் மீதான படைத்தவனின் உரிமைகள் :

### *இறைவன் தனது அடியார்களிடத்தில் தனக்கு மாறுசெய்வதை ஏற்றுக்கொள்ளாதது ஏன்?*

இப்பிரபஞ்சம் முழுதும் இவைனுக்குச் சொந்தமாக இருப்பதால் ஒரு மனிதன் இறைவனுக்கு மாறுசெய்ய நாடினால், அவன் இவ்வுலகில் ஏற்பாடு செய்த வாழ்வாதாரத்தை அனுபவிக்காது இந்தப் பூமியிலிருந்து வெளியேறி அல்லாஹ் பார்க்காத ஒரு பாதுகாப்பான இடம் நோக்கி சென்று விடவேண்டும்!. அவரிடம் மரணத்திற்கு பொறுப்பான மலக்கு உயிரை கைப்பற்ற வந்தால் அவரிடம் 'நான் தூய்மையான முறையில் மனந்திருந்தி பாவமீட்சி செய்துகொள்ளவும், இறைவனுக்காக நல்ல செயல்களை செய்யும் வரையிலும் எனக்கு அவகாசம் கொடுங்கள்' என்று சொல்லட்டும். மறுமை நாளில் அவனை நரகிற்கு அழைத்துச் செல்ல தணடனைக்குப் பொறுப்பான மலக்குகள் அவரிடம் வந்தால், அவர் அவர்களுடன் செல்லாது அடம்பிடித்து, அவர்களை எதிர்த்து நின்று, அவராகவே சுவர்கத்திற்கு செல்லட்டும். இதனை செய்ய ஒருவாரால் முடியுமா? (இப்ராஹிம் இப்னு அத்ஹமின் சம்பவம்). ஒரு நபர் தனது வீட்டில் செல்லப்பிராணியொன்றை வைத்திருந்தால், அது தனக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்றே மிகவும் எதிர்பார்ப்பார்.

ஆனால் அவர் அதை பணம் கொடுத்து வாங்கியது மட்டுமே தவிர அதனை அவர் படைக்கவில்லை. ஒரு சாதாரண மனிதன் இவ்வாறு எதிர்ப்பார்க்கையில் எம்மைப் படைத்து பரிபாலிக்கும் இறைவனை நாம் வணங்கி வழிபடவும், முழுமையாக கட்டுப்பட்டு நடக்கவும் தகுதியானவனல்லவா? நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்த உலகப் பயணத்தின் பல அம்சங்களில் இயல்பாகவே அடிபணிந்து இருக்கிறோம். நம் இதயங்கள் துடிக்கின்றன. நமது செரிமான அமைப்பு செயல்படுகிறது. நம் புலன்கள் முழுமையாக உணர்ந்து கொள்கின்றன. நமக்கு எஞ்சியிருப்பதெல்லாம், எமது இலக்கை பாதுகாப்பான முறையில் அடைந்துகொள்ள எம்மால் தெரிவு செய்யப்பட்ட எஞ்சிய விடயங்களில் இறைவனுக்கு முழுமையாக கட்டுபட்டு நடப்பதை தவிர வேறு வழி கிடையாது.

## *தன்னை விசுவாசம் கொள்ளாத (ஏற்றுக்கொள்ளாத) அடியார்களை அல்லாஹ் (இறைவன்) ஏன் தண்டிக்கிறான்?*

அகிலங்களின் இரட்சகனை விசுவாசம் கொள்ளுதல் மற்றும் அவனுக்கு கட்டுப்படுதல் ஆகிய இரண்டு விடயங்களையும் நாம் வேறுபடுத்திப் பார்ப்பது அவசியம். அகிலத்தின் இரட்சகனுக்கு செய்யவேண்டிய, எவரும் கைவிட முடியாத கட்டாயக்கடமை யாதெனில் அவனை ஒருவன் என்று ஏற்றுக் கட்டுபடுவதும், அவனுக்கு எவரையும் இணையாக்காது அவன் ஒருவனை மாத்திரம் வணங்கி வழிபடுவதும், அவன் ஒருவனே படைப்பாளன் என்றும் ஆட்சியும் அதிகாரமும் அவனுக்கே உரியன என நாம் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் ஏற்றுக்கொள்வதாகும். இதுவே ஈமானின் -விசுவாசத்தின்- அடிப்படையாகும். (ஈமான்) இறைவிசுவாசம் என்பது சொல்லும் செயலுமாகும். இதை தவிர வேறு தெரிவொன்று கிடையாது. இதன் அடிப்படையிலேயே ஒரு மனிதன் விசாரிக்கப்படவும், தண்டனை வழங்கப்படவும் முடியும்.

கட்டுப்படுதலுக்கு எதிர் குற்றம்புரிவதாகும்.
அல்லாஹ் கூறுகிறான் :
"(நமக்கு) முற்றிலும் வழிபடும் முஸ்லிம்களை' இறைக்கட்டுப் பாட்டுப்பாட்டை மீறி செயற்பட்ட குற்றவாளிகள் போன்று ஆக்குவோமா?". (அல்கலம் : 35). -

அநியாயம் என்பது அகிலங்களின் இரட்சகனுக்கு நிகாராக அல்லது இணையாக ஒருவரை ஏற்படுத்துவதாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"நீங்கள் அறிந்து கொண்டே அல்லாஹ்வுக்கு இணையாளர்களை ஏற்படுத்தாதீர்கள்". (அல் பகரா : 22). "எவர்கள் நம்பிக்கை கொண்டு, தங்கள் நம்பிக்கையுடன் (இணைவைத்தல் என்னும்) அநியாயத்தையும் கலந்து விடவில்லையோ அவர்களுக்கே நிச்சயமாக பாதுகாப்பு உண்டு. அவர்கள்தான் நேர்வழியாளர்கள் (என்று கூறினார்)". (அல் அன்ஆம் : 82).

ஈமான் என்பது ஒரு மறைவான விடயமாகும். அது அல்லாஹ்வையும் அவனின் மலக்குகளையும் (அமரர்களையும்) அவனால் இறக்கப்பட்ட வேதங்களையும், அவனின் தூதர்களையும் மறுமை நாளையும் விசுவாசித்து, அவனின் விதியை மனப்பூர்வமாக ஏற்பதைக் குறிக்கிறது.

அல்லாஹ் கூறுகிறான் :

"'நாங்களும் ஈமான் கொண்டோம்' என்று (நபியே! உம்மிடம்) நாட்டுப் புறத்து அரபிகள் கூறுகிறார்கள், 'நீங்கள் ஈமான் கொள்ளவில்லை. எனினும் 'நாங்கள் கட்டுப்பட்டோம்;' (இஸ்லாத்தைத் தழுவினோம்) என்று (வேண்டுமானால்) கூறுங்கள்' (என நபியே! அவர்களிடம்) கூறுவீராக. 'ஏனெனில் உங்களுடைய இதயங்களில் (உண்மையான) ஈமான் நுழையவில்லை; மேலும், நீங்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பீர்களாயின் அவன் உங்களுடைய நற்செயல்களில், எதையும் உங்களுக்குக் குறைக்க மாட்டான். நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவன் மிக்க கிருபையுடையவன்". (அல்-ஹுஜுராத் :14). மேற்படி வசனமானது ஈமான் (நம்பிக்கை) என்பது மிக உயர்ந்த படி நிலையாகும் என்று எமக்குச் சுட்டிக்காட்டுகிறது. அதுதான் திருப்தி, விருப்பம் மற்றும் மனநிறைவாகும். மேலும் நம்பிக்கை (ஈமான்) பல படித்தரங்களையும் படிநிலைகளையும் கொண்டிருப்பதால் அதில் அதிகரிப்பும், குறைவும் ஏற்படும். அதாவது ஈமான் வழிப்படுவதால் அதிகரிக்கிறது. பாவகாரியங்களினால் குறைவடைகிறது. மறைவான விடயங்களை புரிந்துகொள்வதில் -கிரகித்துக் கொள்வதில்- மனிதனின் ஆற்றல் மற்றும் அவனின் இதயத்தின் கொள்ளலவுக்கு ஏற்ப மனிதனுக்கு மனிதன் வேறுபடுகின்றான். மேலும் மனிதர்கள் இறைவனின் மகத்துவம் மற்றும் அழகை காட்டும் பண்புகளை புரிந்து கொள்வதிலும் தங்கள் இறைவனை அறிவதிலும் வித்தியாசப்படுகின்றனர். மனிதன் அவனின் அறிவு ஆற்றலின் அடிப்படையில் மறைவான விடயங்களை குறைவாக புரிந்து கொண்டமைக்காகவோ அல்லது அவனின் குறுகிய சிந்தனையின் நிமித்தமோ தண்டிக்கப்படமாட்டான். இருப்பினும், நரகத்தின் நிரந்தர தண்டனையிலிருந்து தப்பிப்பதற்குத் தேவையான குறைந்தபட்ச புரிதல் இருந்து, அதன் படி அவன் செயற்படாது இருந்தால் குற்றம் பிடிப்பான். எனவே, ஏகத்துவத்துவத்தை ஏற்பதன் மூலம் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதும் படைத்தல், ஆணையிடுதல்,வணக்கம் செலுத்துதல் போன்றவை அவனுக்கு மாத்திரம் என்று ஏற்று நடப்பதும்

அவசியமாகும். இவற்றை ஏற்று அடிபணிவதன் மூலம் தான் நாடியோருக்கு இணைவைப்பதைத் தவிரவுள்ள மற்ற பாவங்களை மன்னிக்கிறான். ஆகவே இறைவனை நம்பிக்கை கொண்டு வெற்றி பெறுதல் அல்லது நிராகரித்து தோல்வியடைதல் எனும் ஏதாவது ஒரு தெரிவைத் தவிர மனிதனுக்கு முன்னால் வேறு தெரிவொன்று கிடையாது.

அல்லாஹ் கூறுகிறான் :
"நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். இதைத் தவிர (மற்ற) எதையும் தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான். எவர்கள் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக மிகப்பெரும் பாவத்தையே கற்பனை செய்கிறார்கள்". (அந்நிஸா : 48).

ஆகவே ஈமான் மறைவான விடயங்களுடன் தொடர்பான ஒரு விவகாரமாகும். மறைவானவை வெளிப்படும் போது (திரை விலகி) அல்லது மறுமையின் அடையாளங்கள் தோன்றும் போது இதன் விடயம் முடிந்து போகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"உமது இரட்சகனின் அத்தாட்சிகளில் சில வரும் நாளில் அதற்கு முன்னர் நம்பிக்கை கொள்ளாது அல்லது தனது நம்பிக்கையில் நல்லதைத் தேடிக்கொள்ளாதிருந்த எந்த ஆத்மாவுக்கும் அதன் நம்பிக்கை பயனளிக்காது". (அல் அன்ஆம் : 158).
மனிதன் தனது இறை நம்பிக்கையினால் நற்காரியங்களின் மூலம் பயனடையவும், நன்மைகளை அதிகரித்துக்கொள்ளவும் விரும்பினால் திரை விலகி மறுமை நாள் ஏற்படுவதற்கு முன் அவன் அவற்றை செய்து கொள்வது அவசியமாகும்.

நற்காரியங்கள் எதுவும் இல்லாத மனிதனைப் பொறுத்தவரை அவன் நிரந்தரமாக நரகில் இருப்பதை விட்டு தன்னை காப்பாற்றிக் கொள்ள விரும்பினால் ஏகத்துவத்தை ஏற்று அவனை மாத்திரம் வணங்கி வழிப்பட்ட நிலையிலேயே இவ்வுலகிலிருந்து செல்ல வேண்டும். தற்காலிமாக நரகில் தங்குதலானது சில பாவிகளுக்கு நிகழமுடியும். இது அல்லாஹ்வின் நாட்டத்தில் உள்ள விவகாரமாகும். அவன் நாடினால் அவனை மன்னித்து விடுவான். நாடினால் நரகினுள் நுழைவிப்பான்.

அல்லாஹ் கூறுகிறான் :

"ஈமான் கொண்ட விசுவாசிகளே நீங்கள் அல்லாஹ்வை பயப்படவேண்டிய முறையில் பயந்து கொள்ளுங்கள். மேலும் நீங்கள் அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்ட முஸ்லிம்களாகவேயன்றி மரணிக்க வேண்டாம்". (ஆல இம்ரான் : 102). இஸ்லாமிய மார்க்கத்தில் நம்பிக்கை என்பது சொல்லும் செயலுமாகும். அது இன்றைய கிறிஸ்தவப் போதனைகளில் உள்ளது போல் நம்பிக்கை மாத்திரமோ, அல்லது நாத்திகத்தில் உள்ளது போல் வெறுமனே செயல் மாத்திரமோ கிடையாது. மறைவானவற்றை (ஈமான்) நம்பிக்கை கொண்டு அக்கட்டத்தில் பொறுமையாக இருந்தவரின் செயலும், மறுமையில் மறைவானவை வெளிப்படுவதை நேரடியாக கண்டு அனுபவித்த ஒருவரின் செயலும் சமமாக மாட்டாது. அதே போன்று இஸ்லாத்தின் விதி குறித்து அறியாது கடினமும், பலவீமும் மற்றும் நிச்சயமற்ற தன்மையும் இருந்த காலங்களில் அல்லாஹ்வுக்காக செயற்பட்டவர்களும், இஸ்லாம் எழுச்சி பெற்று பலத்துடன் வீரியத்துடனும் இருந்த காலத்தில் அல்லாஹ்வுக்காக செயற்பட்டவர்களும் சமமாகமாட்டார்கள்.

அல்லாஹ் கூறுகிறான் :

"மக்கா வெற்றிக்கு முன்னர் செலவிட்டோருக்கும் போரிட்டோருக்கும் உங்களில் எவரும் சமமாகமாட்டார்கள். அவர்கள் அதற்குப்பின் செலவிட்டோரையும் போரிட்டோரையும் விட மகத்தான அந்தஸ்துக்குரியோராவர். அல்லாஹ் அனைவருக்கும் நன்மைகளையே வாக்களித்திருக்கின்றான் நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்". (அல் ஹதீத் :10).

அகிலத்தின் இரட்சகன் ஒரு போதும் எவரையும் காரணமின்றி தண்டிக்கமாட்டான். ஒரு மனிதன் சக மனிதர்களின் உரிமைகளை வீணாக்கியமை அல்லது அகிலங்களின் இரட்சகனின் உரிமையை வீணாக்கியமைக்காக விசாரிக்கப்பட்டு வெகுமதியோ அல்லது தண்டனையோ வழங்கப்படுவான்.

'உண்மையாக வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ் ஒருவனைத்தவிர வேறு யாருமில்லை என்றும் அவனுக்கு நிகராக எவறும் இல்லையென்றும், முஹம்மத் அவனின் அடியாரும் தூதருமாவார் என்றும் சாட்சி கூறுகிறேன், மேலும் அல்லாஹ்வின் தூதர்கள் உண்மை என்றும், சுவர்க்கமும்

நரகமும் உண்மையானவை என்றும் சாட்சி கூறுகிறேன்' என்ற வாசகத்தை ஏற்று, இந்த வாசகத்தின் உட்பொருளை முழுமையாக அறிந்து நடைமுறைப்படுத்துவதன் மூலம் இறைவன் ஒருவன் என்பதை ஏற்று அவனுக்கு அடிபணிந்து அவனுக்கு நிகராக எவரும் இல்லை என்பதை ஏற்று அவனை மாத்திரம் வணங்கி வழிபடுவதே நிரந்தர நரகத்திலிருந்து மீட்சி பெறுவதற்கான ஒரே வழியாகும்.

அல்லாஹ்வின் பாதையை விட்டு பிறரைத் தடுக்காதிருத்தல் அல்லது மார்க்கத்தைப் பிரச்சாரம் செய்தல் மற்றும் அதனைப்பரப்புதல் ஆகியவற்றுக்கு எதிராக உதவாதிருத்தல் .

மக்களின் உரிமைகளை பறித்து அவர்களுக்கு அநீதி இழைக்காது இருத்தல். உயிரினங்கள் மற்றும் சிருஷ்டிகளுக்கு தீங்குசெய்வதை தடுத்து நிறுத்துதல். இவ்வாறு நடந்து கொள்ளும் போது அச்சமூகத்தைவிட்டும் தனிமைப்படும் நிலை ஏற்பட்டாலும் கூட. ஒரு மனிதனுக்கு சில வேளை அதிக நற்செயல்கள் இல்லாமல் இருக்கலாம், ஆனால் அவன் எவருக்கும் தீங்கு விளைவிக்கவு மில்லை, அல்லது தனக்கோ மற்றவர்களுக்கோ தீங்கு விளைவிக்கும் எந்த செயல்களிலும் ஈடுபடாது இருந்து அல்லாஹ் ஒருவன் என ஏற்று சாட்சி கூறியிருந்தால் நரக நெருப்பின் தண்டனையிலிருந்து ஒரு வேளை காப்பாற்றப்படலாம்.

அல்லாஹ் கூறுகிறான் :

“நீங்கள் (இவ்வாறு) அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டும், அவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டுமிருந்தால் உங்களுக்கு வேதனை செய்து அவன் என்ன (லாபம்) அடையப்போகிறான்? அல்லாஹ்வோ (நீங்கள் செய்யும் ஒரு சொற்ப) நன்றிக்கும் கூலி கொடுப்பவனாக, யாவற்றையும் நன்கறிந்தவனாக இருக்கிறான்". (அந்நிஸா : 147).

மனிதர்கள் உலக வாழ்க்கையில் அவர்கள் செய்யும் செயல்களின் அடிப்படையில் பலதரப்பட்ட தரங்களையும் அந்தஸ்துக்களையும் உடையோராக வகைப் படுத்தப்படுவர். இவ்வாறு தரப்படுத்தப் பட்டோரில் பலர் ஹதீஸில் குறிப்பிடப்பட்டுள்ளபடி மறுமையில் அல்லாஹ்வால் சோதிக்கப்படுவோரும் உண்டு.

அல்லாஹ் சமூகங்கள் அனைத்தையும் அவர்களின் தீய செயல்களுக்கு ஏற்ப இவ்வுலகில் முற்படுத்தியோ அல்லது மறுமையில் பிற்படுத்தியோ தண்டிப்பான். இது தவ்பா (பாவமீட்சி) கோராத, குறித்த செயலின் தீவிரத்தைப் பொறுத்தும், மேலும் இந்த மோசமான செயற்பாடு விளைச்சல், சந்ததி, ஏனைய படைப்புகள் மீது எந்த அளவிற்கு தாக்கத்தையும்,பாதிப்பையும் ஏற்படுத்தியிருக்கிறது என்பதையும் பொறுத்து அமையும். அல்லாஹ் ஒரு போதும் இந்தப் பூமியில் அக்கிரமம் நிகழ்வதை விரும்பமாட்டான்.

முன்னைய நபிமார்களான நூஹ், ஹூத், ஸாலிஹ், லூத் ஆகியோரின் சமூகங்கள் மற்றும் பிர்அவ்னின் கூட்டத்தினர் போன்ற இறைத்தூதர்களை பொய்பித்தோரை அவர்களின் மோசமான செயற்பாடு மற்றும் அத்துமீறல் காரணமாக அவர்களுக்கான தண்டனையை இவ்வுலகில் உடனுக்குடன் வழங்கினான். இவர்கள் இந்த ஈனச்செயல்களை விட்டும் தங்களை விலக்கிக் கொள்ளாமலும், இந்தத் தீங்கை தடுத்து நிறுத்தாமலும் அதிலே நிலைத்திருந்தார்கள். ஹூத் நபியின் சமூகம் இந்தப் பூமியில் பித்துப்பிடித்து இறுமாப்புடன் கர்வம் கொண்டு அலைந்தனர். ஸாலிஹ் நபியின் சமூகம் இறைவனால் அனுப்பப்பட்ட ஒட்டகத்தை கொன்றது. லூத் நபியின் சமூகம் ஓரினச்சேர்கை எனும் மாபாதகச்செயலில் பிடிவாதாமாய் இருந்தனார். ஷுஐப் நபியின் சமூகம் ஊழல் மற்றும் அளவை நிறுவைகளில் மோசடி செய்து மக்களின் உரிமைகளை பரிப்பதில் உறுதியாய் நின்றனர். பிர்அவனின் கூட்டம் நபி மூஸாவின் கூட்டத்திற்கு அநியாயமும் அக்கிரமும் இழைத்தனர். இவர்கள் அனைவருக்கும் முன் நபி நூஹின் சமூகத்தார் அல்லாஹ்வை வணங்குவதில் இணைவைத்து அதில் பிடிவாதமாய் இருந்தனர். இவ்வாறு முன்னைய சமூகங்கள் இறைவனுக்கும் இறையடியார்களுக்கும் மிகப்பெரும் துரோகத்தை இழைத்தன.

அல்லாஹ் கூறுகிறான் :

“எவர் நன்மைகள் செய்கிறாரோ, அது அவருக்கே நன்று. எவர் பாவம் செய்கிறாரோ, அது அவருக்கே கேடாகும். உமது இறைவன் (தன்) அடியார்களுக்குச் சிறிதும் அநியாயம் செய்பவன் அல்லன்". (புஸ்ஸிலத் : 46). "நாம் ஒவ்வொருவரையும் அவரவர் செய்த பாவத்தின் காரணமாக தண்டித்தோம். அவர்களில் சிலர் மீது கடும்புயல் மூலமாக கல்மாரியை அனுப்பினோம். அவர்களில் சிலரை பேரிடி

முழக்கம் பிடித்துக் கொண்டது. அவர்களில் சிலரைப் பூமியினுள் விழுங்கச் செய்தோம். இன்னும் அவர்களில் சிலரை மூழ்கடித்தோம். ஆனால் அல்லாஹ் அவர்களுக்கு அநியாயம் செய்யக்கூடியவனாக இருக்கவில்லை. அவர்கள் தமக்குத் தாமே அநியாயம் செய்து கொண்டார்கள்". (அல்அன்கபூத் : 40).

## இறுதி முடிவை தீர்மானித்தலும் பாதுகாப்பான இடத்தை சென்றடைதலும்.

*தனது பெற்றோர் மற்றும் மூதாதையர்களின் மார்க்கத்தை ஒரு மனிதனால் மாற்ற முடியுமா?*

மனிதனைப் பொறுத்தவரை அறிவைத் தேடுவதும், இப்பிரஞ்ச அத்தாட்சிகள் குறித்து ஆய்வு செய்வதும் அவனின் உரிமையாகும். இதற்காகவே அல்லாஹ் எமக்கு பகுத்தறிவைத்தந்து அதனை உரிய முறையில் பயன்படுத்துமாறு குறிப்பிடுகிறான். ஒவ்வொரு மனிதனும் தனது மூதாதையர்களின் மார்க்கத்தை குறித்து ஆய்வோ சிந்தனை செய்யாது மொத்தத்தில் பகுத்தறிவை உரிய முறையில் பயன்படுத்தாமலே கண்மூடித்தனமாக பின்பற்றுகிறான். இதனால் அல்லாஹ் அவனுள் வைத்திருக்கும் மாபெரும் அருளான பகுத்தறிவை அற்பமாகக்கருதி தனது ஆன்மாவுக்கு அநியாயம் இழைத்து தன்னையே சிறுமைப்படுத்திக் கொண்டவனாக மாறிவிடுகிறான். ஏகத்துவத்தை ஏற்ற குடும்பத்தில் வளர்ந்த எத்தனையோ முஸ்லிம்கள் சரியான பாதையை விட்டு விலகி அல்லாஹ்வுக்கு இணைவைப்போராக மாறியிருக்கிறார்கள். ஆனால் பல தெய்வக் கோட்பாட்டில் உள்ள ஒரு குடும்பத்தில் அல்லது திரித்துவத்தை நம்பிக்கைகொண்ட குடும்பத்தில் பிறந்து வளர்ந்த பலர் இந்தக் கோட்பாடுகளை உதரித் தள்ளிவிட்டு ' லாஇலாஹ இல்லல்லாஹ் ' (உண்மையாக வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாறுமில்லை) எனும் திருக்கலிமாவை மொழிந்து இஸ்லாமிய கொள்கையை ஏற்றோர் பலர் உள்ளனர்.

பின்வரும் உருவகக் கதை இந்தக் கருத்தை விளக்குகிறது: ஒரு மனைவி தன் கணவனுக்காக ஒரு மீனை சமைத்தாள், ஆனால் அவள் அதை சமைப்பதற்கு முன்பு தலையையும் வாலையும் வெட்டினாள். தலையையும் வாலையும் ஏன் வெட்டினாய் என்று கணவன் கேட்டதற்கு. அவள், 'அப்படித்தான் என் அம்மா சமைப்பார்கள்.' அப்போது கணவர் தாயிடம், மீன் சமைக்கும் போது ஏன் வாலையும் தலையையும் வெட்டுகிறீர்கள்? என்று கேட்டார். அதற்கு அம்மா, எனது அம்மா அப்படித்தான் சமைப்பார் என்றார். அப்போது கணவன்

பாட்டியிடம் ஏன் தலையையும் வாலையும் வெட்டுகிறீர்கள்? என்று கேட்டார். அதற்கு அவள், 'எங்கள் வீட்டில் சமையல் பாத்திரம் சிறியதாக இருந்தது, பானையின் உள்ளே மீனைப் வைப்பதற்காகவே நான் தலையையும் வாலையும் வெட்ட வேண்டியிருந்தது.' என்று பதிலளித்தாள்.

உண்மையில் எமக்கு முந்தைய காலங்களில் நிகழ்ந்த பல நிகழ்வுகள் அக்காலத்திற்குரியவையாகவும் அக்கால காரணகாரியங்களுடன் பிணைக்கப்பட்டதாகவும் காணப்பட்டது என்பதே யதார்த்தமாகும். இதனை ஒரு வகையில் மேலே குறிப்பிட்ட கற்பனை கதை பிரதிபலிக்கலாம். இறந்த காலத்தில் வாழ்வதும், சூழல் வேறுபாடு மற்றும், கால மாற்றம் போன்றவை பற்றி சிந்திக்காமலும், கேள்வி கேட்காமலும் மற்றவர்களின் செயல்களை கண்மூடித்தனமாக பின்பற்றுவதும் மிகப் பெரும் மனித அவலம் என்பதே உண்மை.

அல்லாஹ் கூறுகிறான் :
"எந்த ஒரு சமூதாயத்தவரும், தம் நிலையயைத் தாமே மாற்றிக் கொள்ளாத வரையில், அல்லாஹ் அவர்களை நிச்சயமாக மாற்றுவதில்லை". (அர்ரஃத்:11).

## *இஸ்லாத்தின் தூது சென்றடையாதோரின் நிலை என்ன?*

இஸ்லாமியத் தூது கிடைக்கப் பெறாதோரை அல்லாஹ் ஒருபோதும் அநியாயம் செய்யமாட்டான். ஆனால் மறுமையில் அவர்கள் சோதனைக்குட்படுத்தப்படுவார்கள்.

இஸ்லாத்தை சரியாகப் புரிந்து கொள்ள வாய்ப்பு இல்லாத மனிதர்களுக்கு எந்த நியாயமும் கிடையாது, ஏனென்றால் நாம் குறிப்பிட்டது போல, அவர்கள் அறிவைத் தேடுவதிலும் சிந்திப்பதிலும் கவனயீனமாக இருக்கலாகாது. மேலும் இஸ்லாமியக் கொள்கை சரியானது எனும் சான்று நிறுவப்படுவதும் அதை திட்டப்படுத்திக் கொள்வதும் சிரமம் என்றிருப்பினும் ஒவ்வொரு நபரும் இந்த விடயத்தில் மற்றவரிடமிருந்து வேறுபட்டவர்கள். அறியாமை அல்லது சரியான சான்று கிடைக்காமை போன்றவற்றிற்கான முடிவு மறுமையில் இறை நாட்டத்துடன்

தொடர்பான விடயமாகும். இவ்வுலகத்தீர்ப்புகள் யாவும் அவை வெளிப்படையான அம்சங்களைப் பொறுத்ததாகும்.

அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியிருக்கும் பகுத்தறிவு, இயற்பூக்கம், தூதுத்துவம், இப்பிரபஞ்சத்திலும் அவர்களுக்குள்ளேயும் காணப்படுகின்ற அத்தாட்சிககள் ஆகியவற்றின் மூலம் நிறுவப்பட்ட சான்றாதாரங்களுக்குப் பின்; அவர்களின் மீது தண்டனை விதித்திருப்பதில் எவ்வித அநியாயமும் கிடையாது என்பதை அறிவுள்ளோர் உணர்வர். அல்லாஹ்வை அறிந்து அவனை ஒருவனாக ஏற்று இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளை கடைப்பிடித்து ஒழுகுவதே இவையனைத்திற்கு ஈடாக அவர்கள் செய்ய வேண்டிய குறைந்த பட்ச விடயமாகும். அப்படிச் செய்தால், அவர்கள் நித்திய நரக வாழ்விலிருந்து காப்பாற்றப்பட்டு, இம்மையிலும் மறுமையிலும் மகிழ்சியை- சுகத்தை- அனுபவிப்பார்கள். இது கடினமான ஒரு விடயம் என்று நீர் நினைக்கிறீரா? அல்லாஹ் படைத்த அடியார்கள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமை அவனை மட்டுமே வணங்குவதாகும். அல்லாஹ் தனது அடியார்களுக்கு செய்ய வேண்டிய கடமை, தனக்கு எதனையும் இணைவைக்காதவர்களை தண்டிக்காமல் இருப்பதாகும். ஆக இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக்கொள்வது ஒரு இலகுவான விடயம், அது எப்படி? ஒரு நபர் கூறும் சில வார்த்தைகள் அதனை உரிய முறையில் விசுவாசித்து அதன் படி செயலாற்றுவதாகும். இதனை செய்வதே நரகத்திலிருந்து பாதுகாப்புப்பெற போதுமான விடயமாகும். இது ஒரு நீதியான விடயம் என்பதை புரிந்து கொண்டீர்களா? சர்வவல்லமையுள்ள, நீதியுள்ள, மென்மை நிறைந்த, எல்லாம் அறிந்த அல்லாஹ்வின் தீர்ப்பு இதுவாகும். ஆகவே இஸ்லாமிய மார்க்கமென்பது தூய்மை மிக்கவனும் உன்னதமானவனுமான அல்லாஹ்வின் மார்க்கமாகும். அதனை ஏற்று சுபீட்சமாய் ஈருலகிலும் வாழ முயற்சிப்போமாக!. உண்மையான பிரச்சினை ஒரு நபர் தவறு செய்தாலோ அல்லது பாவம் செய்தாலோ கிடையாது. ஏனென்றால் தவறு செய்வது மனிதர்களின் இயல்பு. ஒவ்வொரு மனிதனும் தவறு செய்வோராவர். தவறு செய்பவர்களில் சிறந்தோர் மனந்திருந்தி வாழ்வோர் என்று நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால், பாவங்களைச் செய்வதில் எல்லை கடந்து சென்று அதில் விடாப்பிடியாக இருப்பதில்தான் பிரச்சினை இருக்கிறது. தவறு அல்லது குறை என்னவென்றால் அறிவுரை கூறப்பட்டும் அதற்கு செவிசாய்க்காது, அதன் படி செயலாற்றாது இருப்பதாகும். நினைவூட்டப்பட்டு அந்த நினைவூட்டலால் பயனடையாது

இருப்பதுமாகும். அல்லது அறிவுரை கூறப்பட்டு அதனை எடுத்து நடக்காது, படிப்பினை பெறாது இருப்பதும், மனந்திருந்தி வாழாது, இறை மன்னிப்புக்கோராது பிடிவாதத்துடன் கர்வம் கொண்டு நிராகரித்து விடுவதுமே மிகவும் இழிவான விடயமாகும்.

அல்லாஹ் கூறுகிறான் :
"நமது வசனங்கள் அவனுக்கு ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவனது இரு காதுகளிலும் செவிட்டுத்தன்மை இருப்பது போன்று, அதை அவன் கேட்காதவனாகப் பெருமையடித்து, புறக்கணித்துச் செல்கின்றான். நோவினை தரும் வேதனையைக் கொண்டு நபியே நீர் அவனுக்கு நன்மாரயம் கூறுவாராக". (லுக்மான் : 7).

### *வெற்றிக்கும் மீட்சிக்குமான வழி என்ன?*

**ستأتي ترجمته، وليس هذا مكانها**

ஆக வாழ்க்கைப்பயணத்தின் சிறப்பான மற்றும் பாதுகாப்பான முடிவும் மீட்சிக்கான சிறந்த வழியும் பின்வரும் இறைவசனங்களில் சுருக்கமாக குறிப்பிடப்படுகிறது. அல்லாஹ் கூறுகிறான் :

"பூமி தன் இறைவனின் ஒளியால் பிரகாசிக்கும்; வினைச் சுவடிகள் கொண்டு வந்து வைக்கப்படும், இறைத்தூதரும் அனைத்துச் சாட்சியாளர்களும் கொண்டு வரப்படுவார்கள். மக்கள் மத்தியில் முற்றிலும் நியாயமான வகையில் தீர்ப்பு வழங்கப்படும். அவர்களுக்கு எவ்வித அநீதியும் இழைக்கப்படமாட்டாது. மேலும், ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவன் புரிந்திருந்த செயல்களுக்கேற்ப முழுமையான கூலி வழங்கப்படும். மக்கள் செய்கின்ற அனைத்தையும் அல்லாஹ் நன்கு அறிகின்றான். (அந்நாளில்) நிராகரித்தவர்கள் கூட்டம் கூட்டமாக நரகத்திற்கு இழுத்துக் கொண்டு வரப்படுவார்கள்; அவர்கள் அங்கே வந்தவுடன் அதன் வாசல்கள் திறக்கப்படும்; அதன் காவலர்கள் அவர்களை நோக்கி: உங்களிலிருந்து (அல்லாஹ்வின்) தூதர்கள், உங்கள் இறைவனுடைய வசனங்களை உங்களுக்கு ஓதிக் காண்பிக் கிறவர்களாகவும், இந்த நாளை நீங்கள் சந்திக்க வேண்டுமென் பதைப் பற்றி உங்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களா கவும் உங்களிடம்

வரவில்லையா? என்று கேட்பார்கள்; (இதற்கு அவர்கள்) உண்மையில் அவர்கள் (வந்தார்கள்) என்று கூறுவார்கள்; எனினும் வேதனை வாக்கு நிராகரிப்பாளர்கள் மீது உண்மையாகி விட்டது. நரகத்தின் வாயில்களால் நீங்கள் நுழையுங்கள் என்று கூறப்படும். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். பெருமையடிப்போரின் தங்குமிடம் மிகவும் கெட்டதாகும். தம் இரட்சகனுக்கு அஞ்சியோர் சுவர்க்கத்தின்பால் கூட்டங் கூட்டமாகக் கொண்டு வரப்படுவார்கள். அவ்வாறு அவர்கள் அதனை நெருங்கியதும் அதன் வாயில்கள் முன்னரே திறந்து வைக்கப்பட்டிருக்க அதன் காவலர்கள் அவர்களை நோக்கி: 'உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும், நீங்கள் நல்லவிதமாக இருங்கள். என்றென்றும் நிரந்தரமாக தங்கியிருப்பதற்காக இதில் நுழைந்து விடுங்கள்(என்று அவர்கள் கூறுவார்கள்). தன் வாக்குறுதியை எங்களுக்கு உண்மையாக்கி வைத்த, சுவர்க்கத்தில் நாம் விரும்பும் இடமெல்லாம் சென்றிருக்க (அப்) பூமியை எங்களுக்கு உரிமையாக்கி வைத்த அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும் என்று கூறுவார்கள். எனவே நன்மை செய்தோரின் கூலி மிகவும் சிறந்ததாகும்". (அஸ்ஸுமர்: 69-74).

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை அவன் தனித்தவன் அவனுக்கு இணை இல்லை என்று சான்று பகர்கின்றேன்.

மேலும், நிச்சயமாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவனது அடியாரும் தூதருமாவார் என்றும் சான்று பகர்கின்றேன்.

அல்லாஹ்வின் தூதர்கள் உண்மை என சாட்சி கூறுகிறேன்.

சுவர்க்மும் நரகமும் உண்மையானவை என சாட்சி கூறுகிறேன்.

# உள்ளே......